# விளையாட்டுத் துறையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி














பல்கலைப் பேரறிஞர்

டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா

M.A., M.P.Ed., Ph.D., D.Litt., D.Ed., FUWAI








# விளையாட்டுத் துறையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி

**(முதல் பாகம்)**

பல்கலைப் பேரறிஞர்
தேசிய விருது பெற்ற பேராசிரியர்
டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா
**M.A., M.P.Ed., Ph.D., D.Litt., D.Ed. FUWAI**

விளையாட்டுப் பதிப்பகம்,
(விளையாட்டுத் தமிழ் இலக்கிய விழிப்புணர்வு மையம்)
8/1, போலீஸ் குவார்ட்டர்ஸ் ரோடு,
தி. நகர், சென்னை-17

# நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | - | **விளையாட்டுத் துறையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி** |
| மொழி | - | தமிழ் |
| ஆசிரியர் பெயர் | - | **டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா** |
| பதிப்பு | - | முதல் பதிப்பு, 1999 |
| நூலின் அளவு | - | கிரவுன் |
| படிகள் | - | 1200 |
| அச்சு | - | 12 புள்ளிகள் |
| பக்கங்கள் | - | 224 |
| நூல் கட்டுமானம் | - | அட்டைக்கட்டு |
| விலை | - | ரூ. 45/- |
| உரிமை | - | ஆசிரியருக்கு |
| தாள் | - | வெள்ளைத்தாள் |
| வெளியிட்டோர் | - | விளையாட்டுப் பதிப்பகம், 8/1, போலீஸ் குவார்ட்டர்ஸ் ரோடு, தி. நகர், சென்னை -17 ☎ 4342232 |
| அச்சிட்டோர் | - | கிரேஸ் பிரிண்டர்ஸ், 8, போலீஸ் குவார்ட்டர்ஸ் ரோடு, தி. நகர், சென்னை -17 ☎ 4332696 |

# முன்னுரை



தமிழுக்குப் புதிய துறை விளையாட்டுத் துறை. விளையாட்டு இலக்கியம் என்பது, ஏறத்தாழ தமிழ் மொழி தோன்றிய காலந்தொட்டு இந்த இருபதாம் நூற்றாண்டு வரை, பிறக்காத ஒரு புதிய துறை.

விளையாட்டுக்கு இலக்கியமா? என்று வினா எழுப்புவோர், விவரம் புரியாதவர்கள் என்றால்; வேண்டுமா? என்று கேட்பவர்கள் விதண்டா வாதம் செய்கிறவர்கள் என்று நாம் சொல்லக் கூடாது. ஏனென்றால், அதைப்பற்றி அறிந்து கொள்கிற ஆவலில் தான் அவர்கள் அப்படிப் பேசுகின்றார்கள்.

விளையாட்டு என்பது விளைந்த இயக்கமாகும். விளைந்த என்பதற்கு முதிர்ந்த, பண்பட்ட, பயன் தரத்தக்க என்றும் நாம் பொருள் கூறலாம்.

வாழ்க்கைக்குப் பயன்படுகின்ற நிற்றல், **நடத்தல், ஓடுதல், எறிதல், தாண்டுதல்,** வீசுதல் போன்ற இயக்கங்களையெல்லாம் செம்மைப்படுத்தி, **சீராக்கி, நேராக்கி, ஜோராக்கி**(ஜோர் என்றால் வலிமை), மக்களை **வளத்துடன் பலத்துடன், நலத்துடன்** வாழச் செய்வதுதான் விளையாட்டுக்களின் விழுமிய நோக்கமாகும்.

ஏனென்றால், தோன்றிய விளையாட்டுக்கள் எல்லாமே, விஞ்ஞானங்களின் அரிய தொகுப்பாகும். அறிவியல் நுண்மைகளின் ஆற்றல் மிகு சிறப்பாகும்.

வேதியல்; இயற்பியல்; உயிரியல்; உளவியல்; **தத்துவவியல்;** உடல் அமைப்பியல்; உடல் இயக்க இயல்;

உணவியல்; பாதுகாப்பு இயல்; மருத்துவ இயல் போன்ற வாழ்க்கைக்குப் பயன்படுகிற அத்தனை அறிவியல்களிலும் அடங்கியுள்ள ஆற்றல் மிகு கருத்துக்களையும், செயல் பாடுகளையும் சேர்த்துக் கொண்டுதான், விளையாட்டுக்கள் தோன்றியிருக்கின்றன, வளர்ந்து கொண்டிருக்கின்றன. மனித குலத்திற்கு ஆற்றுகிற மாபெரும் தொண்டாக விளையாட்டுக்கள் பணி செய்து வருகின்றன. பயன் பட்டுக் கொண்டிருக்கின்றன.

இலக்கியம் என்ற சொல்லை நாம் **இலக்கு+ இயம்** என்று இரண்டாகப் பிரிக்கலாம். இலக்கு என்றால் **விளக்கம்** என்றும் **வாழ்க்கை சொல்லும் குறி** என்றும் கூறலாம். **எண்ணம் என்றும், இலட்சியம் என்றும்** மேலும் பல பொருள்களைக் கூறலாம்.

**இயம் என்றால், சொல் என்றும், ஒலி என்றும், இயம்பு என்றும், வாத்தியம் என்றும் பொருள் கூறலாம்.** இந்த நான்கு பொருள்களிலும் உள்ள நயங்களை இப்பொழுது சேர்த்துப் பார்ப்போம்.

வாழ்க்கைக்கு விளையாட்டானது, வேண்டிய இலட்சியத்தைச் சொல்கிறது. வாழ்க்கைக்குத் தேவையான வழிமுறைகளை விளம்புகிறது. வாழ்வில் கிட்டும் பயன்கள் என்ன என்பதை ஒலித்துக் காட்டுகிறது. இதனையெல்லாம், ஒரு வித இசை லயத்தோடு, இசைத்துக் காட்டுகின்ற இசைக் கருவியாகவே இலக்கியம், நயத்தோடு இருக்கிறது.

ஆகவே, இலக்கியம் என்பது, வாழ்க்கையை நெறிப்படுத்த; வரைமுறைப்படுத்த; மகிழ்ச்சியில் ஆழ்த்த; மனித நேயத்தைக் கற்பிக்க; மாண்புகளை வளர்த்து விட உதவுவதற்காகவே, உருவாகி வந்திருக்கிறது.

விளையாட்டுத் துறையில் இருக்கின்ற வித்தியாசமான வேற்றுமைகளையெல்லாம் விதவிதமான மாட்சிமைகளை ஒற்றுமைப்படுத்தி உலகுக்குக் காட்டவே விளையாட்டு இலக்கியம் தேவைப்படுகிறது.

விளையாட்டுகளுக்கான விதிமுறைகள், விளையாட்டு நுணுக்கங்கள்; நுண் பயிற்சி முறைகள், நூதன அணுகு முறைகள் எல்லாவற்றையும் ஒருமுகப்படுத்தி, ஒன்று படுத்தி, உலகுக்குத் தெளிவுபடுத்தி உதவுவதுதான் விளையாட்டு இலக்கியத்தின் வேலையாகும்.

விளையாட்டைப் புரிந்தவர்களுக்கு மட்டும் அறிந்து கொள்ளும்படி எழுதினால், அது பாதிக்கிணறை தாண்டியது போலாகிவிடும். பாமரர்களும் படித்து அறிவது போலவும், மகிழ்வது போலவும் எழுதினால் தான், பயன்படும் நூலாக இருக்கும் என்று எழுத ஆரம்பித்த நாட்களில், எண்ணினேன்.

நாடகம் எழுதுவதிலும், நடிப்பதிலும், தயாரிப்பதிலும் ஈடுபட்டுக் கொண்டிருந்த போது, ஒரு முதிர்ந்த நாடகாசிரியர், என்னிடம் ஒருமுறை சொன்னதைத் தான், எனது நூல் எழுத்துக்கு ஆதாரமாக்கிக் கொண்டேன். வழிகாட்டுதலாகவும் வைத்துக் கொண்டேன்.

ஒரு நல்ல நாடக நடிகன் என்பவன், முகபாவம் காட்டி நடிப்பதால் மட்டும் உயர்ந்து விட முடியாது. நாடகம் பார்க்க வந்து கடைசி வரிசையில் அமர்ந்திருப்பவனுக்குக் கேட்பது போல, எவன் வசனம் பேசுகிறானோ, அவன்தான் கெட்டிக்கார நடிகன், நவரச நடிகன் என்று அவர் சொன்ன விளக்கத்தின் படியே, என் புத்தகத்தைப் படிக்க எடுக்கிறவர்கள் எந்தத் தரத்தினராக இருந்தாலும், அவர்களுக்குப் புரியும் படி, எளிய தமிழில், புரியும் தமிழில் எழுத வேண்டும் என்றே முயற்சித்தேன்.

இந்த முயற்சிதான், என் இலக்கிய இலட்சிய வேட்கைக்கும், வேள்விக்கும் வெற்றிப் படியாய் அமைந்து விட்டது.

முதன்முதலாக விளையாட்டு நூல்களை எப்படியெல்லாம், கஷ்டப்பட்டு எழுதினேன், எப்படியெல்லாம் கஷ்டப்பட்டுப் புத்தகமாக்கினேன், எப்படியெல்லாம், கஷ்டப்பட்டு விற்பனை செய்தேன் என்ற விவரங்களைத்தான், இந்நூலில் எழுதியுள்ளேன்.

இலக்கியத் துறையாக விளையாட்டுத் துறையை வளர்க்க, எனக்கு முன்னே முயற்சித்த ஆசிரியர்களும் இல்லை. என் சமகாலத்தில், யாரும் முயற்சிப்பதாகத் தெரியவில்லை. எதிர்காலத்தில் யாராவது வருவார்களா என்றால், அதற்கான அறிகுறிகள் இது வரை தென்படவில்லை.

புத்தகம் படிக்கும் அன்பர் ஒருவர், நூலகத்திற்குள் சென்று, ஒரு விளையாட்டைக் கற்க ஒரு புத்தகம் வேண்டும் என்று விரும்பி தேடுகிறபோது, அந்தப் புத்தகம் அந்த அலமாரியில் இருக்க வேண்டும் என்ற இலட்சிய முனைப்புடன் எழுதிய நூல்கள் தான், தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும், விளையாட்டுத்துறை வளர்ச்சிக்கும் பெரிதும் உதவியிருக்கிறது.

முயற்சித்தால் முடியும். முயற்சிகளுக்கு முதலில் தோல்வி கிடைப்பது போல் தோன்றினாலும், முடிவில் முடியும் என்பதை என் வாழ்வில் நான் கண்டு கொண்டிருக்கிறேன். கண்டதையும், கொண்டதையும் இங்கே விண்டிருக்கிறேன், விழுமிய முறையில் விவரித்திருக்கிறேன். அவ்வளவுதான்.

என் வாழ்க்கையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் எல்லாம்,

விளையாட்டுத்துறை நூல்களை எழுதுவதற்காகவே ஏற்பட்டன. ஆமாம். நானே ஏற்படுத்திக் கொண்டேன். சகிக்க முடியாத அவமானங்களை, தாங்க முடியாத அனுபவங்களை, எழுதுகிறபோது ஏற்படுகிற இடர்ப்பாடுகளை; ஏற்பட்ட கேடுகளை புத்தமாகப் பார்க்கிற போது, பெற்ற சுக அனுபவங்களையெல்லாம், இங்கே எழுதித் தந்திருக்கிறேன்.

இது என் வாழ்க்கை வரலாற்று நூல் அல்ல. விளையாட்டுக்காக வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்ட என் வாழ்க்கை நிகழ்ச்சிகளின் தொகுப்புதான்.

விளையாட்டு இலக்கிய வளர்ச்சிக்காக எழுத முன் வருகிற எதிர்கால இளம் எழுத்தாளர்களுக்கு ஒரு நம்பிக்கையை ஊட்ட, நல்ல எதிர்காலத்திற்கு வழிகாட்ட, எனது நூல் உதவும் என்று உங்களிடம் வழங்கியிருக்கிறேன்.

என் இலக்கிய நூல்களுக்கு, ஆதரவு தந்த தமிழ் மக்களுக்கு என் நன்றி. அழகுற அச்சிட்ட கிரேஸ் பிரிண்டர்சுக்கு என் நன்றிகளும் வாழ்த்துக்களும்.

லில்லி பவனம் அன்புடன்,

சென்னை - 17 **டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா.**

---

**குறிப்பு:** விளையாட்டுத் துறைக்கான தமிழ் இலக்கிய நூல்களை எழுதத் தொடங்கிய பொழுது ஆசிரியர் எடுத்த புகைப்படம் அட்டையில்.

# உள்ளே

# 1. நடந்ததெல்லாம் நன்மைக்கே

விளையாட்டுத்துறை தமிழ் இலக்கியமாக, நூறு நூல்களுக்கு மேல் எழுதியிருக்கின்றீர்களா? ஆச்சரியமாயிருக்கிறதே! என்று என்னிடம் வியந்து வினா எழுப்பியவர்கள் ஏராளம்.

ஏனென்றால், எனக்கே இன்னும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது•அவர்களுக்குரிய கேள்விக்கு, ஒரு புன்சிரிப்புடன் பதிலை முடித்துக் கொள்வேன்.

ஆனாலும், என் உள்ளத்தில் இருந்து, திரிந்து, கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கிற கேள்வியோ! எப்படி நூறு நூல்களுக்கு மேல் எழுத முடிந்தது? என்கின்ற கேள்விதான்.

இந்த விந்தையான வினாவுக்கு விடையளிக்க வேண்டும் எனறால், நான் முப்பதுஆண்டுகளுக்கு முன்னதாகச் சென்று, சிந்தித்துப்பார்க்க வேண்டியிருக்கிறது.

இந்த முப்பது ஆண்டுகள், எவ்வளவு விரைவில், வந்து போய் முடிந்து விட்டிருக்கிறது?

இப்பொழுதுதான் எழுத ஆரம்பித்தது போல இருக்கிறது! அதற்குள்ளாகவா முப்பது ஆண்டுகள் முடிந்து போயின!

இந்த எழுத்துப் பணி எப்படி சாத்திய மாயிற்று?

என்னால் முடிகின்ற காரியமா இது ? இல்லையே!

தனி ஒருவனால் ஆகக்கூடிய வேலையா இது? முடியாதே!

வெறுப்பாகப் பார்த்த விளையாட்டுத் துறையினர்!

வியப்பாகப் பார்த்த பொதுமக்கள்!

நெருப்பாக நினைத்த தொழில் துறையினர்.

குறிப்பாகப் பார்த்துஉதவிய குணக் குன்றுகள்,

என் வழி நெடுக வந்த ஏராளமான எதிர்ப்புகள்.

இவ்வளவையும் பவ்யமாக ஏற்றுக்கொண்டு, நான் நடந்து வந்த பாதையில்பூத்த மலர்கள்தாம், விளையாட்டுத்துறை இலக்கியமாக, இன்று எழில் மணம் எல்லோரிடமும் வீசிக் கொண்டிருக் கின்றன.

என்னிடம் எழுதவேண்டும் என்கிற ஒரே நினைப்பு. இரவு பகல் எனறு பாராமல் உழைத்த உழைப்பு. எழுதி ஆக வேண்டுமே என்று என்னுள்ளே முகிழ்த்துக் கொண்டிருந்த சிலிர்ப்பு.எந்த நேரத்திலும் எழுத்தின் மேலேயே குறியாக இருந்த துடிப்பு.

இவை மட்டுமே, இப்படி இலக்கிய நூல்களைக் குவித்துவிட்டது என்று சொன்னால், என்னைப்போல் ஒரு அகம்பாவம் கொண்டவன் இந்தஉலகில் வேறு யாருமே இருக்கமுடியாது.

ஏனென்றால், இலக்கிய நூல்களை எழுதுவதற்கு, நான் ஒரு கருவியாகத்தான் இருந்திருக்கிறேன். என்னுள்ளே இருந்து இயக்கிய, இயக்கிக் கொண்டிருக்கிற ஒரு தனிப்பெரும் சக்தியை, நான் எப்படி மறந்துவிடக் கூடும்?

எனக்கு உள்ளேயும் வெளியேயும் இருந்து கொண்டு, இயக்கி வைத்த, என்னை ஏற்றமுறச் செய்திருக்கிற, அந்த

அரிய சக்தியை, பெயரிட்டு எனக்கு அழைக்கத் தெரியாத, அந்த பெரிய சக்தியை, நான் கூறித்தானே ஆக வேண்டும்.

இயற்கையை நடத்திக் கொண்டிருக்கிற அந்த இனிய சக்தி, என்னை எந்தப் பக்கமும் போக விடாது; என் விருப்பத்திற்கும்கூட வாழ்ந்து கொள்ள விடாது. வழி நடத்தி வந்திருக்கிற விந்தைதான், என் வாழ்நாட்கள் முழுவதும் நடந்திருக்கிறது. இன்றும் நடந்துகொண்டிருக்கிறது.

நினைத்தாலே நெஞ்சம் சிலிர்த்துக் கொள்கின்ற அளவுக்கு, சலித்துக்கொள்கின்ற அளவுக்கு, ஓடுகிற தேர்ச்சக்கரத்திற்குப் போடுகிற முட்டுக்கட்டை போல,நிகழ்ச்சிகள் நடந்தன. நடந்தே தொடர்ந்தன.

எனக்கு ஏற்படுகின்ற விருப்பங்கள் எல்லாம், ஏற்பட்ட பல திருப்பங்களால் திசை மாறினவே தவிர, எனது இலட்சியப் பணியான விளையாட்டுத் துறையில் இலக்கியம் படைக்கும் பணியானது வேறுபடவும் இல்லை. மாறுபடவும் இல்லை. கூறுபடவும் இல்லை. கொள்கை மாறவும் இல்லை.

இங்கே நான் குறிப்பிடப் போகின்ற முக்கியக் கருத்தானது, என்னை வாழ்வித்து, வழி நடத்தி வைத்த இறைவனது தனிப்பெருங்கருணையைத்தான்.

மக்களால் விரும்பிப் படிக்கப் படுகின்ற கதைகள், நாவல்கள், குற்றவியல் கதைகள் போன்ற துறைகளில் பல புத்தகங்களை எழுதி வைத்துக்கொண்டு, அவற்றில் ஒன்றைக் கூட நூலாக்க முடியாமல், நொந்து வெந்து கிடந்த எழுத்தாளர்கள் பலரை, எனக்கு நன்றாகவே தெரியும்.

தடைகளையும் உடைத்தெறிந்து விட்டு. கடன்களை வாங்கி, கஷ்டப்பட்டு நூல்களைப் போட்டு விட்டு, விற்க முடியாமல் வேதனையடைந்த பல எழுத்தாளர்களை, எனக்கு நன்றாகவே தெரியும்.

தமிழ் நாட்டில் புத்தக வியாபாரம், தலை எழுத்து போலத்தான் நடக்கும். ஓராயிரம் புத்தகங்களைக் கூட விற்பதற்கு பல ஆண்டுகள் பரபரப்புடன் அலைந்து திரிந்திட வேண்டிய அவல நிலை தான். தமிழ்ப் புத்தகங்களைப் பொறுத்த வரை. அதுவும் தெரியும்.

பதிப்பாளர்கள் புத்தகங்களைப் போட்டு விட்டு, பதை பதைத்துக் கொண்டு வாழ்கின்ற பரிதாபநிலையும் எனக்கு நன்றாகவே தெரியும். புரியும்.

விற்க முடியும் என்று பதிப்பிக்கின்ற நூல்கள் கூட விற்பனையாகாமல் முடங்கிக் கிடக்க, பதிப்பாளர்கள் அடங்கிப் போயிருக்கும் நிலையில், விளையாட்டுத்துறையில் நூல்கள் வந்தால், விற்பனையாகுமா? பைத்தியக்காரத்தனமாக இல்லையா? எல்லோருமே என்னைக் கேட்டனர்.

இந்தக் கேள்விக்குப் பதில் கூறுவதற்கு முன்பாக, விளையாட்டுத்துறை என்றாலே, என்ன நிலைமை அந்த நாளில் இருந்தது என்பதையும் நாம் அறிந்து கொண்டாக வேண்டும்.

விளையாட்டு என்றாலே முகம் சுளிக்கின்ற மக்கள்.

விளையாட்டு என்றாலே வீதியிலே காட்டுகின்ற வித்தைகளுக்கு சற்றும் வித்தியாசமில்லாத விநோத ஓட்ட ஆட்டங்கள் என்று விமர்சிக்கின்ற மக்கள், விலாநோக சிரிக்கின்ற மக்கள்.

விளையாட்டைப் பற்றிப் பேசினாலே, ஆங்கிலத்தில் பேசினால்தான் கௌரவம் பெருமை என்றெல்லாம் பேசப்பட்ட காலக்கட்டத்தில் தான், நான் தமிழில் எழுதுகிற என் எழுத்துப்பணியைத் தொடங்கினேன்

விளையாட்டுத் தொடர்பான கூட்டங்கள், கருத்தரங்கங்கள் நடைபெறுகிறபொழுது, விளையாட்டை அறிந்தவர்கள்

ஆங்கிலம் தெரியாத காரணத்தால், தமிழ் மட்டுமே பேசத் தெரியும் என்கிற ஒரே காரணத்தால், வெளியே பேச வெட்கப்பட்டுக் கொண்டு, ஆமையாக, ஊமையாக விளையாட்டில் கெட்டிக்காரர்கள் எல்லாம் அடங்கிக் கிடந்த காலக் கட்டத்தில் தான், நான் என் விளையாட்டுத் தமிழ் இலக்கியப் பணியைத் தொடங்கினேன்.

விளையாட்டு பற்றி நான் தமிழில் எழுத முயற்சிக்கிறேன் என்று கேள்விப்பட்ட உடன், என்னுடன் பணியாற்றிய கல்லூரி ஆசிரியர்கள் கூட என்னைக் கண்ட பொழுதெல்லாம்: கண்ட மாதிரி, விளையாட்டை அறியாத, அதே நேரத்தில், ஆங்கிலம் தெரிந்த காரணத்தால், மேடையிலே பேசி, மக்களிடம் மரியாதை பெற்ற, மேனா மினுக்கிகள் அதிகம்வாழ்ந்த அந்தக் காலத்தில் கலாட்டா செய்தனர் சிலர், நான் இளைஞன், வயதில் சிறியவன் என்ற காரணத்தை வைத்துக் கொண்டு, செல்லமான கெட்டவார்த்தைகளுடன், எச்சரிக்கை செய்தனர்.

நீ எங்கே உருப்படப் போகிறாய் என்று சிலர் சாபம் கொடுத்து சந்தோஷப்பட்டனர்.

ஆக, என் எழுத்தின் ஆரம்பமே, வசை மொழிகளால், வம்படி வார்த்தைகளால் களை கட்டிக் கொண்டது. சமயம் வருகிறபோது, அந்த சம்பவங்களை கோடிட்டுக் காட்டுகிறேன்.

## ஒரு சிறு முன்னுரை

இந்த இலக்கிய வளர்ச்சி எப்படி தொடங்கியது? எப்படி வளர்ந்தது என்பது தான், இந்தத் தொடரின் முக்கிய பகுதியாகும்.

என் வாழ்வோடும் தாழ்வோடும் விளையாட்டுத்துறை தமிழ் இலக்கியம் இரண்டறக் கலந்து கொண்டிருப்பதால், என்

வாழ் நாட்களில் ஏற்பட்ட சில சம்பவங்களைப் பற்றியே எழுதப் போகிறேன் என்று எண்ணி விடாதீர்கள்.

இது என் சுயசரிதை அல்ல.

என் முனைப்புக்கும் முயற்சிக்கும் ஏற்பட்ட இடையூறுகள். அவற்றை நான் எப்படி சமாளித்தேன்: என்னென்ன வழிகளில் இலட்சியதாகத்தைத் தணித்துக் கொண்டேன் என்பதாகவே இனி வரும் பகுதிகள் அமைந்திருக்கும்

**மூன்று குறிப்புகள்**

இந்தப் புதிய தொடரில் மூன்று கருத்துக்களை, முக்கியமாக அழுத்தந் திருத்தமாக, குறித்துக் காட்ட விரும்புகிறேன். எனக்கு ஏற்பட்ட அனுபவங்களின் சாரமாகவே, நான் இப்படிப்பட்ட ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன்.

1. இலட்சியம் என்று ஒரு குறிக்கோளை மேற்கொண்ட பிறகு, அங்கே உறவுக்கும் பிரிவுக்கும் இடமில்லை. இன்பத்திற்கும் துன்பத்திற்கும் பேதமில்லை. இரவும் பகலும் இந்தக் குறிக்கோளே இதயத்தில் இடம் பெற்றுக் கொண்டிருப்பதால், பிறரது ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆளாக வேண்டியிருக்கும். கருமே கண்ணாயினார் என்ற பாடல் பொய்யாக இருக்காது. உண்மைதான் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளலாம்.

2. குறிக்கோளில் வெற்றி பெற உழைப்பு தான் முக்கியம். உழைப்புக்கு உடனே பலனும் கிடைத்துவிடாது. எவ்வளவு காலம் உழைக்க வேண்டும் என்ற எல்லையும் கிடையாது. உழைத்துக் கொண்டேயிருக்க வேண்டும் அதாவது, உழைப்பே வாழ்க்கையாகி விடுகிறது.

பிறகு, அதற்கென்று பலன் எதுவும், வேண்டாமா? என்றால் தேவையிருக்காது உழைப்பும் மேற்கொள்கின்ற

முயற்சியுமே, மனதிருப்தியை அளித்து விடுகிறது.

வெற்றி என்பது தானே பலன், அந்தப் பலனை இறைவன் கொடுப்பான் என்ற நம்பிக்கையில் இறைவனிடம் விட்டு விடவேண்டும்.

அப்பொழுதுதான், தோல்வியின் துயரமோ, துன்பமோ, எதிர்பார்த்தது கிடைக்கவில்லையே என்று ஏக்கமோ எழாது. நிதமும் நிம்மதியாக உழைக்கும் தெம்பும் திறமையும் சோர்வே வராமல், தொடர்ந்து கிடைக்கும்.

இலட்சிய வாதிகள் சோர்ந்து போகாமல் உழைப்பது இதனால் தான் என்ற ரகசியத்தைப் புரிந்து கொண்டிருக்கிறேன்.

3. நாம் எதிர்பார்ப்பதற்கு எதிர்மாறாகவே எல்லாம் நடக்கும். இதற்குப் பெயர் தான் வாழ்க்கை, நாம் சிந்திக்காத சந்தர்ப்பங்களும், எதிர்பார்க்காத சமாச்சாரங்களும் நிறையவே நடக்கும். வாழ்க்கையில்,, நல்ல இலட்சியத்திற்கு ஆதரவா கிடைத்து விடும்? எதிர்பார்ப்பது பேதமை அல்லவா!

ஆகவே, எது நடந்தாலும், அது நமது நன்மைக்காகவே நடக்கிறது என்ற, மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இப்படி ஏற்றுக் கொள்கிற மனப்பக்குவத்தை நான் பெற்றதால்தான் வளர்த்துக் கொண்டுள்ளதால் தான், படுக்கையில் படுத்தவுடன் உறங்குகிற அமைதியான வாழ்க்கையை, என்னால் இன்றும் அனுபவிக்க முடிகிறது.

நல்ல இலட்சியத்துடன் தினம் உழைத்து மகிழ்கிற ஒருவரை **நாள் என் செய்யும்! கோள் என் செய்யும்? சுழன்று போகின்ற காலங்கள் தான் என் செய்யும்?**

இறுதியாக ஒன்று.

இந்த வரலாற்றுப் பகுதியில் இடம் பெறுகின்றவர்களின் பெயர்களை நான் மிகவும் பெருமையுடன் தான் எழுதுகிறேன். ஒரு சிலர் எனக்கு எதிர்மாறாக நடந்தார்கள் எனறு எண்ணி, நான் கோபப்பட்டுக்குமுறிய நாட்கள் உண்டு.

அது எவ்வளவு அறியாமை என்று இப்போது புரிகிறது

அவர்கள் எனக்கு எதிராக வந்ததால் தான், அவமானம் நேரிடும்படி பேசியதால் தான், என்னால் இந்த அளவுக்கு சாதிக்க முடிந்தது.

ஆகவே, அப்படிப்பட்டவர்களையெல்லாம் நன்றியுடன் நான் நினைத்துக் கொண்டே குறிப்பிட்டு எழுதுகிறேன்.

இங்கு **நான்** என்று குறிப்பிடுவது, என்னைக் குறித்துக் காட்டத்தான், கர்வத்தால் தற்பெருமையுடன் அல்ல என்பதை வாசகர்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

# 2. நயமான ரயில் பயணம்

**1**960 ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ஒருநாள்.

மதியம் 2 மணி இருக்கும்.

காரைக்குடி போகின்ற ரயில், திருச்சி ஜங்ஷன் பிளாட்பாரம் ஒன்றில் நின்று கொண்டிருக்கிறது.

உள்ளே வாருங்களேன்! என்ற ஓர் அழைப்பு, இனிய குரலாக என்னை அழைக்கிறது.

ஏறெடுத்துப் பார்க்கிறேன்.

சிரித்த முகத்தோடு ஒருவர் கை அசைத்து அழைக்கிறார். திகைப்பும் மகிழ்ச்சியும் கலந்த உணர்வுடன், ரயில் பெட்டிக்குள் ஏறுகிறேன்.

என் முகபாவத்தைப் புரிந்து கொண்ட அவர், என்னை உங்களுக்கு ஞாபகம் வரவில்லை என்று நினைக்கிறேன். இவ்வளவு சீக்கிரத்தில் மறந்து விடுவீர்கள் என்று நான் நினைக்க வில்லை என்று சிரித்துக் கொண்டே பேசியவர்... என்னைப் பார்த்தார்.

நீங்கள் பயப்படவேண்டாம், நானே யாரென்று சொல்லி விடுகிறேன். என் பெயர் **குழந்தை நாதன்,** அழகப்பா கலைக்கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருக்கிறேன்.

ஐயா மன்னிக்கவும், தெரியாமல் இல்லை, திடீரென்று சந்திப்பு. திகைப்பினால், என்று தடுமாறினேன். ஓராண்டுக்கு மேலாகி விட்டதே... என்று அசட்டுச் சிரிப்பு சிரித்தேன்.

பரவாயில்லை என்று என்னை கையைப் பிடித்து அருகில் அமர்த்திக் கொண்டு, தான் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஆரஞ்சு சுளைகளை என்னிடம் தந்தார்.

காரைக்குடி அழகப்பா கலைக்கல்லூரியில் உடற்கல்வித் துறை இயக்குநர் ஒருவர், தன் வேலையை ராஜினாமா செய்துவிட்டு, சொந்த ஊருக்கு சென்று விட்டார். அவரைத் தான் உங்களுக்கு நன்றாகத் தெரியுமே! திருவாளர் ராமதாஸ் என்றார்.

தெரியும். இப்பொழுது நினைவுக்கு வருகிறது. உடற்கல்வித் துறையில் பணியாற்றுகின்ற தகுதியும் திறமையும் நிறைந்தவராயிற்றே! அவர் மாநில அளவில் கூடைப் பந்தாட்டப் போட்டியிலே விளையாடியவராயிற்றே! அவரைப் பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்டேயிருந்தேன்.

அவரைப் பற்றி இன்னும் ஒரு சிறப்புக் குறிப்பு என்றார் சிரித்துக் கொண்டே!...

என்ன? என்றேன் சற்று விநோதமான ஆச்சரியத்துடன்.

உங்களைப் போல நன்றாகக் கவிதை எழுதக் கூடியவர் என்றார்.

அப்படியா என்று ஆச்சரியப்பட்ட நான். அவர் நன்றாகக் கவிதை எழுதக் கூடியவர் என்பதை ஒப்புக் கொள்கிறேன். என்னை போல என்றீர்களே! அதெப்படி உங்களுக்குத் தெரியும் என்ற கேள்வியைக் கேட்டேன்.

உங்களுக்கும் எனக்கும் பழக்கமே, நீங்கள் எழுதிய கட்டுரையின் மூலமாகத்தானே வந்தது. அந்த நினைவு இன்னும் என்னிடம் பசுமையாக இருக்கிறது கூறட்டுமா?

என்றார். குழந்தை நாதன் அவர்கள்.

அவரது நினைவாற்றலை வியந்தபடி மௌனமானேன்.

நீங்கள் அழகப்பா உடற்கல்விக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது, உங்கள் கல்லூரி நடத்திய கட்டுரைப் போட்டிகளின் தாள்கள் எல்லாம், என்னிடம் தான் மதிப்பெண்கள் போட தரப்பட்டன. அந்தக் கட்டுரைகளில் ஒன்று, மிகுந்த அழகு தமிழில், சிறந்த கவிதை நடையில் எழுதப் பட்டிருந்தது. அந்தக் கட்டுரைக்கு நான் முதல் பரிசுக்குரிய மதிப்பெண்கள் கொடுத்ததோடு மட்டும் நின்று விடாமல், கட்டுரை எழுதிய மாணவர் யார் என்பதையும் அறிந்து கொண்டு, உங்களை நான் வந்து சந்தித்தேன். இந்த நிகழ்ச்சியாவது உங்களுக்கு நினைவுக்கு வருகிறதா என்றார்!

ஆமாம்! உங்களை நான் சந்தித்தபோது, நீங்கள் கேட்ட முதல் கேள்வியும் நினைவுக்கு வருகிறது என்றேன்.

சிரிப்புடன் என்னைப்பார்த்தார்.

இவ்வளவு நல்ல தமிழ் எழுதுகிற நீங்கள், ஏன் விளையாட்டுத்துறைக் கல்வியைப் பயில வேண்டும்? இப்பொழுதும் ஒன்றும் நாளாகி விடவில்லை. வந்து கலைக் கல்லூரியில் தமிழ் எம்.ஏ.வகுப்பில் சேர்ந்து கொள்ளுங்கள் என்றீர்கள்.

உங்கள் அழைப்புக்கு நன்றி தெரிவித்து விட்டு, விருப்பமான விளையாட்டுத்துறை பயிற்சியையே முடித்து விடுகிறேன் என்றேன் நான், என்றும் நினைவுபடுத்திக் கூறினேன்.

பரவாயில்லையே! தமிழ் படிக்கத்தானே உங்களை நான் அழைத்தேன். இப்பொழுது அதே கல்லூரிக்கு, உடற்கல்வி இயக்குநராக வருகிறீர்களே! **நல்ல ஆசைகள் நாட்களா**

**னாலும் நிச்சயம் நிறைவேறி விடும்** என்ற மொழி, பொய்க்கவில்லை பார்த்தீர்களா என்றார்.

குழந்தைநாதன் அவர்களின் சரளமான பேச்சு, குற்றால அருவியாகக் கொட்டிக்கொண்டிருந்தது. புதுக்கோட்டை ரயில் நிலையம் வந்த பிறகு தான், எங்கள் பேச்சின் சுவாரஸ்யம் புரிந்தது.

மாலை சிற்றுண்டியை முடித்துக் கொண்டோம். ரயில் தன் பயணத்தை தொடங்கியது. நாங்களும் எங்கள் பயணத்தை தொடர்ந்தோம்.

இந்த உடற்கல்வித் துறையில் ஈடுபடும் வாய்ப்பு உங்களுக்கு எப்படி ஏற்பட்டது என்று என்னைப் பற்றி தெரிந்து கொள்ள அவர் முயன்றார்.

இன்னும் ஒரு மணி நேரம் பயணம் செய்தாக வேண்டுமே! காரைக்குடி போகின்ற வரையில் பேச்சு தொடரும் என்று அவர் எதிர்பார்ப்புக்கு ஏற்ப, நான் காரைக்குடிக்குப் படிக்கச் சென்ற முதல் திருப்பத்தைப் பற்றி, அவரிடம் பேச ஆரம்பித்தேன்.

1958 ம் ஆண்டு நான் பி.ஏ இறுதி வகுப்பு மாணவன். திருச்சி ஜமால் முகமது கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது, கல்லூரிகளுக்கு இடையே ஓடுகளப் போட்டிகளை நடத்துகிற பொறுப்பை, ( INTER COLLEGIATE SPORTS) அழகப்பா கலைக்கல்லூரி ஏற்றிருந்தது.

அப்பொழுது சென்னை மாநிலத்திலுள்ள கல்லூரிகள் அனைத்தும், சென்னை டிவிஷன் மதுரை டிவிஷன் என்று இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன.

ஏறத்தாழ 30 கல்லூரிகளுக்கு மேல் பங்கேற்ற பெரிய போட்டிகள் அது. திருச்சி, தஞ்சை, ராமனாதபுரம், மதுரை,

திருநெல்வேலி போன்ற மாவட்டங்களி்ல் உள்ள கல்லூரிகள் அனைத்தும் இடம் பெற்ற போட்டிகளுக்கு, ஜமால் முகமது கல்லூரியின் சார்பாக நான் நீளம் தாண்டல், மும்முறைத் தாண்டல், உயரம் தாண்டல் போன்ற போட்டிகளில் பங்கு பெற்றேன்.

முதல் நாள் போட்டிகளில், நீளத்தாண்டும் போட்டியில் 21 அடிக்கு மேல் தாண்டி முதல் பரிசு பெற்றதுடன், புதிய சாதனையையும் நான் படைத்திருந்தேன். அதனால் மற்றவர்கள் பார்வையிலும், பேச்சிலும் என் பெயர் இடம் பெற்றுக் கொண்டது.

அடுத்த நாள் மும்முறைத்தாண்டும் போட்டி ( Hop Step & Jump) இடம் பெற்றபோது, அதில் முக்கிய திருப்பமும் நிகழ்ந்தது.

அழகப்பா கலைக் கல்லூரியிலிருந்து பங்கு பெறும் சிறந்த வீரன் எல்.சி. மகேந்திரன் என்பவர் தான், இந்தப் போட்டியில் முதலாவதாக வருவார். அவரை வெல்ல இந்த கல்லூரிகளுக்கிடையே யாரும் இல்லை. என்பதாகவும் பேசிக் கொண்டார்கள்.

அது மட்டுமல்லாமல், அந்த வீரன் படிக்கும் கல்லூரி தானே போட்டி நடத்துகிற கல்லூரியாக இருக்கிறது, அதனால் அந்த வீரனுக்குக் கிடைத்த மரியாதையும், உற்சாக வரவேற்பும் கொடி கட்டிப் பறந்தன.

இதற்கிடையிலே, என்னுடைய பெயரும் கலந்து கொண்டது. போட்டி ஆரம்பமாயிற்று. நிகழ்ச்சி வர்ணனையாளர், இந்த போட்டி பற்றியே அதிகமாக விமர்சித்துக் கொண்டிருந்தார்.

முதலில் மகேந்திரன் தாண்டினார். அவர் தாண்டிய தூரம் 42 அடி. பலர் தாண்டிய பிறகு என் முறை வந்தது. நான் வந்து

தாண்டிய பிறகு அளந்த போது 44 அடி என்று காட்டியது. வர்ணனையாளரின் விமர்சனம் என் பெயரை விமரிசையாக வருணித்தது. பார்வையாளர்கள் இடையே பரபரப்பு.

மகேந்திரனுக்கு வேகமும் உற்சாகமும் ஊட்டக் கூடிய குரல்கள். மாணவர்கள் கூட்டத்திலிருந்து விண்ணதிர எழுந்தன. விடுவாரா அவர்! அனுபவம் உள்ள வீரனாயிற்றே!

இரண்டாவது தாண்டும் வாய்ப்பில் அவர் தாண்டிய தூரம் 45 அடி 2 அங்குலம், அவரும் வெற்றிப் புன்னகையில் திளைத்தார்.

எனது இரண்டாவது வாய்ப்பு வந்தது. எனக்கும் பார்வையாளர்கள் பகுதியிலிருந்து உற்சாகமான கரகோஷம். என்னையறியாமல் நானும் தாண்டினேன். இதுவரைக்கும் நான் கற்பனை செய்து கூட பார்க்காத தூரம் 44 அடி 10 அங்குலம்.

இப்பொழுது எனக்குள்ளே போராட்டம். என்ன செய்வது? புதிய முயற்சி வெற்றி பெற்றால் புதிய சாதனை.

எந்த பரபரப்புக்கும் ஆளாகாத என் சுபாவம், இப்பொழுது அலைபாய ஆரம்பித்தது. நானும் ஒரு முடிவெடுத்துக் கொண்டேன்.

முயற்சித்துப் பார்ப்போமே! வந்தால் தேர்- வராவிட்டால் அறுந்து போவது வடக்கயிறுதானே.

மூன்றாவது முயற்சியில், நான் தாண்டுவதற்காக ஓடினேன். தாண்டும் பலகையில் இடது காலை வைத்து ஊன்றிய போது, என் கால்கள் வழுக்கி, மணற்பகுதியை நோக்கி தடுமாறி விழுந்து, உருண்டு போனேன்.

நல்ல அடி, மணற்பரப்பிலே மல்லாந்து கிடந்தேன். நல்ல வேளை! எனக்கு நினைவு தப்பிப் போய் விடவில்லை.

விழித்துக்கிடந்தாலும், எழுந்திருக்க முடியவில்லை. தொடைத்தசை பிடித்துக் கொண்டது. (Muscle Pull).

என்னை ஒருவர் அப்படியே அள்ளி தம் கைகளில் தூக்கிக் கொண்டுபோய், படுக்கை ஒன்றில் கிடத்தி, தசைப் பிடிப்பு போக மசாஜ் செய்து கொண்டிருந்தார்! பரவாயில்லை. கவலைப்படாதே! நீ விழுந்து விடாமல் தாண்டியிருப்பாய் உனது காலணியில் உள்ள ஆணி ஒன்று கழன்று போனதால்தான், நீ தவறி விழுந்து விட்டாய். கவலைப் படாதே என்று எனக்கு ஆறுதலும் தைரியமும் கூறிக் கொண்டேயிருந்தார்.

அவர் யாரென்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். **ராப்சன் அழகப்பா உடற்கல்விக் கல்லூரி முதல்வர்** என்றார். வணக்கம் செய்தேன்.

உனக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. வாழ்க! என்று என்னை வாழ்த்தி விட்டுச் சென்றார்.

உள்ளூர் வீரன் ஒருவனை வெல்லும் வாய்ப்பு எனக்குக் கை நழுவிப் போனாலும், பார்வையாளர்களிடையே என் பெயர் பரவிக் கொண்டது பற்றி எனக்கு மகிழ்ச்சி தான்.

அந்தப் போட்டியைப் பார்த்தவர்களில் நானும் ஒருவன் உங்களுக்கு அதிர்ஷடம் இல்லை என்று நான் என் நண்பர்களிடையே பேசியது. எனக்கு நினைவுக்கு வருகிறது என்றார் குழந்தைநாதன்.

அதிர்ஷ்டம் இல்லை என்றீர்களே? அது தான் இல்லை. என்னுடைய அதிர்ஷ்டம் தான். நான் அந்தப் போட்டியில் வெற்றி பெறாமல் விழுந்து கிடந்தது என்றேன்.

அதெப்படி என்றார்!

என் வாழ்வில் ஏற்பட்ட முதல் திருப்பம் இதுதான். இந்தத் திருப்பம் தான், நான், இங்கே இன்றைக்கு இன்டர்வியூக்கு வர வாய்ப்பளித்தது என்றேன்.

எப்படி என்றார் குழந்தைநாதன் அவர்கள்!

அவர் முகத்திலே ஆச்சரியம் விளையாடிக் கொண்டிருந்தது.

# 3. விழுந்ததும் எழுந்ததும்

**தா**ண்டும் போது தவறி விழுந்ததற்கும், வாழ்வில் உயர்ந்ததற்கும் எப்படி பொருத்தம் இருக்கிறது. நீங்களோ அதை வாழ்வில் ஏற்பட்ட பெரிய திருப்பம் என்கிறீர்கள் என்று மீண்டும் குழந்தைநாதன் கேட்டார்.

காரைக்குடி டிவிஷன் போட்டியில் மகேந்திரனிடம் தோற்ற நான், மூன்று மாதம் கழித்து சென்னையில் நடைபெற்ற இன்டர் டிவிஷன் போட்டியில், மகேந்திரனை வென்று முதலிடம் பெற்றேன்.

காரைக்குடியில் மகேந்திரனை வெல்ல முடியாமற் போன நான், சென்னையில் ஜெயித்த செய்தி, டாக்டர் ராப்சனுக்குக் கிடைத்திருக்கிறது.

அந்த ஆண்டு டிப்ளமோ படிப்புக்கு, எனது நண்பர் டென்னிசன் அவர்கள் விண்ணப்பித்த போது, என்னையும் விண்ணப்பிக்குமாறு டென்னிசனிடம் சொல்லியிருந்தார்.

நானோ தமிழ் இலக்கியம் பயிலவேண்டும் என்ற தணியாத வேட்கை கொண்டவனாக இருந்தேன். கவிதை, நாடகம் என்றால், கல்லூரியில் நானில்லாமல் எந்த நிகழ்ச்சியும் இல்லை என்ற நிலையும் இருந்தது. அதனால், நான் சென்னையில் உள்ள பச்சையப்பன் கல்லூரிக்கு மனு செய்திருந்தேன். சேர்வதும் நிச்சயமாகி இருந்தது.

அப்பொழுது பச்சையப்பன் கல்லூரி உடற்கல்வி

இயக்குநராக இருந்தவர்., எம்.ஏ. இலக்கிய வகுப்பில் இடம் வாங்கி தருவது என் பொறுப்பு என்று உறுதி கூறியிருந்ததால், சென்னை சென்று படிக்கும் ஆர்வத்துடன், பி.ஏ. இறுதித் தேர்வு எழுதினேன்.

பி.ஏ.யில் முதல் வகுப்பில் தேறி விடுவேன் என்ற நம்பிக்கையோடு தேர்வு எழுதிய எனக்கு, ஆங்கிலத்தில் மதிப்பெண்கள் ஓரிரண்டு குறைந்ததால், தோல்வியே கிடைத்தது.

ஆகவே அந்த ஆண்டு, என் எதிர்ப்பார்ப்புக்கு, ஏமாற்றத்தை அளித்து விட்டது. சென்னையில் தமிழ் முதுகலை பட்டப் படிப்பு படிக்கும் வேட்கையும் வீணாகி விட்டது.

தேர்வில் பெற்ற தோல்வி என்னை படிப்பின் மேலே ஒரு தேவையற்ற வெறுப்பினைத் தூண்டி விட்டதால். வேலை செய்யும் ஆசையை விட்டுவிட்டு, வேளாண்மைத் துறைப் பக்கம் போய்விடலாமா என்ற ஒரு சிந்தனையையும் சிலிர்த்தெழச் செய்து விட்டது.

என் தந்தையின் அன்பான ஆணை, அவர் வழிக்குத் திரும்பச் செய்தது. அதை இப்பொழுதும் நினைத்துப் பார்க்கிறேன்.

வாழ்க்கையில் பி.ஏ. படிப்பில் ஏற்பட்ட ஒரு தோல்வி எனது வாழ்க்கையில் பெரிய திருப்பம் என்றால், என் தந்தை கூறிய வார்த்தைகள், என் வாழ்வில் ஏற்பட்ட திருப்பங்களிலே பெரிய திருப்பமாக ஆகிவிட்டது.

தோற்றுப்போன எனக்கு, என் தந்தை அன்று கூறிய வாசகங்கள் இன்றும் என் காதுகளில் எதிரொலித்துக் கொண்டேயிருக்கின்றன.

''எட்டாவது படிக்கிறபோது, உன்னைப் படி என்று நான்

அடித்த போது, நான் எப்பொழுது தோற்கிறேனோ, அப்பொழுது என்னைக் கேட்டால் போதும் என்று நீ கூறினாய். இதுவரை நீ உனக்காகப் படித்தாய். நன்றாகவே படித்தாய். ஆனால், இன்று நீ தோற்று, துவண்டு போயிருக்கிற நிலையைப் பார்க்கிற போது, மனதுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. எனது ஆசையை இப்பொழுது நான் கூறுகிறேன். இதுவரை நீ உனக்காகப் படித்தாய். இந்த ஒருமுறை மட்டும் எனக்காகப் படி! பரிட்சை எழுது. தேர்வின் முடிவு பற்றி பிறகு பார்க்கலாம்.'' என்று அறிவுரை கூறினார்.

அவருக்காகப் படித்த நான், அவர் நம்பிக்கையை மீண்டும் பெற, இரவு பகல் பாராமல், கடுமையான உணவுக் கட்டுப்பாட்டை உருவாக்கிக் கொண்டு, படித்து, நல்ல மதிப்பெண்கள் பெற்று, வெற்றி பெற்றேன்.

உணவுக் கட்டுப்பாடு என்பது பி.ஏ தேர்வு எழுதுகிற வரை, ஒருவேளை உணவுதான், எந்த நேரத்திலும் விளையாடி விளையாடி, உண்டு உண்டு மகிழ்ந்து, பொழுது போக்கிய கல்லூரி நாட்களையும்; தனித்தேர்வு எழுதுவதற்காக, என்னைநானே கண்டித்துக் கொண்ட சூழ் நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்வேன்.

இப்படியே ஓராண்டு கழிந்தது.

இதற்கிடையில் பல உத்தியோகங்களில் சேர்வதற்காக பல தேர்வுகள். பல வாய்ப்புகள் ஏனோ தெரியவில்லை. வேண்டாமென்று விலகி வந்து விட்டேன்.

இரயில்வே பணியில் சேர்ந்து கொள் என்று விளையாட்டுப் பயிற்சியாளர் திரு தாமஸ் என்பவர் அழைத்த அன்பான வேண்டுகோள்- கேட்ட வேலையை கொடுக்க வில்லை என்று வாய்ப்பை ஒதுக்கிவிட்டேன்.

சென்னையில் ரயில் பெட்டித் தொழிற்சாலையில் வந்து சேர, உதவிய நண்பர்களையும் சற்று ஒதுக்கினேன்.

இப்படி, நல்ல பல வேலைகள் பெற வாய்ப்புகள் வந்தாலும், நான் காரைக்குடிக்குப் படிக்க போகவேண்டும் என்று ஒரு விதி. என்னை விடாமல் தொடர்ந்ததே! அது தான் ஆச்சரியம்.

சென்னைக்கு நான் படிக்கப் போகவில்லை என்று தெரிந்து கொண்ட என் நண்பர், வகுப்பு தோழர், விடுதி அறை தோழர் திரு டென்னிசன் அவர்கள். என்னை வந்து சந்தித்தார்.

நீஅழகப்பா, உடற்கல்விக் கல்லூரியில் சேர வேண்டும். முதல்வர் திரு ராப்சன், உன்னை வந்து சந்திக்கச் சொன்னார். என்று கூறினார்.

நானும் எந்த விதமான மறுப்பும் கூறாமல், சரி என்றேன்.

சரி என்று சம்மதித்த அந்த வார்த்தைதான், இன்று என்னை ஒரு சரித்திரமே எழுத வைத்திருக்கிறது என்றேன். குழந்தை நாதன் குறும்புப்பார்வையுடன், முறுவலித்தார்.

1959-60ம் ஆண்டு, நான் டிப்ளமோ வகுப்பில், சேர்ந்து படித்தேன். ஓட்டப்பந்தயங்களில் வெற்றிவீரன் பட்டம் பெற்றதும்: நாடகங்களில் ஆர்வமுடன் பங்கு பெற்றது எல்லாம், எந்த விதமான மாற்றங்களையும் எனக்குள் ஏற்படுத்தவில்லை.

கட்டுரைப்போட்டியில் கலந்து கொண்டபோது தான், ஒரு புதிய பாதையில் பயணம் செல்லக் கூடிய வெளிச்சம் ஒன்று தெரிந்தது.

போட்டிகள் என்றால் எப்படியும் முதலாவதாக வந்துவிட வேண்டும் என்ற ஓர் ஊக்கம் என்னுள் எப்பொழுதும் அணையாத நெருப்பாகவே எரிந்து கொண்டிருக்கும்.

அதற்கான சந்தர்ப்பங்களும் அவ்வப்போது வந்து கொண்டிருக்கும்.

டிப்ளமோ பட்டம் என்பது D.P.E.D. நான் படித்த காலத்தில் முதுகலை ஆசிரியப் பட்டப் படிப்புக்கு சமானமாக அங்கீ கரிக்கப்பட்டிருந்தது.

அதற்கு குறைந்த அளவு கல்வித் தகுதி என்பது பி.ஏ. அல்லது பி.காம் என்பதாகும். ஓராண்டு காலம், விடுதியிலே கட்டாயமாகத் தங்கிப் படிக்கும் நிலைமை கொண்டது.

அப்போது சர்டிபிகேட் கோர்ஸ் என்றும், ஹையர் கிரேடு கோர்ஸ் என்றும் இருந்தன. இதில் பள்ளி இறுதி வகுப்பு படித்துத் தேறியவர்களும் (S.S.L.C) அதில் பெயிலானவர்களும் சேர்ந்து படிக்கும் வகுப்பு சர்டிபிகேட் பயிற்சி, (C.P.E.D).

கல்லூரியில் பாடம் நடத்தப்படுவது எல்லாம், ஏறத்தாழ எல்லா நிலையிலும் ஆங்கிலமே இருந்தது. கல்லூரி பேராசிரியர்கள், தமிழில் பேசுவது தவறு என்பது போல எண்ணிக் கொண்டு, ஆங்கிலத்தில் சொல்லித் தருவது தான், அறிஞருக்கு அழகு என்பதாக விரிவுரையாற்றுவார்கள்.

ஆங்கிலத்தில் போதிய அறிவு இல்லாத காரணத்தால், மாணவர்கள் பலர் வகுப்பு நேரத்தில், மதிமயங்கிக் கிடப்பது வழக்கம். அதாவது சத்தமின்றி, ஆழ்ந்த நித்திரையில் இருப்பது வழக்கம்.

பிறகு, அடிக்கடி நடத்துகிற தேர்வு வருகிற போது, அலங்கோலமாக அலைந்து திரிந்து, அவதிப்படுவதும், பாடங்களைப் புரிந்து கொள்ள திண்டாடுவதும் வேடிக்கையாக இருக்கும்

எல்லோரிடமும் சகஜமாகப் பழகுவதால், ஆங்கிலப் பாடங்களைத் தமிழில் கற்றுத் தர வேண்டும் என்று,

தேவைப்பட்ட மாணவர்கள் எல்லோரும், என்னைத் தேடி வந்து விடுவார்கள்.

அதிகமாக விளையாடிக் களைத்துப் போயிருக்கும் என்னிடம் வேலை வாங்குகிற உபாயத்தையும், அவர்கள் தெரிந்து வைத்திருந்தார்க்ள.

என்னிடம் பாடம் படிக்க வருகிற போதே, கையில் பொட்டலத்துடன் வருவார்கள். அந்த பொட்டலங்கள் வேர்க்கடலை, மிக்ஸர், காராசேவு போன்ற நொறுக்குத் தீனிகள்.

பொட்டலம் கரையும் வரை பாடங்கள் கற்றுதருவது நீடிக்கும் . எனது குரு தட்சணை இப்படியாக கிடைத்துவந்தது.

இதில் எனக்கு என்ன லாபம் என்றால், புரியாத மாணவர்களுக்கு, அவர்கள் புரிந்து கொள்கிறவரை, விளையாட்டுப் பாடங்களை நடத்த வேண்டியிருந்ததால், எனக்கும் அந்தப் பாடங்கள் எல்லாம் அத்துப்படி ஆகி விட்டன.

ஓய்வு நேரத்தில் திண்பண்டம், மாணவர்களுடன் ஆழ்ந்த நட்பு, அதே சமயத்தில், பாடங்கள் எல்லாம் என மனதில் ஆழப் பதிந்துபோயின.

இதன் எதிரொலியாக எனது டிப்ளமோ, தேர்வில் சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வில், நான் **முதல் மாணவனாக** சிறப்புத் தேர்ச்சி பெற்றேன். (First Rank with Disinction).

முதல்வர் ராப்சன் அவர்களுக்கு, நான் தேர்வில் பெற்ற வெற்றி குறித்து மிகவும் பெருமை.

'எப்படியம் நான் உனக்கு நல்ல வேலை வாங்கிக்

தருவேன்' என்று அவர் வாக்களித்தபடி, அழகப்பா கலைக்கல்லூரியில், ஓர் இடம் காலியான போது, அதற்கு என்னை விண்ணப்பிக்குமாறு கடிதம் எழுதியிருந்தார்.

அதன்படி மனு செய்திருந்தேன். அதற்கான நேர்முகத் தேர்வுக்குத் தான் நான சென்று கொண்டிருக்கிறேன் என்று சொல்லி முடித்தேன் குழந்தைநாதனிடம்.

உங்களை எங்கள் கல்லூரி சார்பாக முன் கூட்டியே வரவேற்கிறேன். உங்களுக்கு இந்த வேலை நிச்சயம் கிடைக்கும் என்று, நம்பிக்கையுடன் பேசினார் அவர்.

நிரந்தரமாக அந்த கல்லூரியில நான் பணியாற்றுவேன் என்ற அவரது நம்பிக்கை, மூன்று நான்கு ஆண்டுகளுக்குள் மாறிப் போய்விடும் என்பதை அறியாமல், நாங்கள் இருவரும் மகிழ்ச்சியுடன் கைகுலுக்கிக் கொண்டோம்.

ஆனால் நடந்ததோ வேறு.

எனக்குள்ளே இருந்த இலக்கியதாகமும் வேகமும், இதமான இடம் கிடைத்த காரணத்தால், பல மடங்கு பெருகிப் பரிமளித்துக் கொண்டது. புதிய பரிணாமம் பெற்றது. புத்துணர்ச்சியுடன் புதிய கிளர்ச்சியையும் பெற்றது. இனி தொடருவோம்.

# 4. அப்படி ஓர் ஆரம்பம்

அழகப்பா கலைக் கல்லூரியில் நேர்முகத் தேர்வு நடைபெற்றது. கல்லூரி முதல்வர் தான் தேர்வு நடத்தினார். நான் ஒருவன் தான் வந்திருந்தேன். மரபுப்படி கேட்கப்பட்ட கேள்விகளுக்கு என் பதில்களும் சரியாக அமைந்திருந்தன. கல்லூரி திறக்கும் நாளன்று வந்து பணியில் சேர்ந்து கொள்ளலாம் என்ற ஆணையுடன் என் நேர்முகத் தேர்வு நடந்தேறியது.

கல்லூரியிலிருந்து ஆர்டரைப் பெற்றுக் கொண்டேன். ஏப்ரல் மாதத்திற்கும் ஜுன் மாதத்திற்கும் இடையில் எனது திருமணம் நடந்தது. 1961 மே மாதம் 25ந் தேதி எனது திருமணம்.

இவ்வளவு விரைவாக ஏன் திருமணம் என்று எனது நண்பர்கள் அன்று கேட்டார்கள். வாசக அன்பர்கள் நீங்களும் கேட்கலாம் அல்லவா?

திருமணம் ஆகாத ஆசிரியர்களாக இருந்தால், கல்லூரி விடுதியில், துணை விடுதிக் காவலாளர் பணி அளிக்கப்படும். விடுதியிலே தங்கி மாணவர்களைக் காக்கும் பொறுப்பு.

அனுபவப்பட்ட ஆசிரியர்கள் எனக்கு முன் கூட்டியே தந்த தகவல். அதிலிருந்து விடுபட இன்னொரு முடிவை ஏற்றுக் கொண்டாக வேண்டும். அதுதான் திருமணம் செய்து

கொள்வது.

காரைக்குடியில் ஓட்டல் சாப்பாடு வசதிபோதாது. அந்த சூழ்நிலையில் நான் விரும்பாத ஒன்றாக இருந்ததும் ஒரு காரணம்.

எனக்குள்ளே ஒரு சமாதானம். நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்த எனக்கு 23 வயதில் திருமணம் என்றால், அடுத்த ஆண்டே குழந்தை பிறந்தால், அது ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, எனக்கு 43 வயதாகும் போது, அந்தக் குழந்தை வளர்ந்து 20 வயதாகும். இரண்டு பேரும் சம்பாதிக்க நேர்ந்தால் குடும்பம் கொஞ்சம் வசதியாக வாழ முடியுமே!

இப்படியும் நான் எண்ணியதால் தான், கல்லூரிக்கு நான் பணியில் சேர வந்த போதே, திருமணமானவனாக வந்து சேர்ந்தேன்.

கல்லூரியில் எனக்கு வேலை இவ்வளவு சீக்கிரம், இவ்வளவு எளிதாக எப்படி கிடைத்தது என்ற தனது வியப்பை, வினாக்கள் மூலம் கணைகளைத் தொகுத்து, என்னைக் களைப்படையச் செய்தவர்களும் நிறைய பேர்கள் அப்பொழுதே இருந்தார்கள்.

காரணம் புரியாமல் தவித்த எனக்கு நாளாக நாளாக புரிய ஆரம்பித்தது.

ஒரு கல்லூரிக்கு ஒரு உடற்கல்வி இயக்குநர் தான் அனுமதி உண்டு. ஆனால் வள்ளல் அழகப்பர் வளர்த்த அந்தக் கல்லூரியில், ஒரு உடற்கல்வி இயக்குநர், ஒரு துணை இயக்குநர், ஒரு சிறப்பு இயக்குநர் (coach) என மூன்று பதவிகள் இருந்தன.

இயக்குநர் பதவியில் இருந்த திரு ராமதாஸ் அவர்கள்,

கொண்டார். துணை இயக்குநரான திரு டாட் அவர்கள் இயக்குநராக பொறுப்பேற்றுக் கொண்டார்.

இந்தத் துணை இயக்குநர் பதவிக்கு யாரும் வேண்டாம், ஒருவரே போதும் என்று கல்லூரி முதல்வர் முதலில் முடிவெடுத்திருந்தார். பின்னர், ஏதோ காரணத்தினால், ஒரு கட்டாயத்தினால், அந்தப்பணியில் ஒருவரை அமர்த்த முடிவு செய்தபோது, யாரை நியமிப்பது என்பதில் சிக்கல் எழுந்தது.

கல்லூரி முதல்வர், தனது உறவினர் ஒருவருக்கு அந்த வாய்ப்பினை அளிக்க முன்வந்தார். அழகப்பா உடற்கல்விக் கல்லூரியின் முதல்வர் திரு ராப்சன், அவரது கல்லூரியில் படித்து மாநிலத்திலேயே முதல்மாணவனாகத் தேறியிருந்த எனக்கு சிபாரிசு செய்தார்.

அந்நாளில் அழகப்பா கல்லூரி நிறுவனங்களின் தாளாளராக இருந்த திருவாளர் சி. வி.சிடி.வி. திரு வெங்கடாசலம் செட்டியார் அவர்கள், திரு. ராப்சனின் சிபாரிசினை ஏற்றுக்கொண்டு எனக்கு அந்தப் பணியைக் கொடுக்க முன்வந்தார். கலைக் கல்லூரி முதல்வரோ அந்த முடிவை ஏற்கவும் முடியாமல், தட்டவும் முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பாக என்னை ஏற்றுக்கொண்டார்.

கொள்கை அளவில் என்னை ஏற்றுக் கொண்டாரே ஒழிய, மனத்தளவில் மறுப்புள்ளவராகவே இருந்தார். அதனால்தான், நேர்முகத் தேர்வும் எந்த விதமான விறுவிறுப்புமின்றி நடைபெற்று முடிந்து போனது.

கல்லூரியில் சேர்ந்த பிறகு தான், எனது நிலைமையும் புரிந்தது. கொஞ்சம் விழிப்புணர்வுடன் இருந்து பணியாற்ற வேண்டும் என்று நானே முடிவு செய்து கொள்ள நேர்ந்தது.

இந்த சூழ்நிலைகளுக்கு இடையே தான் திரு குழந்தைநாதன் அவர்களுடன் ஏற்பட்ட நட்பு இனிதாக

வளர்ந்து வந்தது.

எப்பொழுதும் அவரது தமிழ்த்துறை அறையில் அவருடன் இருப்பேன். அல்லது ஓய்வு நேரத்தின் போது, அவரே என்துறை அறைக்கு வந்து விடுவார்.

நான் தமிழில் நல்ல ஈடுபாடு கொண்டிருந்தது அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. எந்தக் கருத்தையும் நான் கொஞ்சம் ஆழ்ந்து சிந்தித்து பேசுவது, விவாதத்தில் கொண்டு வந்து விடும் என்பதால், நாங்கள் நீண்ட நேரம் பேசுவதாகிவிடும்.

ஓரங்க நாடகங்கள் எழுதுவதும் அதிலும் நகைச்சுவை நாடகங்கள் எழுதுவதும் , பேராசிரியர் குழந்தைநாதன் அவர்களுக்கு கைவந்த கலையாக இருந்தது.

அழகப்பா கல்லூரியில், முத்தமிழ் விழா ஒன்று மிகவும் சீரும் சிறப்புமாக நடத்தப்படும். தமிழகம் எங்கிலுமுள்ள தரமுள்ள பேச்சாளர்களை, கவிஞர்களை, இசைக் கலைஞர் களை அழைத்து வந்து பேசச் செய்தும், பாடச் செய்தும், நடிக்கச் செய்தும், கல்லூரி வளாகமே கலைவிழா கோலமாகக் காட்சியளிக்கும்.

முதல்நாள் பேச்சரங்கம். இரண்டாம் நாள் கவியரங்கம். மூன்றாம் நாள் பட்டிமன்றம், ஒவ்வொரு நாள் இரவும் நாடகம் நடத்துவர்.

பொதுவாக நாடகம் நடத்துகிற பொறுப்பு திரு குழந்தைநாதன் அவர்களுக்கு அந்நாளில் இருந்தது. அவரது தமிழ்த் துறையில் பத்து பேராசிரியர்களுக்கு மேல் இருந்த போதும், அவருக்கு உதவி செய்ய என்னைத்தான் அழைத்தார்.

மற்ற தமிழ்த் துறையினருக்கும் அவருக்கும் கருத்து வேற்றுமை இருந்தது எனக்குத் தெரியாது. அவர் உதவியாளராக என்னை அழைத்ததுமே, நான் மகிழ்ச்சியுடன்

ஏற்றுக் கொண்டேன்.

நாடகம். இசை. கவிதை என்பவை என்னுள் பொங்கிக் கொண்டிருந்தபோது (*1954-1958*), நான் நடித்த நாடகங்கள் பற்றியும், பாடிய மெல்லிசை நிகழ்ச்சிகள் பற்றியும், எழுதிய பாடல்கள் பற்றியும் அவரிடம் கூறியிருந்தேன். அதனால் என்னை அவர் அழைத்து, கலைவிழா நிகழ்ச்சிகளில் ஈடுபடுத்தி விட்டார்.

இவ்வாறு குழந்தைநாதன் அவர்களுடன் நாடகங்கள் நடத்திய காரணத்தால், மாணவர்களிடையே பிரபலமாகும் சூழ்நிலை வளர்ந்தது.

ஏற்கனவே, விளையாட்டுக்களில் ஈடுபாடு நிறைந்த மாணவர்களுடன். கலை, இசை, கவியரங்கம் இவற்றில் ஈடுபாடுள்ள தமிழ்ப் பற்று மிகுந்த மாணவர்களுடனும் பழகும் வாய்ப்பு நிறையவே கிடைத்தது.

இப்போது சென்னை பிரசிடென்சி கல்லூரி தமிழ்த் துறையில் பணியாற்றி வரும். தமிழ்ப் பேராசிரியர் சுவைமிகு சொற்பொழிவாளர் டாக்டர் இளவரசு என்பவர். அப்போது எம்.ஏ மாணவராகப் படித்தார்.

காலஞ்சென்ற தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர் அமைச்சரவையில் அமைச்சராகப் பணியாற்றிய சௌந்தர ராஜன் என்பவரும், அந்நாளில் தமிழ் பயின்ற மாணவரே.

இவ்வாறு தமிழ்த்துறை மாணவர்களுடன் ஏற்பட்ட தொடர்பு எனக்குள் இருந்த தமிழார்வத்தை மேலும் வளர்த்து விட்டது.

காலை மாலை நேரத்தில் டென்னிஸ் ஆட்டம். வேலை நேரத்தில் வேலை செய்த நேரம் போக, தமிழ் உரையாடல். இப்படி நாட்கள் நகர்ந்த போது, தமிழ் மீது பாசம் மிகுந்தது

என்பதைவிட, ஒரு வெறியே ஏற்பட்டு விட்டது.

என் பெயரை நவராஜ் செல்லையா என்று எழுதுவதைத் தவிர்த்து, நவராசு செல்லையா என்று, தமிழாக எழுதத் தொடங்கினேன். ஆங்கிலத்தில் பேசுவது அநாகரீகம். துரோகத்தனம், தாய்மொழி தமிழில் பேசுவதே தன்மானம் என்ற தமிழன்பர்கள் பேச்சிலே என்னை இழந்து, ஆங்கிலம் கலவாத தமிழில் பேசி வரலானேன்.

ஆங்கிலத்தில் அழகான கட்டுரை வரைகின்ற ஆற்றலை பெற்றிருந்த நான், அதை இழந்ததுடன், நான்கு வார்த்தைகள் தொடர்ந்து ஆங்கிலத்தில் பேச முடியாத நிலைமைக்கும் ஆளானேன்.

நான் என்.சி.சி ஆபிஸர் நேர்முகத் தேர்வுக்கு சென்னை வந்த போது, அந்த வாய்ப்பு எனக்கு கிடைக்காமல் போனதற்கு ஒரு காரணம், நான் சரியாக 4 நிமிடம் தொடர்ந்து ஆங்கிலத்தில் பேச இயலாமல் போனது தான்.

அவ்வாறு 1963 ல் என்.சி.சி ஆபிஸர் பணி எனக்குக் கிடைக்காமற்போனதும் என் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். ஏனென்றால், அந்த என்.சி.சி பணி கிடைத்திருந்தால், ஒரு வேளை நான், காரைக்குடி அழகப்பா கலைக் கல்லூரியிலேயே நிரந்தரமாகத் தங்கியிருந்திருப்பேன்.

நான் விளையாட்டுத் துறையில் நூல்கள் நிறைய எழுத வேண்டும் என்பது என் தலைவிதியாக இருந்தபோதும், அந்தப் பணி எனக்கு கிடைக்காதபடி அமைந்து விட்டது. கிடைக்கவில்லையே என்ற கலக்கம் அன்றைக்கு என்னை ஆட்டிப் படைத்து, அலைக்கழித்த நிலையை எண்ணி, இன்று எனக்குள் நானே சிரித்துக் கொள்கிறேன்.

இந்த நிகழ்ச்சியை இங்கே நான் ஏன் குறிப்பிடுகிறேன் என்றால், **விளையாட்டுத் துறை நூல்களை எழுதவேண்டும் என்ற ஒரு சூழ்நிலையை சுற்றிச் சுற்றியே, என் வாழ்க்கை**

**நிகழ்ச்சிகள் எல்லாமே நடந்து வந்தன.** என்பதைக் குறிப்பிடத்தான்.

தமிழின் மீதிருந்த ஆர்வத்தால், என்னைத் தகுதி படைத்தவனாக ஆக்கிக் கொள்ள முயன்றேன்.

கல்லூரியில் படித்த நாட்களில் விளையாட்டுப் போட்டிகள், விடுதிப் பொறுப்பு என்று பலவாறாக அலைந்து, பி.ஏ. தேர்வும் எழுதி, பிறகு டிப்ளமோ பட்டமும் உடற்கல்வியில் பெற்று, கல்லூரியிலும் வேலை வாங்கியாகிவிட்டது . கல்லூரி மாணவர்களுக்குத் தகுதியான ஆசிரியராக விளங்கவேண்டும் என்றால், நானும் நிறைய நூல்களைப்படித்தாக வேண்டுமே!

படிக்க வேண்டும் என்ற வெறி, என்னுள்ளே படமெடுத்து ஆடிக் கொண்டிருந்த போதுதான், முத்தமிழ் விழாக்களில், நான் சிறப்பான ஒரு பங்கினை வகிக்கும் நிலை ஏற்பட்டது.

ஓரங்க நாடகங்கள் எழுதி அதனை இயக்கிட நான் மேற்கொண்ட முயற்சிகளை, இப்பொழுது நினைத்தாலும் மலைப்பாக இருக்கிறது.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் கல்லூரி ஆண்டு மலர் தயாராகிறது. அதற்கான கதை, கட்டுரை, கவிதைகளை மாணவர்கள், ஆசிரியர்கள் வழங்கலாம்' என்ற அறிவிப்பு ஒன்று வந்தது.

நானும் ஒரு கவிதையை எழுதிக் கொண்டுபோய், அப்பொழுது தமிழ்த்துறை தலைவராக இருந்த டாக்டர் **வ.சுப மாணிக்கம்** அவர்களிடம் கொடுத்தேன். என்னுடன் என் துறைத் தலைவர் திரு Y.S. டாட் அவர்களும் வந்திருந்தார்.

என் கவிதையை வாங்கிப் படித்த டாக்டர் என்னை ஒரு முறைப் பார்த்தார். அந்தப் பார்வையில் வியப்பும்,

வினாக்குறிப்பும் தென்பட்டன.

மீண்டும் ஒருமுறை என் கவிதையைப் படித்தார். என்னை மீண்டும் ஒரு முறை பார்த்தார். நாங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தோம்.

தமிழ்த்துறைத் தலைவரிடமிருந்து இப்படி ஒரு வினா விரைந்து வந்தது.

இந்தக் கவிதையை உங்களுக்கு யார் எழுதி தந்தது? என்பது தான் அந்த வினா!

அதிர்ச்சிக்குள்ளானேன் நான். என்னை அவர் அவமானப்படுத்துகிறார் என்பதாக நான் நினைத்துக் கொண்டேன். மறுவார்த்தையாக அவரை பேசவிடவில்லை நான். இளம் ரத்தம் அல்லவா! பொங்கியெழுந்தேன்.

கவிதை எழுதத் தெரியவில்லை என்றால் நான் கற்றுத் தருகிறேன். யார் எழுதிக் கொடுத்தது என்று எப்படி கேட்பீர்கள்? நமக்குள் ஒரு பந்தயம் வைத்துக் கொள்வோம்.

# 5. எழுச்சி பெற்ற இலட்சியம்

விளையாட்டுத்துறை தமிழ் இலக்கியத்தில், நூறு நூல்களுக்குமேல் எழுத நேர்ந்த சூழ்நிலையை, ஆசிரியர் வாசகர்களுக்கு சுருக்கமாக சொல்லும் பகுதியாக களஞ்சியத்தில் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

இலட்சியங்கள் எதுவுமே எளிதாக நிறைவேறிவிடுவதில்லை. தடைகளும், துயர்களும், தடுமாற்றங்களும், திகைப்பூட்டும் சந்தர்ப்பங்களும், இலட்சியவாதிகளை குதறி விடுவதோடு நின்று விடாமல், குழப்பியும் கொள்கை மாறிப் போகவும் செய்து விடுகின்றன.

அவற்றிலிருந்து, எப்படியெல்லாம் தப்பித்துக் கொண்டு தான் நினைத்ததை சாதித்தார் என்கிற வரலாற்றினை, நீங்கள் படித்து மகிழ்கின்றீர்கள்.

ஆசிரியரின் இலக்கியப்பணி, காரைக்குடியில் உள்ள அழகப்பா கலைக்கல்லூரியில் இருந்துதான் ஆரம்பமாகிறது. விளையாடியும், நாடகம் எழுதியும், நடித்தும் மகிழ்ந்து கொண்டிருந்த ஆசிரியரை, விளையாட்டுத் துறை இலக்கிய நூல்கள் எழுதும் இலட்சியத்தை ஏற்றுக்கொள்ள வைத்தது, அது எழுச்சி பெற்றது போன்ற நிகழ்ச்சிகள் இங்கே தொடர்கின்றன.

'இந்தக் கவிதையை' உங்களுக்கு யார் எழுதித் தந்தது?

இந்தக் கேள்விதான் திரும்பத்திரும்ப என் செவிகளில் மோதி, அம்பாகத் துளைத்தது, இதயத்தை சிதறடித்தது.

கேள்வியைக் கேட்ட பேராசிரியருக்கோ கேள்வி சாதாரணம் தான், ஆனால், கேட்டிருந்த எனக்கோ, கேவலமாக இருந்தது. அந்தக் கேள்வியை அப்படித்தான் நான் எடுத்துக்கொண்டேன்.

கவிதை எழுதுவதற்கு என்ன தகுதி வேண்டும்? பொருளாதாரப் பட்டப்படிப்பு போதாதா? உடற்கல்வித் துறையில் ஒரு பட்டப்படிப்பு போதாதா? உணர்வு போதாதா? சொல்லாற்றல் போதாதா? அதற்கும் மேலே ஒரு தகுதி இருக்கிறதா?

தமிழ் படித்தவர்கள், அப்படித்தான் பேசுகின்றார்கள். கவிதைக்கும் தமிழிலக்கணத்திற்கும் ஏதாவது சம்மந்தம் உண்டா? இப்படியெல்லாம் யோசித்து, யோசித்து, குழம்பினேன். என்னையே குழப்பிக் கொண்டேன்.

எனது கவிதைக்கு, தமிழ்படித்தவர்கள் மத்தியிலே, மரியாதை கிடைக்க வேண்டும் என்றால், நானும் தமிழில் பட்டம் ஒன்றைப் பெற வேண்டும் பெற்றாக வேண்டும் என்ற வேகம் என்னுள் எழுந்தது.

பேராசிரியர் அறையிலிருந்து, உடற்கல்வித் துறைக்கு நான் வரும் வரை, மிகவும் மௌனமாக நடந்து வந்தது. திரு டாட் அவர்களுக்கு, ஆச்சர்யமாக இருந்தது.

எந்த விஷயத்தையும் எளிதாக எடுத்துக் கொள்ளும் எனக்கு, இந்த சாதாரண கேள்வியை ஜீரணிக்கவே முடியவில்லை. இதற்கு ஒரு வழி கண்டாக வேண்டுமே? எப்படி என்றுதான் எனக்குப் புரியாமல் இருந்தது.

தமிழில் எம்.ஏ. பட்டம் பெற வேண்டும். இதை நான்

உடனே தொடரவேண்டும் என்று டாட் அவர்களை கேட்டேன். ஐந்து ஆண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றிய அனுபவம் இருந்தால், நீங்கள் நேரடியாகவே தேர்வ எழுதலாம். நீங்கள் பணியில் சேர்ந்தே ஓராண்டு தானே ஆகிறது! கொஞ்சம் பொறுமையாக இருங்கள் என்று, என் ஆவேசத்திற்கு அணையிட்டுப் பார்த்தார்.

படிக்க வேண்டும் என்ற பயங்கரமான பசி. என்னைப்பிடித்துக் கொண்டது மட்டுமன்றி, இரவுபகல் என்று பாராது, என்னை ஆட்டி அல்லாட வைத்தது.

கல்லூரி ஆசிரியர் என்று என்னை அறிவில் உயர்த்திக் கொள்ள முதலில் முனைந்த எனக்கு, இந்த நிகழ்ச்சி இன்னும் பெரும் முனைப்புடன், என்னை இயக்கி விட்டது. ஏன்? முடுக்கி விட்டது என்றே கூறலாம்.

இந்தத் தருணத்தில், இன்னொரு நிகழ்ச்சியும் நிகழ்ந்தது.

ஒரு நாள், பேராசிரியர் குழந்தைநாதன் அவர்களுடன் ஒரு நாடகக்கதை பற்றிய உரையாடல் நடந்தது. அந்தக் கதைபற்றிய சுருக்கத்தை இரண்டு பக்க அளவில் எழுதிக் காண்பித்தேன்.

அவர் என்னுடைய கதை அணுகுமுறையைப் படித்துப் பார்த்து விட்டு, நீங்கள் புத்தகம் கூட எழுதலாம் போலிருக்கிறதே! நீங்கள் ஏன் என்னைப்போல், நூல்கள் எழுத முயற்சிக்கக் கூடாது? என்றார்.

அவர் ஐந்து நூல்களுக்கு ஆசிரியராக இருந்ததால், என்னைப்போல், என்று ஓர் அழுத்தம் தந்து பேசினார்.

அவர் கூறிய யோசனை எனக்குப் பிடித்திருந்தது.

ஆனால், எதைப்பற்றி புத்தகம் எழுதுவது?

நாடகம் எழுதுகிறேன். அது எனக்கு எளிதாக இருக்கும்.

பிறகு, கவிதை, சிறுகதை என்று தொடர்கிறேன் என்றேன்.

குழந்தைநாதன் அவர்கள் என்ன நினைத்தார்களோ தெரியவில்லை. எனது இலட்சிய வேகம் அவரது சொல்லில் பிறந்து வந்தது.

**கதை, கவிதை, நாடகம் எல்லாம், கண்டவர்கள் எழுதுகிற துறையாயிற்றே! உங்களுக்கு என்று ஒரு துறை இருக்கிறதே ! விளையாட்டுத்துறை! அதில் எழுதலாமே என்றார்.**

தமிழ் நெஞ்சம் ஒன்று, தமிழ்த்துறையை விட்டு, வேறு துறை பற்றி சிந்தித்து செப்பியமொழி, என்னை மெய் சிலிர்க்க வைத்தது.

விளையாட்டு பற்றி எழுதவேண்டுமா? வியப்பில் விரிந்து போனேன். எனது விழிகள் வியப்பில் பெரிதாகி, மலைப்பில் சுருங்கிக் கொண்டன.

நாளையிலிருந்தே இந்தப் பணியைத் தொடங்குங்களேன் என்று, செல்லமான கட்டளை ஒன்றைப் பிறப்பித்து விட்டு என்னை அனுப்பி வைத்தார். அவரும் ஒரு என்.சி.சி ஆபிசர் அல்லவா ! நேரம் பறந்தது, கட்டளை ஒன்றைக் கொடுத்து, விளையாட்டு இலக்கியம் என்னும் விதை ஒன்றை, என் நெஞ்சுக்குள் விதைத்து விட்டார்.

தமிழில் முதுகலைப் பட்டம் பெறவேண்டும் என்ற **வேகம்** கல்லூரி ஆசிரியர் என்றால் நிறைய படித்து தகுதியுள்ளவராக விளங்கவேண்டும் என்ற தணியாத **தாகம்.** விளையாட்டுத் துறையில் புதிதாக நூல்களை எழுத வேண்டும் என்று தூண்டும் **விவேகம்.**

இந்த மும்முனைத் தாக்குதல் என்னை பாடாய் படுத்தி, விரட்டோ விரட்டு என்று விரட்டியது. நானும் விரட்டலுக்குப் பயந்து, புதிய இடம் ஒன்றில் போய் புகுந்து கொண்டேன்.

சரணாகதி அடைந்தேன் என்று கூடச் சொல்லலாம்.

அந்த புதிய இடம், புனித இடம், என்னை ஏந்திக் கொண்ட சரணாலயம் - நூலகம்.

காரைக்குடி அழகப்பா கலைக்கல்லூரியில் நூலகத்தின் அமைப்பே ஒரு நூதனமானது தான். பல ஆயிரக்கணக்கான, பல்வேறு துறைகளைக் கொண்ட நூல்கள், வட்டவடிவமான அடுக்குகளில், வைக்கப்பட்டிருக்கும்.

உள்ளே நுழைந்துவிட்டால். உலகமே மறந்து போகும் அளவுக்கு அமைதியான சூழ்நிலை.

வேலை நேரம் போக, என் குடியிருப்பாக, அந்த நூல் நிலையம் அமைந்துவிட்டது. என்னைப் பார்க்க வேண்டும் என்று முயற்சிக்கின்ற பணியாளர்கள், பெரிய பரப்பளவுள்ள அந்தக் கல்லூரி வளாகத்தைச் சுற்றுவதற்கு முன், ஒரு முறை வந்து, நூலகரைப் பார்த்து விசாரித்து, 'நான் நூலகத்தில் இருக்கிறேனா என்று விசாரித்து விட்டுத்தான் செல்வார்கள்.

அந்தஅளவுக்கு, நூல் நிலையம் என்னை ஆட்கொண்டு விட்டது. கல்லூரி நேரத்தில் தான் இந்தக் கதி என்றால், வீட்டிற்கு போன பிறகும் இந்த 'படிக்கும் வேலை' என்னை விடவில்லை.

படிப்பது, குறிப்பெடுப்பது என்னும் வேலை, சில சமயங்களில் இரவு ஒரு மணி வரை தொடரும். இதற்கு முன்னதாகத் தூங்க முயற்சித்தால், படித்த நூல்களில் கிடைத்த பிடித்தமான கருத்துக்கள், சிந்தனையாய் சிலிர்த்தெழுந்து, ரீங்காரமிட்டுக் கொண்டேயிருக்கும், எப்படி தூங்குவது?

இதன் தொடர்ச்சி என் குடும்பச் சூழ்நிலையையே கலக்கிவிட்டது என்றே கூறலாம். 'இது என்ன படிப்பு' என்று என் மனைவியே எரிச்சல் பட்டு, புத்தகத்தைப் பிடுங்கி

எறியும், அளவுக்கு முற்றிவிட்டது.

'இது என்ன படிப்பு' என்று என் மனைவி கேட்ட கேள்வியும் சரிதான். நான் என்ன புத்தகம் படிக்கிறேன் என்பது எனக்கு தெரியாமலேயே படித்தேன்.

எந்தத் தலைப்பு எனக்குப் பிடிக்கின்றதோ அந்தப் புத்தகத்தை எடுத்துக் கொள்வேன். புத்தகம் எத்தனைப் பெரிதாக இருந்தாலும், அதைப் பற்றி எனக்கு கவலையும் இல்லை. பயமும் இல்லை. புத்தகத்தை முடிக்கும் வரை ஒரே சிந்தனை தான். அதே சிந்தனை தான்.

'கண்டது கற்கப் பண்டிதன் ஆவான்' என்பது ஒரு பழமொழி.

கண்டதையெல்லாம் எடுத்துப் படித்தால் பண்டிதன் ஆகிவிடலாம் என்றுதான் எல்லோரும் நினைக்கின்றனர். முயற்சிகளை முடுக்கி விடுகின்றனர்.

நல்ல நூல்கள் என்று கண்டு, நல்சுவை பயக்கும் எனக்கொண்டு அதைக் கற்க, பெரும் புலமையுடையவர் ஆகலாம் என்பது தான் உண்மைப் பொருளாகும்.

நானோ, பலதுறை நூல்களைக் கற்க ஆரம்பித்தேன். படிக்கின்ற உணர்வோ விருப்பமோ இல்லாவிட்டாலும் கூட, புத்தகத்தை எடுத்துப் பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருப்பதிலும் நான் மகிழ்ச்சி அடைவதுண்டு. என்னை அதிகமாக கவர்ந்த புத்தகங்கள் உளவியலும், தத்துவங்களும்தான்.

என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? எப்பொழுது நூல் எழுத ஆரம்பிக்கப் போகின்றீர்கள்? ஒரு நாளைக்கு ஒரு பக்கமாவது எழுதிக்கொண்டு வந்து என்னிடம் காண்பிக்க வேண்டும் . இல்லையென்றால் என் அறைப்பக்கம் வரவும்

வேண்டாம். என்னிடம் பேசவும் வேண்டாம் என்று நண்பர் குழந்தைநாதன் அவர்கள் முகத்தில் அடித்தாற் போல் என்னிடம் பேசி விட்டார்.

எனக்கும் என்னவோ போல் தான் அந்தச் சூழ்நிலை இருந்தது. எதையாவது தமாஷாக பேசிப் பொழுதைக் கழிக்கலாம் என்று போன எனக்கு அவர் பேசியது சங்கடமாகவே இருந்தது.

நானும் சட்டென்று திரும்பி என் அறைக்கு வந்து விட்டேன். அன்று நான் நூலகத்திற்கு செல்லவே இல்லை.

வீட்டிற்கு வந்தாலும் அதே நினைவு தான். மனைவியின் கேள்விகள் என்னை அவளிடம் நடந்ததை முறையிட வைத்தன.

'கண்ட புத்தகங்களைப் படிக்காமல் விளையாட்டுத் துறை நூல்களைப் படித்தால் தானே புத்தகம் எழுத முடியும்'.

என மனைவியிடமிருந்து இப்படி ஒரு ஆலோசனை. யோசித்து ஒரு முடிவுக்கு வந்தேன்.

இது நடைபெற்றது 1962 ஆம் ஆண்டின் ஒரு நாள். சரி என்று ஒரு முடிவுக்கு வந்தேன்.

விளையாட்டுத் துறை என்றால் அந்தத் துறையில் உள்ள பல நூல்களைப் பார்த்தாக வேண்டுமே!

தமிழில் தானே நூல்கள் எழுதப் போகிறோம். அதற்கு தமிழ் நூல்களே நல்ல வழிகாட்டும், உதவும் என்று தேடினேன். அப்படிப் பட்ட நூல்களே இல்லை என்று நூலகர்கள் கூறினார்கள்.

ஆக, நாம் எடுத்துக் கொள்கிற முயற்சி முதல் முயற்சியாக இருக்கிறது. இதை ஒழுங்காகச் செய்யவேண்டும் என்கிற நினைவு வந்தவுடன் ஒருவித புது உணர்வு வந்து விட்டது

நூலகத்திற்குப் போகமல், விளையாட்டுத் துறையில் அனுபவம் உள்ளவர்களை உடற்கல்வித் துறை இயக்குநர்கள் பலரை அணுகி, என் ஆர்வத்தைக் கூறினேன்.

வேறு வேலை உனக்கு எதுவும் இல்லையா? விவரமில்லாமல் உன் வாழ்நாளை வீணாக்கிக் கொள்ளப் போகிறாயா? தமிழில் புத்தகங்கள் தாம் எழுத முடியுமா? அதற்காக தமிழ் வார்த்தைகள் ஏதாவது இருக்கிறதா? ஆங்கிலச் சொற்களைத்தானே அத்தனை பேரும் பேசுகின்றார்கள்? அப்படியிருக்க தமிழில் நூல்கள் எழுதினால் எப்படி புத்தகம் விற்கும்? யார் தான் வாங்குவார்கள்.

இப்படித்தான் என்னிடம் எல்லோரும் பேசினார்கள். அதாவது அடித்துப் பேசினார்கள். நான் நினைத்துப் பார்க்ககூட கூசும்படி என் ஆசைகள் அத்தனையும் தவிடு பொடியாகும்படி யோசனை கூறினார்கள்.

'ஏண்டா கேட்டோம்' என்கிற நிலைக்கு நான் துவண்டு போய் விடுவேன்.

இனிமேல் யாரிடமும் போய் யோசனை கேட்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். அந்த நிலைக்கு என்னை ஆளாக்கியவர் என் துறைத் தலைவர் டாட் தான்.

ஒரு நாள் மாலை 4 மணி இருக்கும் நானும் டாட் அவர்களும் ஆடுகளங்களை சுற்றிப் பார்ப்பதற்காக சென்று கொண்டிருந்தோம். என்னை அறியாமல் நான் புத்தகம் எழுதப் போவது பற்றி அவரிடம் பேச்சைத் தொடங்கினேன்.

நாடகம் தானே எழுதிக் கொண்டிருந்தீர்கள். இப்பொழுது விளையாட்டு நூல்கள் எழுதப் போகிறீர்களா? என்று என்னை வியப்புடன் கேட்டார்.

நான் சிரித்துக் கொண்டே தலையசைத்தேன்.

உங்களால் தான் சும்மா இருக்க முடியாதே! வாலிபால் விளையாடப் போய் காலை ஒடித்துக் கொண்டு நான்கு மாதம் கஷ்டப்பட்டீர்கள், இப்பொழுது தான் பரவாயில்லை. இதற்குள் இன்னொரு வேலைக்கு தயாராக இருக்கிறேன் என்கிறீர்களே என்றார்.

அழகப்பா கலைகல்லூரியில் உடற் கல்வி இயக்குநராகப் பணியேற்றுக் கொண்ட பிறகும், நான் விளையாடுவதை நிறுத்த வில்லை. கைப்பந்தாட்டப் போட்டிகள் எங்கு நடைபெற்றாலும், கலந்து கொள்வதையும் நான் நிறுத்தவில்லை.

காரைக்குடியைச் சுற்றி 50 மைல் சுற்றளவிற்குள் போட்டிகள் எங்கு நடந்தாலும் என் குழு நிச்சயமாகப் பங்கேற்கும்.குறிப்பாக கைப்பந்தாட்டத்தில் மூவர் போட்டி (Tribles Match) தான் நடத்தப்படும் பள்ளத்தூரில் நடைபெற்ற கைப்பந்தாட்டப் போட்டியில் கலந்து கொள்ளப் போய் இடது கால் கணுக் கால் எலும்பு உடைந்து கட்டுப் போட்டுக் கொண்டு கிடந்தேன். தடி ஊன்றிக் கொண்டு கல்லூரியிலும் நடந்தேன். இந்த நிகழ்ச்சியைத் தான் டாட் அவர்கள் நினைவு படுத்தினார்.

ஏதாவது செய்தாக வேண்டுமே! சும்மா இருந்தால் எப்படி? என்னால் சும்மாவே இருக்க முடியவில்லை அதனால்தான் புத்தகம் எழுதும்முயற்சியில் ஈடுபட்டிருக்கிறேன். நீங்கள் ஒரு உதவி செய்யவேண்டுமே என்று கேட்டேன்.

என்ன என்றார்?

நீங்கள் தான் கூடை பந்தாட்டப் போட்டியில் சென்னை பல்கலைக் கழக அணியின் தலைவராக இரண்டாண்டுகள் ஆடியிருக்கிறீர்கள். நிறைய அனுபவம் இருக்கிறது. கூடைப் பந்தாட்டம் பற்றி நீங்கள் எனக்குக் கூறினால், குறிப்பெடுத்துக்

கொள்கிறேன் என்று கேட்டேன்.

அவர் அன்று சிரித்துக் கொண்டு கூறிய பதில் இன்னும் என் நினைவிலே பசுமையாக இருக்கிறது. இன்று தான் அவர் எனக்கு யோசனை கூறியது போல அந்த பதில் என் காதுகளில் எதிரொலித்துக் கொண்டிருக்கிறது.

Don't go to bloody any fellow for information. Got to library and refer books.

இது தான்அவரது பதில் '' யாரிடமும் போய் கேட்காதே! நூலகத்திற்குப் போ. புத்தகங்களைப் புரட்டு.''

செவியில் அறைந்தது போல அவர் தந்த பதிலை இன்னும் நான் சிரமேற்கொண்டு பின்பற்றி வருகிறேன்.

பிறரிடம்போய் குழம்பிக் கொள்ளாமல் நான் சிறப்பாக உழைக்க இதுவே எனக்கு வழி நடத்தும் கருத்தாக இருந்தது. இருக்கிறது. இன்னும் இருக்கும்.

என் இலட்சியம் எழுச்சிபெற வெற்றி பெற இந்த யோசனை தான் உதவியது என்றால் உண்மைதான். அவரை நான் இன்றும் நன்றியுடன் நினைத்துப் போற்றி வருகிறேன்.

# 6. தேடலும் தெளிவும்

விளையாட்டுத் துறையில் தமிழ் நூல் எழுத வேண்டும் என்பதை, உள்ளத்தில் உறுதி செய்தாகி விட்டது.

ஒரு நாளைக்கு ஒரு பக்கமாவது எழுதிக் கொண்டு போய் காண்பிக்க வேண்டும் என்ற கட்டளைக்கு தலை சாய்த்தாகி விட்டது.

முன்னோடி நூல்கள் ஏதாவது தமிழில் இருந்தால், முனைப்புகாட்ட முயற்சி கொள்ள முடியும் என்ற நினைவில் என் மனம் ஊஞ்சலாகிப் போனது.

ஆங்காங்கே கிடைக்கின்ற ஆங்கில விளையாட்டுத் துறை நூல்கள், சிலவற்றைக் கண்டுபிடித்து படிக்கத் தொடங்கினேன்.

அதற்கு முன் எதற்காகப் படிக்கவேண்டும் என்ற கேள்வி ஒன்று என்னுள் எழுந்தது. என்ன புத்தகம் எழுதுவது என்று தலைப்பைத் தேர்ந்தெடுத்தால் தானே, குறிப்புக்களைத் திரட்ட முடியும் கருத்துக்களை நிரப்ப முடியும்.

கதை, கவிதை, நாடகம் எழுதும் பழக்கம் ஏற்கனவே, இருப்பதால், விளையாட்டுத் துறையில் எழுதுகிற முதல் நூலையும், அதே பாணியில் எழுதவேண்டும் என்ற ஒரு யோசனை, பல நாள் சிந்தனைக்குப் பிறகு வந்தது.

அந்தக் கருத்துக்கேற்ப ஒரு தலைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன்.

விளையாட்டுக்களின் வரலாறும் வழிமுறைகளும் என்று தலைப்பு வந்ததும் தான் நினைவில் வாழ்ந்து கொண்டிருந்த குழப்பம் கொஞ்சம் வழிவிட்டு விலகிக் கொண்டது.

அடுத்த ஒரு கவலை வந்து அந்த இடத்தை ஆக்ரமித்துக் கொண்டது.

அதாவது தமிழில் விளையாட்டுப் பற்றிய நூல்களைக் கண்டாக வேண்டுமே?

'திக் திக் என்று அடிக்கின்ற மனதுடனும், ஆவலுடனும் என் தேடும்படலம் தொடங்கிற்று.

அப்போது, விளையாட்டில் ஏற்பட்ட எனது வலது தோள் மூட்டு வலியைப் போக்க மருந்துகளை நம்பியிருந்தது மாறிப் போய், உடற்பயிற்சி செய்து வலியைப் போக்கலாம் என்ற நம்பிக்கையில் உடற்பயிற்சியை முறையாகக் கற்றுக் கொண்டிருந்தேன்.

அந்த உடற்பயிற்சிகளை, ஆணழகன் போட்டியில் தமிழ் நாட்டின் வீரனாக வெற்றி பெற்றிருந்த தமிழ் நாட்டில் வீரனாக வெற்றி பெற்றிருந்த மதன்குமார் என்பவரின் பயிற்சி அரங்கில் செய்து கொண்டிருந்தேன்.

அவரிடம் ஏதாவது புத்தகம் இருக்கிறதா என்று கேட்டபோது, அவரின் குருநாதரைப் பற்றி என்னிடம் பெருமையாகக் கூறியது, இன்றும் என் நினைவில் பசுமையாக இருக்கிறது.

சோமசுந்தரச் செட்டியார் என்பது அவர் பெயர், உடற் பயிற்சியை உயிராகக் கொண்டிருந்தவர். மல்லாந்து படுத்துக் கொண்டு, தன் மார்பில் பலகை ஒன்றை வைத்து அதன் மேல்

யானையை ஏற்றி நிற்கச் செய்து சாகச வேலைகள் செய்வதில் சமர்த்தராகவும், வாழ்க்கை நெறியில் சித்தர் போலவும் வாழ்ந்தவர்.

அவர் உடற்பயிற்சியைப் பற்றி ஒரு சிறு கையேடு போல, புத்தகம் ஒன்றை எழுத யாரே மறுப்பவர்? அதில் அவர் உடற் பயிற்சியின் நன்மைகளைப் பற்றி நிறைய எழுதியிருந்தார். உடற் பயிற்சியைப் பற்றி, கேவலமாகப் பேசுபவர்கள், தங்களின் கோண புத்தியை மாற்றித் திருத்திக் கொள்கிற வகையில் ஆணித் தரமான வாதங்களை எழுப்பி, அழகாக விளக்கியிருந்தார்.

அந்த புத்தகத்தை திரு மதன்குமார் அவர்கள் எனக்குத் தந்தார்கள். (திருச்சி விளையாட்டுக் கழகத்தில் ஜிம்னாஸ்டிக்ஸ் பயிற்சியாளராகப் புகழ் பெற்றிருந்த மதன்குமார் இன்று அமரராகி விட்டார்.

அந்தப் புத்தகம், எனக்கு ஒரு உற்சாகத்ததை அளித்ததே தவிர, எனக்கு உதவுவதாக இல்லை நான் எழுத முற்பட்டது திறன் நுணுக்கங்களை (Technics) விளக்கும் புத்தகம்.

இதற்கிடையில் நான் சென்னைக்கு வரநேர்ந்த பொழுது, அங்கு எனக்கு ஒரு புத்தகம் கிடைத்தது. அதன் பெயர் பேஸ்கட்பால், இப்பொழுது நாம் கூடைப் பந்தாட்டம் என்று கூறுகிறோமே, அந்த விளையாட்டைப் பற்றி வந்த புத்தகம் அது.

சென்னையில் உள்ள இலயோலா கல்லூரியில் உடற்கல்வி இயக்குநராகப் பணியாற்றிய துரைராஜ் என்பவர் எழுதியது.

அவர் விளையாட்டு பற்றிய வழிமுறைகளை தமிழில் விளக்கியிருந்தார். ஆனால் ஆங்கிலக் கலைச் சொற்கள் அனைத்தையும் ஆங்கிலத் தமிழில் எழுதியிருந்தார். ஆங்கிலத் தமிழ் சொற்கள் என்பது ஆங்கிலச் சொல்லை அப்படியே

தமிழில் எழுதுவது.

Basket ball என்பதை பேஸ்கட்பால் என்று தலைப்பாகத் தந்திருந்தார். Throw என்பதை த்ரோ என்றும் Free throw என்பதை ப்ரீத்ரோ என்றும் Dribling என்பதை டிரிபிளிங் என்றும் இப்படியாக எல்லா சொற்களும் இருந்தன.

கொஞ்சமாவது ஆங்கிலம் தெரிந்தவர்கள் அல்லது அந்த ஆட்டத்தை அடிக்கடி ஆடிப்பழகியவர்கள் மட்டுமே, படித்துப் புரிந்துக் கொள்ள முடியும்.

எனவே, இந்த விதமாகப் புத்தகம் எழுதக் கூடாது என்பதை, அந்த புத்தகம் எனக்கு அறிவுரை வழங்கியது.

பெங்களூர் சுந்தரம் என்பவர் எழுதிய வனப்பும் வலிமையும் என்ற புத்தகம் மற்றுமொரு ஆரோக்கிய ரகசியம் என்ற புத்தகம் வி.என். குமாரசாமி எழுதியது. எல்லாம் உடற்பயிற்சி பற்றியும், யோகாசனங்கள் பற்றியும் விளக்கி எழுதப்பட்ட புத்தகங்கள்.

ஆகவே, எனக்கு உதவுவதாக எந்தப் புத்தகமும் கிடைக்கவில்லை என்றாலும் எனது தேடும்படலம் நின்ற பாடில்லை. தீவிரமடைந்தது.

விளையாட்டுத் துறையினர் யாரைப் பார்த்தாலும், அல்லது தெரிந்தவர்கள் யார் வந்தாலும், பேச்சுக்கிடையே ஏதாவது, புத்தகம் இருக்கிறதா என்ற கேள்வி வந்துவிடும். இல்லை என்ற பதிலும் உடனே கிடைத்து விடும்.

கிடைக்குமா என்று கேட்டோமே என்ற திருப்தியுடன் நான் இருந்து விடுவேன். கிடைக்காத தோல்வி பற்றி நான் கலங்குவதும் இல்லை. கண்டு கொள்வதும் இல்லை.

இதற்கிடையில் அழகப்பா கலைக் கல்லூரி நூலகத்தில் பொது அறிவை விருத்தி செய்து கொள்வதற்கான புத்தகப்

படிப்பும் , அழகப்பா உடற்கல்விக் கல்லூரி நூலகத்தில் விளையாட்டுத் துறைக்கான அறிவைப் பெருக்கிக் கொள்வதற்கான படிப்பும் நிற்காமல், நடந்து கொண்டிருந்தது.

விளையாட்டு பற்றி நூல் எழுதவேண்டும் என்ற முயற்சி ஒருபுறம் தொடர, என்னை வேறு திசைக்கு இழுத்துக் கொள்கிற இன்னொரு காரியமும் கூடவே வந்தது.

கல்லூரி நாடகங்கள் நடத்துகிறபொழுது நாடக உதவியாளராக இருந்த நிலைமை மாறி, நானே நாடகம் எழுதி பாடல் எழுதி இயக்கி தயாரிக்கின்ற பொறுப்பேற்கும் முதன்மை நிலைமைக்கும் உயர்ந்து கொண்டேன்.

அதனால் என்ன நன்மை ஏற்பட்டது என்று கேட்டால், நான் அழகப்பா கலைக் கல்லூரியை விட்டு விலகி, காரைக்குடியை விட்டுக் கிளம்புகிற புதிய சூழ்நிலை உண்டானது என்றே கூறலாம். அது என் விதிப்படியா என்றால், இல்லை விளையாட்டுத் துறை இலக்கியப்படி என்றே நான் கூறுவேன். இந்தத் தொடரை தொடர்ந்து படித்துக் கொண்டு வருகிறபோது நீங்களே புரிந்துக் கொள்வீர்கள்.

நாடகம் நடத்துகிற போது, வெளியிலிருந்து ஒப்பனை யாளர்களை, சீன்செட்டு அமைப்பாளர்களை அழைத்துக் கொள்வது வழக்கம்.

எனது நாடகத்திற்கு ஒப்பனையாளராக வந்தவர்களில் தியாகராஜன் என்பவரும், சாமிக்கண்ணு என்பவரும், நாடக நடிகர்கள். காரைக்குடியில் முற்போக்கு நாடக மன்றம் என்பது தலை சிறந்த நாடகக் குழுவாகும், அந்த நாடகக் குழுவில் இவர்கள் இருவரும் காதநாயகர்களாக நடிப்பவர்கள்.

நாடகக் கலையில் மிகுதியான ஆர்வம் உள்ள இருவரும், கல்லூரியில நாடகம் நடக்கிறபோது உதவிக்கு வந்து

கலையை ரசித்து நண்பர்களாகி விடுபவர்கள்.

எனது விதிவசம், கொஞ்சம் வேகமாகவே வேலை செய்ததுபோலும், தியாகராஜன் என்பவர் எனது வீட்டிற்கு அருகாமையில் குடியிருப்பவர் என்பது அவரின் அறிமுகத்திற்குப் பின் தான் தெரிந்தது.

நாடகக்கலையில் எனக்கிருந்த ஆர்வத்தையும், பாடல் எழுதக் கூடிய ஆற்றலையும் தெரிந்து கொண்ட தியாகராஜன், முற்போக்கு நாடக் குழுவின் நாடகாசிரியராக விளங்கிய திரு தங்கராஜ் என்பவரிடம் போய் கூற, அவரே வந்து என்னை கல்லூரியில் சந்திக்க, முற்போக்கு நாடக மன்றத்தில் நானும் ஒரு அங்கத்தினராக மாற, கவிஞா என்ற பெயரோடு, என் கலைப்பணி அங்கே ஆரம்பமாயிற்று.

நாடகம் கல்லூரியில் முடிந்து போனாலும் நாடகம் பற்றிய பேச்சும், நடிப்பும் என்னோடு ஒட்டிக் கொண்டேன். புத்தகம் எழுதும்போக்கிலே மாற்றம் இல்லையென்றாலும், எனது நேரத்தின் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு விட்டது. இல்லை பறித்து கொண்டு விட்டது.

எனது கல்லூரிப்பணி நேரம் காலை 6 மணி முதல் 8 மணி வரை, பிறகு மாலை 4 மணி முதல் 6 மணி வரை.

கல்லூரிக்கும் வீட்டிற்கும் என்று மூன்று முறை நான் போய் வரவேண்டும். மாலை 6 மணிக்குமேல் வீட்டிற்கு வந்து விளையாட்டுடையை மாற்றிக் கொண்டு, நாடக ஒத்திகைக்குப் போனால், வர இரவு 9 மணி. அதற்குமேல் புத்தகம் எழுதுவது.

இதனால் பல கஷ்டங்கள் வாழ்க்கையில் அருவியாக கொட்டிக் குதிக்கத் தொடங்கின.

# 7. விலை கேட்டு சிலை!

**கா**லை 6 மணியிலிருந்து மாலை 6 மணி வரை கல்லூரி வேலையில் பொழுது கழிந்து விடும். அதற்குப் பிறகு நாடக ஒத்திகை வேலைகள் நடக்கும். இரவு 9 மணிக்கு மேலே, புத்தகம் எழுதுவதற்கான எழுச்சி தொடங்கிவிடும்.

ஆரம்ப நாட்களில், தூக்கம் வந்து தொல்லை கொடுத்து, சிந்தனையைக் கூட துளிர்க்க விடாமல் செய்துவிடும். இதயத்திலே இருந்த இலட்சிய வேகம் மும்முரமாக இடம் பிடித்துக் கொள்ளக் கொள்ள, தூக்கம் தற்காலிகமாக இடம் பெயர்ந்து கொண்டது.

திருமணம் நடந்து கொஞ்ச நாட்கள்கூட, ஆகவில்லை. புத்தகங்கள் படிப்பதும் குறிப்பெடுப்பதும், எழுதத் தொடங்குவதும் என்பதாக, இரவின் பெரும்பொழுது கழிந்து கொண்டது.

எவ்வளவு நேரம் விழித்திருந்தாலும் காலை 6 மணிக்கு, கல்லூரி மைதானத்திற்குச் சென்று விடவேண்டும் என்பது என் தொழில் கடமை, இதனால், எனது எழுத்துப் பணி தடுமாறியதாக எனக்கு நினைவே இல்லை. கண்விழிப்பது வேறு. காலையில் விழித்து, பணிக்குப் புறப்பட்டு விடுவது வேறு. இரண்டும் எனக்குச் சங்கடமாகத் தோன்ற வில்லை.

தமிழில் முதன் முதல் விளையாட்டுத் துறை ஆங்கிலச் சொற்களை அப்படியே தமிழில் எழுதாமல், தமிழில் புதிய

சொற்கள் கண்டுபிடித்தாக வேண்டும் என்ற கட்டாயம் எனக்கு இருந்ததாலும், உட்கார்ந்த நிலையிலேயே எனது காலம் கடந்து போய்விடும்.

சில நேரங்களில் 4 மணி நேரம் அல்லது அதற்கு மேற்பட்ட நேரத்தை, எழுந்திருக்காமல், ஒரே இடத்தில் உட்கார்ந்தே கழித்ததுண்டு.

சில சமயங்களில் நாற்காலியில் உட்கார்ந்த நிலையிலேயே சரிந்து, விடிய விடிய உறங்கிப் போய் விடுவதும் உண்டு.

சரியான தமிழ்ச் சொற்களை கண்டுபிடித்தாக வேண்டும் என்ற வெறியின் காரணமாக, பகல் நேரங்களில் கூட கண்ணை மூடிக்கொண்டு, படுக்கையில் படுத்துக் கொண்டிருக்கும் 'திருவரங்கப் பள்ளி'க்கோலத்திலேயும் இருப்பேன்.

பகலில் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் விளையாட்டு வேலைகள், எழுதத் தொடங்கி விட்டால் ஆணியடித்தது போல, ஒரே இடத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கும் நிலைமை. இப்படி இரண்டு விதமான நிலைகளில் சுகமாக இருக்கப் பழகி கொண்டது என் தேகம். அதுவே என் பணிகளுக்கு இதமாக இருந்தது.

எப்பொழுது உறங்குவேன்? எந்த நேரத்தில் விழித்துக் கொள்வேன் என்று எனக்கே தெரியாது. அதனால் இரவில் விழித்துக் கொண்ட பிறகு பேப்பர் பேனா இவைகளைத் தேடிக், கண்டுபிடிக்க வேண்டும். அந்த முயற்சிக்குள்ளே முகம் காட்டிய கற்பனையின் முனை முறிந்து போய் விடும் என்பதால், என் படுக்கையின் பக்கத்திலே, திறந்த நோட்டு புத்தகமும், மூடிபோடாமல் திறந்தே இருக்கும் பேனாவும் எப்பொழுதும் இருக்கும். இரண்டு மூன்று கிடக்கும்.

விளையாட்டுக்களின் வரலாறு எழுதுவதிலே எனக்கு எந்தவித சிரமமும் ஏற்படவில்லை. மாறாக, தமிழில் கலைச்

சொற்களை உண்டாக்க வேண்டும் என்கிற போது தான், நிறைய சிந்திக்க வேண்டியதாயிற்று.

கால் பந்தாட்டம் பற்றித்தான், முதன் முதலில் எழுதத் தொடங்கினேன். கால் பந்தாட்டம் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களை, பல விளையாட்டுத் துறை ஆங்கில நூல்களிலும் கலைக் களஞ்சியம் நூல்களிலும் எடுத்துக் கொண்டேன்.

விளையாட்டுத் திறன் நுணுக்கங்களை எழுதுகிற போதுதான், அதற்கான புதிய சொற்களைப் படைக்க, பெரிதும் பாடுபட்டேன். ஆங்கில கலைச் சொல்லுக்குத் தமிழில் அர்த்தம் எழுதுவது என்பது எளிது தான். ஆனால், ஆங்கிலச் சொல்லின் அர்த்தம் மாறுபடாமல், அதே நேரத்தில் **பதவுரை** போல் நீண்ட வாக்கியமாகப் போய் விடாமல், ஆங்கிலச் சொல்லுக்கு எத்தனை எழுத்துக்களோ, அது போலவே அதனை விளக்கவரும் தமிழ்ச் சொல்லுக்கும் இருக்க வேண்டும் என்று நான் முதலிலே முடிவு கட்டிக் கொண்டதால் தான், என் சிந்தனையில் சிக்கல்கள் தீராததாய் தொடர்ந்தன. தொல்லை தந்தன.

கால் பந்தாட்டத்திலே off side என்று ஒரு சொல். அதற்குரிய பொருளை எழுத முயற்சித்தால், ஒரு பக்கத்திற்குப் போகிறது. சுருக்கமாகச் சொல்ல வந்தால், ஒருவரிக்கு மேல் வருகிறது.

ஆங்கிலச் சொல்லில் உள்ள வார்த்தைகள் எண்ணிக்கை போலவே, தமிழிலும் தர வேண்டும் என்று ஒரு மாத காலம் முயற்சித்தும், கண்டுபிடிக்க முடியாமல் திகைத்தேன்.

ஒரு நாள் மாலையில், காலாற நடந்து செல்லலாம் என்று ஏரிக்கரை ஓரமாக, (காரைக்குடியில்) நடந்து கொண்டிருந்தேன். அப்போது இரண்டு பேர், வயதான மாதர்கள் பேசிக் கொண்டு சென்றனர்.

நீ இத்தனை நாள் எங்கே போயிருந்தாய், உன்னைக் காணவில்லையே என்று ஒருவர் கேட்க, **அயலூருக்குப்** போயிருந்தேன் என்று மற்றவர் சொல்ல, அந்த அயலூர் என்ற சொல் என் காதில் அழுத்தந் திருத்தமாக வந்து விழுந்தது.

கால் பந்தாட்டத்தில், ஆட்ட நேரத்தின்போது எதிராட்டக் காரர்களின் பகுதியில் தனியே போய் ஒரு ஆட்டக்காரர் நின்றால், அவர் அடுத்தவர் இடத்தில் இருக்கிறார் என்ற சொல்லுக்குத் தமிழில், எதிர்ப் பகுதி இடம், என்று சொல்லலாம் என்று நினைத்து, எந்த சொல்லைப் போடுவது, என்று குழம்பிக் கொண்டிருந்த போது தான், இரண்டு 'பேரிளம் பெண்கள்' பேசிய பேச்சு எனக்கு உதவி செய்தது.

ஆகவே, offside என்ற சொல்லுக்கு, **அயலிடம்** என்ற தமிழ்ச் சொல்லை உருவாக்கினேன். இப்படி புதிய தமிழ்ச் சொற்கள் எந்த நேரத்தில், எப்படி உருவாகும், எந்த மாதிரி சூழ்நிலை ஏற்படும் என்று தெரியாததால் தான் நான் மற்றவர்கள் சத்தமாகப் பேசுகிற உரையாடலையும் சொற்பொழிவு களையும், கூர்ந்து கவனிப்பதில் ஆர்வம் காட்ட ஆரம்பித்தேன்.

இப்படியாக, ஏறத்தாழ 500 சொற்களுக்கு மேல் தமிழில் புதிய சொற்களை உருவாக்கிக் கொண்டு 300 பக்கங்களுக்கும் மேலாக முதல் புத்தகத்தை எழுதி முடித்தேன். அதாவது 1961-ம் ஆண்டு தொடங்கி, 1964ம் ஆண்டுவரை, முதல் புத்தகம் எழுதும் வேலை தொடர்ந்தது.

நான் எழுதுகிற குறிப்புக்களை, அவ்வப்போது **பேராசிரியர் குழந்தைநாதன்** அவர்களிடம் காட்டி, அவரிடம் 'சபாஷ்' வாங்கிக் கொள்வேன்.

அவருடைய அறிவுரையை நான் ஆர்வமாகக் கேட்டு செயல் படுவது, அவருக்குப் பெருமையாக இருந்தது. அதனால் என்மேல் அவர் அதிகமான அன்பைப் பொழியலானார்.

எனக்கும் ஒருவர் வழிகாட்டியாக இருக்கிறார். அவரது மனங் கோணாமல் நடந்து கொள்ளவேண்டும் என்பதில், நான் சிறிதும் தவறாமல் தொடர்ந்து கொண்டேன்.

300 பக்கங்களுக்கு மேலாக எழுதி முடித்து, அந்தத் தாள்களை திரும்பத் திரும்பப் படித்துப் பார்ப்பேன். சில இடங்களில் எனக்கு திருப்தி ஏற்படாதபோது மீண்டும் அதனைக் கிழித்து எறிந்து விட்டு திருத்தி எழுதுவேன்.

இப்படி அந்த 300 பக்கங்களை, மூன்று முறை திருத்தி எழுதி முடித்தேன். புத்தகம் எழுதி முடித்த பிறகு, மனதில் நிறைவுதான் ஏற்பட்டது. ஆனால் கூடவே ஒரு திகைப்பும், நம்மால் முடியுமா என்ற தவிப்பும் ஏற்பட்டது.

அதாவது, மூன்றாண்டு முயற்சிகளால் உருவான இந்த நூலை, இரவு பகல் பாராது, இலட்சிய வேகத்தினால் விளைந்த இந்த நூலை, புத்தக வடிவில் எப்படி கொண்டு வருவது?

எனக்கோ, புத்தகம் போடக் கூடிய அளவுக்கு பண வசதி இல்லை. புத்தகம் போட்டாலும், விற்கக் கூடிய முறைகளும் தெரியாது. எனவே, என்ன செய்வது என்ற தவிப்பைத் தீர்க்க, குழந்தைநாதன் அவர்களும் கூடவே வந்தார்.

ஆமாம், நானும் அவரும் காரைக்குடியில் அப்போது இருந்த நான்கைந்து பதிப்பகங்களுக்கு புனித யாத்திரை போகும் பயபக்தியோடு சென்று வந்தோம்.

கல்லூரியில் பணியாற்றுகின்ற பேராசிரியர்கள் என்பதால், கைகுவித்து வணக்கம் செய்து, கௌரவமாக வரவேற்று, காஃபிக்கும் ஆர்டர் செய்து, புன்சிரிப்புடன் பேச்சைத் தொடங்கி, புத்தகம் போடவேண்டும் என்று சொன்னவுடன், பாம்பைப் பக்கத்தில் பார்த்தவர்கள் போல, பதறிப்போய் விடுவார்கள். முடிந்தால், பேச்சை மாற்றி விடுவார்கள். பலதடவைப் பேசிப் பார்த்தும் பயனில்லாமல் போயிற்று.

புத்தகம் போட முடியாது என்ற முடிவுக்கு நாங்கள் வந்து, நம்பிக்கை இழந்து நின்றபோது, ஒரு அழகான அழைப்பு வந்தது. ஏன் அழகான அழைப்பு என்றேன் என்றால், அந்த அழைப்பு விடுத்த இடம் **அழகு பதிப்பகம்** என்பதால் தான்.

''**தமிழ் இலக்கிய வரலாற்றிலே உங்கள் நூல் முதல் நூல். புதிய நூல் என்பதால்**, பதிப்பிக்க நான் ஒப்புக் கொள்கிறேன். இந்நூல் விற்பனையாகுமா என்பது எனக்குள் இருக்கும் சந்தேகம். அதை எண்ணி எண்ணிக் குழம்பாமல், செயல்பட்டுப் பார்ப்பது என்ற முடிவுக்கு வந்தேன்'' என்று எங்களிடம் பதிப்பக உரிமையாளர் கூறியது, தேன் வந்து காதிலே பாய்ந்த சேதியாகக் கேட்டுக் கொண்டிருந்தோம். அடுத்து அவர் கூறியதுதான் தேனாக இனித்த காதில், வேம்பாகக் கசக்கும் சொற்களாக வந்து விழுந்தன.

இது ஒரு பரிசோதனைப் புத்தகம் என்பதால், பணம் செலவழித்து நான் அழகாகவே புத்தகத்தைப் பதிப்பித்து விடுகிறேன். ஆனால், ஆசிரியருக்கான ராயல்டியோ, எழுத்துக் கூலியோ என்னால், நீங்கள் எதிர்பார்க்கும் அளவுக்குத் தரமுடியாது. ஆகவே, நான் தரக் கூடிய தொகையை நீங்கள் ஒப்புக் கொண்டால், நான் புத்தகத்தை பதிப்பிக்கத் தயார் என்றார் பதிப்பாசிரியர்.

நாங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம். எங்களை அறியாமல், நாங்கள் எச்சிலை விழுங்கிக் கொண்டோம். எச்சில் விழுங்கும் சத்தம் எங்களுக்குத் தெளிவாகவே கேட்டது. அப்படி ஓர் அமைதி எங்களுக்கிடையே அலைபாய்ந்து கிடந்தது. சிறிது நேர யோசனைக்குப் பிறகு தலையை ஆட்டினேன். நான் புத்தகத்தை பதிப்பிக்கத் தயார் என்றார் பதிப்பாசிரியர்.

நாங்கள் இருவரும் மீண்டும் ஒருவரை ஒருவர் பார்த்துக்

கொண்டோம். எங்களுக்குள் ஏராளமான கேள்விகள். அவரது முகத்திலே புன்னகை. பேச்சிலே பூடகம் புதிர். நெகிழ்ச்சியும், மகிழ்ச்சியும், புகழ்ச்சியும், கொஞ்ச நேரத்தில் எங்களைக் குலுக்கி விட்டன. உலுக்கி விட்டன. நான் தரும் தொகை என்றாரே எவ்வளவு என்பதை அறிந்து கொள்ள நாடித் துடிப்பு வெடித் துடிப்பாக வெளி வந்தது.

பதிப்பாளர் சிரித்துக் கொண்டே சொன்னார். *150* ரூபாய் தருகிறேன். புத்தகத்தின் முழு உரிமையையும் எனக்கு எழுதித் தந்து விடவேண்டும் என்பது தான் அந்த நிபந்தனை.

*150 ரூபாய் தானா?*

மூன்று ஆண்டு காலம் உழைத்த உழைப்புக்கு *150* ரூபாய் தானா ? இருவரும் சிலையாகிப் போயிருந்தோம்.

# 8. என்றாலும் நின்றேனில்லை

விளையாட்டுக்களின் வரலாறும் வழி முறைகளும் என்ற ஒரு நூலை எழுத எனக்கு 3 ஆண்டுகள் ஆயின. இரவும், பகலும் அதே சிந்தனை. ஒரே சிந்தனை.

300 பக்கங்களுக்கு மேல் உள்ள அந்த நூலை, 3 முறை திருப்பித் திருப்பி எழுதியும், திருத்தியும், பொருத்தியும், எழுதியும், திருப்திபடாத நான், நான்காவது முறை எழுதிய பிறகுதான் ஓய்ந்தேன்.

ஏனென்றால், என் உடல் சக்தியும் மனப்பொறுமையும் அதற்குமேல் அனுமதிக்க வில்லை.

இப்படிப்பட்ட இணையிலா என் உழைப்பிற்கு கூலி 150 ரூபாய்தானா? சங்கடத்தால் நெளிந்து கொள்ளத்தான் முடிந்தது.

எங்கேயாவது வசதியான இடத்தில் என் குழந்தை வாழ்ந்தால் போதும் என்று பிள்ளையைக் கொடுத்து விடுகிற பெற்றவளைப்போல, நானும் பெரும் எதிர்பார்ப்புடன் சரியென்று சம்மதம் தெரிவித்துவிட்டேன்.

முன் பணமாக 50 ரூபாய், மீதி ரூபாய்க்கு புத்தகங்களாக எனக்குக் கொடுத்தார்கள். கணக்கு முடிந்தது..... ஆனால் காரியம் முடியவில்லை.

இந்தப் புத்தகம் விலைபோகுமா? என்ற வினாவுக்கு

விடை, ஆறுமாத காலத்திற்குள் கிடைத்துவிட்டது. போட்ட ஆயிரம் புத்தகமும் விற்றுத் தீர்ந்து போனது. ஆனால் அடுத்த புத்தகம் அங்கே அச்சாகவில்லை.

அடுத்த புத்தகம் எழுதுவதற்கான ஆரம்ப நிலையை, ஆண்டவனே எனக்குக் கட்டளையிட்டது போல, சூழ்நிலைகள் எனக்குத் தூண்டிவிட்டன. தூண்டி விட்டன என்று ஏன் எழுதுகிறேன் என்றால், யாராவது தூண்டி விட்டிருந்தால், நான் முகத்துக்கு நேராக சரியென்று சொல்லிவிட்டு, சுகத்தைக் கெடுக்கிற வேலையில் ஏன் சிக்கிக் கொள்ள வேண்டும் என்று ஒதுங்கி யிருப்பேன்.

ஆனால், தூண்டிலில் மீன் மாட்டிக் கொள்வது போல, எழுத்துத் துறையிலே ஆழ்ந்து போகும் அளவுக்கு என்னை சூழ்நிலைகள் நன்றாக மாட்டிவிட்டன. மீட்டிவிட்டன. மூட்டிவிட்டன.

எனது முதல் புத்தகத்தைப் படித்து முடித்த உடற்கல்விஆசிரியர்கள் பலர், என்னை வந்து சந்திக்கத் தொடங்கினர். அப்பொழுது நான், அழகப்பா உடற்கல்விக் கல்லூரியின் முன்னாள் மாணவர் கழகத்தின் தலைவராக இருந்தேன்.

விளையாட்டுக்கள் பற்றிய விதி முறைகள் எல்லாம், ஆங்கிலத்திலே இருந்ததால், ஆசிரியர்கள் பலருக்கு சரியாக முறையாக புரியவில்லை என்ற வருத்தம் இருந்தது. அதனால் அந்த ஆங்கில விதிகளை நீங்கள்தான் தமிழில் எழுதித் தரவேண்டும் என்று அடிக்கடி கேட்க ஆரம்பித்தனர்.

அவர்களின் கோரிக்கை நியாயமானதாக எனக்குப் பட்டது.

ஒரு புத்தகம் எழுதினவுடனே எனக்குள் இருந்த அறிவு முழுவதும் தீர்ந்துபோய்விட்டது என்ற நினைவும், இன்னொரு

புத்தகம் எழுதக் கூடிய தலைப்பு கிடைக்காமற் போய்விடுமோ என்ற திகைப்பும் எனக்குள் மனப்போராட்டமாக இருந்த காலநிலை அது.

உடற்கல்வி ஆசிரியர்கள், உடற்கல்விக் கல்லூரி மாணவர்கள் விடுத்த விண்ணப்பமும், வேண்டுகோளும் எனக்குத் தூண்டு கோலாக மட்டுமன்றி, தூண்டில் முள்ளாகவும் இருந்தது.

**விளையாட்டுக்களின் விதிகள்** என்று எனது புத்தகத்திற்குத் தலைப்பும் தந்துவிட்டேன். அதற்குப் பிறகுதான், பல சோதனைகள் எனக்கு வந்தன. எனக்கென்று ஒரு தெளிவான சிந்திக்கும் உணர்வும் தோன்றலாயின.

அகில உலக விளையாட்டுக்கழகங்களின் முடிவுக் கேற்ப வருகிற விதிமுறைகளைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டும் என்றால், யாரிடம் அனுமதி வாங்குவது? இந்தத் திகைப்பான நினைவுக்கு, தீர்வு ஏற்பட பலமாதங்கள் ஓடிவிட்டன.

யாருக்கு அனுமதி கேட்டு எழுதினாலும், பதிலே இல்லை. உங்கள் கடிதம் கிடைத்தது என்று கூட யாரும் பதில் எழுதவில்லை.

காத்திருந்து காத்திருந்து காலம் போனது தான் மிச்சம், இனி என்ன?

இந்தத் தமிழாக்கப்பணி, தமிழ் கூறும் நல்லுகத்திற்கும், தமிழறியும் மக்களுக்கும் தானே பயன்படப் போகிறது? என்ற துணிவான நினைவுடன், என் தமிழாக்கப் பணியைத் தொடங்கி விட்டேன்.

அன்று 1964ம் ஆண்டு எழுதிய கடிதங்களுக்கு, இன்றுவரை பதிலும் இல்லை. தனிப்பட்ட முறையில் எனக்குத் தகவலும் இல்லை.

விளையாட்டுக்களைக் கற்றுத் தருகிற பள்ளிகள், கல்லூரிகள், அங்கே பயிலுகிற மாணவர்கள், பயிற்றுவிக்கிற ஆசிரியர்கள் இவர்கள் பயன்படும்படித்தான், இந்த நூலை எளிதாக, இனிதாக அமைகின்ற வண்ணம் எழுத வேண்டும் என்ற முயற்சியுடன் ஆரம்பித்தேன்.

மொழிபெயர்ப்பு வேலை எனக்கு முதல் வேலையாயிற்றே. யாரிடமாவது காட்டினால், அவர்கள் தவறைத் திருத்துவார்கள், தகுந்த வழியில் நடத்துவார்கள் என்று நினைத்து, உடற்கல்வித் துறையில் பணிபுரிந்த பலரிடம் போய் பெரும் பிரயாசைப்பட்டு எழுதியதைக் காட்டினேன்.

அவர்கள் காட்டிய அலட்சியம் என்னை அயர வைத்தது. நான் ஏதோ அவர்களிடம் கடன் கேட்கப் போனது போல் நினைத்துக் கொண்டு, முகத்தைத் திருப்பிக் கொண்டனர்.

எனக்கு உதவக்கூடாது என்று இல்லை. அவர்களுக்குத் தெரியவில்லை. தங்களுக்குத் தெரியாது என்று என்னிடம் சொல்ல அவர்களுக்கு வெட்கம், அதனால், என்னை அலட்சியப் படுத்தினாலாவது அவர்களிடம் நான் திரும்பவும் வரமாட்டேன் என்று நடந்து கொண்டனர் என்று பல வருடங்களுக்குப் பிறகுதான் புரிந்தது.

பலரிடம் காட்டினால், பிழைகள் இல்லாமல் இருக்கும். நல்ல புத்தகமாக அமையும் என்பது என் எண்ணம். என் மேதாவித்தனத்தைக் காட்டுவதற்காகவே, அவர்களிடம் வருகிறேன் என்று, சிலர் நினைத்துக் கொண்டு என்னை நான் இல்லாதபோது, தூற்றியிருக்கின்றனர்.

அந்த விஷயத்தையும் அப்புறம்தான் புரிந்து கொண்டேன்.

ஒரு சிலர் நான் எழுதியதை வாங்கிப் படித்து விட்டு, இப்படி செய்தால் நன்றாக இருக்கும் என்றனர். அவர்கள் போகாத ஊருக்கு வழிகாட்டு வது போல, எனக்கு புத்திமதி

கூறியிருக்கின்றார்கள்.

இந்த வேலையெல்லாம் உனக்கு எதற்கு? தமிழில் எழுதி நீ ஒன்றும் கிழித்துவிட போவதில்லை. இது யாருக்கும் பயன்படப் போவதில்லை. இவ்வளவு கஷ்டப்பட்டு ஒரு புண்ணியமும் உனக்கில்லை என்று ஒரு புலம்ப லோடு, எழுதிய தாள்களைத் திருப்பிக் கொடுத்தார்கள் சிலர்.

நானும் வாங்கிக் கொள்வேன். அவர்கள் பேச்சிலே, எனக்கு எது உதவுமோ, அவற்றை மட்டும் எடுத்துக் கொள்வேன். மீதி வார்த்தைகள் எல்லாம் என் காதிலே மோதி, கால்களுக்கடியில் விழுந்து விடும். நானும் 'கருமமே கண்ணாயினார்' என்றபடி திரும்பி வந்து விடுவேன்.

இப்படியாக, விளையாட்டுகளின் விதிகள் என்ற புத்தகத்தை, நானே எழுதி எழுதி, திரும்பப் படித்துப் படித்துத் திருத்தி, பல ஆங்கிலச் சொற்களுக்கு தமிழில் வார்த்தைகள் கண்டுபிடித்து எழுதி முடித்தேன்.

மீண்டும் ஒரு குழப்பம், தடுமாற்றம்.

இந்தப் புத்தகத்தை யார் மூலமாகப் பதிப்பித்து வெளிக்கொணர்வது?

அழகப்பா உடற்கல்விக் கல்லூரி முதல்வராக அப்பொழுதிருந்த டாக்டர் ராப்சன் அவர்களிடம் ஒருநாள் பேசிக் கொண்டிருந்தபோது, முன்னாள் மாணவர்கள் கழகம் (Alumni Association) பற்றிய பேச்சு வந்தது.

கழகத்தின் நிதி நிலை பற்றாக்குறையாக இருக்கிறது. அதை எப்படியாவது சமாளித்திட வேண்டுமே என்றார் முதல்வர்.

எனது புத்தகத்தை வெளியிட்டீர்களானால், இந்தப் பிரச்சினையை எளிதாக சமாளிக்கலாம் என்றேன். அவர் மனம்

ஏற்றுக் கொள்கிற வகையில் பேச ஆரம்பித்தேன். பிறகு ஒரு முடிவுக்கு வந்தோம்.

முன்னாள் மாணவர் கழகத்தின் சார்பாக இந்தப் புத்தகத்தை வெளியிட வேண்டும். ஆகிற செலவு போக, வருகிற லாபத்தை சரி பாதியாகப் பிரித்து எனக்கும் கழகத்திற்கும் கொடுத்து விடவேண்டும்.

இப்படி ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது.

1965ம் ஆண்டு 2-வது புத்தகம் வெளிவந்து விட்டது. கையில் காசு கிடைக்கவில்லை என்றாலும், கல்லூரி மூலமாக படிக்கும் உடற்கல்வி மாணவர்களுக்கு கட்டாயமாகப் புத்தகங்கள் கொடுக்கப்படுவதால், சரியான இடத்தில் தான் சேர்ந்திருக்கிறது என்பது தான் எனக்கு பெரும் சந்தோஷத்தைக் கொடுத்தது.

அந்தப் புத்தகம் விற்றதற்குப் பிறகு, இந்தியாவிலுள்ள உடற்கல்விக் கல்லூரியின் பழைய மாணவர்கள் சங்கங்களிலே, அழகப்பா கல்லூரி மாணவர் கழகம் தான் பணக்காரக் கழகமாக இருக்கிறது என்று பலரும் பாராட்டிப் பேசுகின்ற அளவுக்கு, பணத்தையும் புகழையும் ஈட்டித்தந்தது.

மாணவர்களுக்கும் மற்ற விளையாட்டு ஆர்வலர்களுக்கும் பயன் தந்தது. மாணவர் கழகத்திற்கும் நல்ல வருமானம் வந்தது.

ஏனோ தெரியவில்லை சில வயிற்றெரிச்சல் வாத்தியார்கள் எனது புத்தகத்தை அந்தக் கல்லூரியில் விற்க முடியாதபடி செய்து மகிழ்ந்து கொண்டார்கள். அந்தப் பொறாமைக்காரர்களால், எனது புத்தகத்தை விற்கச் செய்யாதபடிதான் நிறுத்த முடிந்ததே தவிர, எனது இலக்கிய வேட்கையை, வேள்வியை, இலட்சியத்தை, இதயதாகத்தை, அவர்களால் நிறுத்த முடியவில்லை.

ஏனென்றால், 2வது புத்தகத்திலேயே எனக்கு எதிர்ப்பு அவர்களால் வந்து விட்டது என்றாலும் 100க்கு மேலாக வருவதை நிறுத்த இயலவில்லை.

சிரித்து உறவாடிய சிநேகிதர்கள்தான் இந்த சகிக்க முடியாத காரியத்தில் இறங்கினார்கள். இன்றும் அவர்கள் என்னை நேரில் பார்க்கும் போது கட்டித் தழுவிக் கொள்கிறார்கள், முகம் மறைந்ததும் முதுகுப்புறம் தூற்றியும் சபித்தும் சுகம் காணுகின்றார்கள்.

விளையாட்டுகளுக்குத் தான் விதிகளை எழுத முடிந்தது என்று வெற்றிப் புன்னகையில் திளைத்திருந்தேன். ஆனால், விளையாட்டுத் தனமாக என்னோடு விதி விளையாட வருவது தெரியாமலே நான் மகிழ்ந்திருந்தேன்.

ஒரு நாள் நாடக ஒத்திகை இருக்கிறது என்று நாடக ஆசிரியர் காரைக்குடி தங்கராஜ் அவர்களிட மிருந்து அழைப்பு வந்தது. கல்லூரி விட்டதும் வருகிறேன் என்று வந்த ஆளிடம் சொல்லி அனுப்பினேன்.

1965ம் ஆண்டு மார்ச்சுமாதத்தில் ஒரு நாள் மாலை 3 மணி இருக்கும். தங்கராஜ் அவர்களின் வீட்டிற்கு போன போது நான்கைந்து பேர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவர் புதியவர்.

வேட்டியும், ஜிப்பாவும் அணிந்து, நெற்றியிலே சாந்துப் பொட்டு குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டிருந்தார். பார்த்தால் மலையாளி போல இருந்தார். பெயர் நினைவுக்கு வரவில்லை.

கல்லூரியில் பேராசிரியர் , கவிஞர், நடிகரும் கூட என்று அந்தப் புதியவருக்கு என்னை நாடக ஆசிரியர் அறிமுகப்படுத்தி வைத்தார். வணக்கம் செய்தேன். அவரும் புன்சிரிப்புடன் கை

குவித்தபடி உங்களைப் பற்றி சில விஷயங்கள் சொல்லலாமா என்றார்.

ஜோசியமா என்றேன்......

ஜோசியம் என்று இல்லை. ஆனால், சொல்ல வேண்டும் போல இருக்கிறது என்ற பீடிகையுடன் பேச்சை ஆரம்பித்தார். உங்களுக்கு மகிழ்ச்சி தருமானால் சொல்லலாம் என்றேன்.

உங்கள் சாமுத்திரிகா லட்சணப்படி பார்த்தால், உங்கள் முதுகில் வலப்புறப் பகுதியில் ஒரு பெரிய மச்சம் இருக்கவேண்டுமே என்றார். முகத்தைப் பார்த்து ஜோசியமா? எனக்கு நம்பிக்கை இல்லை என்றேன்.

வாக்குவாதம் எதற்கு? சட்டையைக் கழற்றுங்கள். பார்த்து விடுவோம் என்று தங்கராஜ் சமாதானப்படுத்தினார். சட்டையைக் கழற்றினேன். உண்மை தான். முதுகிலே அவர் கூறிய இடத்தில் ஒரு மச்சம் இருந்தது.

கொஞ்சம் அசடு வழிய சிரித்தபடி அவரை பார்த்தேன். உங்களுக்கு ஆட்சேபனை இல்லையென்றால், இன்னும் சிலவற்றை கூறலாமா என்றார். சம்மதம் தெரிவித்தேன்.

நீங்கள் வீட்டிற்குப் போங்கள். உங்கள் மனைவியிடம் கேளுங்கள். உங்களுக்கு வாரிசாக ஒரு ஆண் குழந்தை பிறக்கப் போகிறது என்றார். முதல் இரண்டு குழந்தைகளும் பெண் குழந்தைகள். மூன்றாவதும் பெண் குழந்தையாயிருக்கும். அதனால், இப்போது வேண்டாம் என்று இருந்த சமயத்தில், அவரது ஜோசியம் இப்படி கூறியதும் அதிர்ச்சியடைந்தேன்.

இது என்ன அதிர்ச்சி? இதையும் கேளுங்கள். இப்போது செய்து கொண்டிருக்கிற வேலையில் நீங்கள் தொடர்ந்து இருக்கப்போவதில்லை. இன்னும் இரண்டு மாதத்தில் இந்த வேலையை ராஜினாமா செய்து விட்டு, கிழக்குத் திசை நோக்கி,

கிளம்பப் போகிறீர்கள் என்றார் அவர்.

என்னய்யா? வேலை நிரந்தரம் ஆகி இப்போது தான் கவலையில்லாமல் இருக்கிறேன். காரைக் குடியிலேயே ஒரு வீட்டைக் கட்டிக் கொண்டு தங்கி விடலாம் என்றல்லவா உறுதி செய்திருக்கிறேன்.

இப்படி கூறுகிறீர்களே! என்றேன்.

இன்னும் இரண்டு விஷயங்களைக் கூறி, வீட்டிற்குப் போனதும் விசாரியுங்கள். நாளைக்கு சந்திப்போம் என்று புறப்பட்டு விட்டார். அவரைப் பற்றி அப்போது நான் அதிகமாக விசாரிக்க வில்லை. அவருடைய வார்த்தை எவ்வளவு உண்மை என்று இப்போது நன்றாகவே உணர்கிறேன்.

நாடக ஒத்திகையில் என் மனம் லயிக்க வில்லை. ஜோசியத்தில் எனக்கு நம்பிக்கை இல்லை தான். அவர் முகம் பார்த்துக் கூறியவைகளை என்னால் நம்பவும் முடியவில்லை. நம்பாமலும் இருக்க முடியவில்லை. வீட்டை நோக்கி விரைந்தேன். விவரம் தெரிந்து கொள்ள விதியும் எனக்கு முன்னே வேகமாகப் போய் என்னை வரவேற்றது போல இருந்தது. நடந்த பல விஷயங்களை பார்த்த போது, எனக்கு அப்படித்தான் இருந்தது.

# 9. சக்தியின் சாகசம்!

வீட்டிற்கு விரைந்து வந்தேன்.

ஜோசியர் சொன்ன விவரத்தைக் கேட்டேன். மனைவியும் ஆமாம் என்றாள்.

இரண்டு விஷயங்கள் உண்மை என்றால், மூன்றாவது அவர் சொன்னதும் நடந்துவிடுமோ?

அழகப்பா கலைக்கல்லூரியில் உடற் கல்வி இயக்குநராக, நிரந்தரப் பணியில் அமர்ந்திருந்த நான், விரைவில் வேலையை ராஜினாமா செய்து விட்டு வெளியேறி விடுவேன் என்று அவர் சொன்ன ஜோசியம் பலித்து விடுமோ?

அதெப்படி நடந்துவிடும்? நான் ராஜினாமா செய்தால்தானே நடக்கும், நான் உறுதியாக இருக்கும்வரை, ஒன்றும் நடந்து விடாது. என்னையறியாமல் நடந்தாலும், இதை நடக்கவிடேன் என்றபடி, எண்ணத்தில் தெளிவாகவே இருந்தேன்.

என்னையும் மீறி ஒரு சக்தி இருக்கிறது. அது அனைவரையும் இயக்குகிறது என்ற அனுபவத்தை அறியாத இளம் வயதல்லவா! ஆகவே அந்த சக்தி என்னை எப்படி வலைக்குள் விழ வைத்து வெற்றி கண்டது என்பதுதான் வியப்புக்கும் மேலான வியப்பாக இருக்கிறது.

காரைக்குடியில் முற்போக்கு நாடகமன்றம் என்ற பெயரில், கலைக்குழு ஒன்றை வைத்து கதை எழுதி, இயக்கி, தயாரித்து நடத்தி வந்தவர் தங்கராஜ் என்பதை நான் முன்பே குறிப்பிட்டிருக்கிறேன்.

அந்த நாடகமன்றத்தில் நானும் கவிஞனாக இருந்து, பாடல்கள் எழுதி நடித்தும் வந்தேன் என்பதையும் நான் முன்பே எழுதியிருக்கிறேன்.

கதாசிரியர் தங்கராஜ் என்பவர், சினிமாவில் கதை, வசனம் எழுத பல ஆண்டுகளாக முயற்சி செய்து வருகிறார் என்பதாலேயே, அவருக்கு செல்வாக்கும் அதிகமாக இருந்தது.

பல வெற்றி நாடகங்களை எழுதித் தயாரித்தவர் என்பதுடன், சினிமாத் துறைக்கும் சீக்கிரம் போய் விடுவார் என்பதால், அவருக்கு உதவி, தாங்களும் தங்கள் ஆசையை பூர்த்தி செய்து கொள்ள பட்டாம் பூச்சியாகப் பறந்தவர் பலர். அவருக்கு தனி மவுசும் இருந்த நேரம் அது.

நல்ல நாடகாசிரியராக அவர் இருந்தாரே தவிர, நல்ல வசதியான சூழ்நிலையில் இல்லை. வயிற்றுப்பாடு வறுமைப்பாடு கொஞ்சம் அதிகம். நாங்கள் அதாவது மன்ற உறுப்பினர்கள் அடிக்கடி உதவி செய்வோம்.

சினிமாவுக்கு கதை வசனம் வாய்ப்புத்தேட அவர் சென்னைக்கு வரும்பொழுதெல்லாம் என்னிடம் அவர் உதவி கேட்பார். நானும் நண்பர் என்ற காரணத்திற்காக, உதவுவேன். அதாவது எனக்கு சம்பளம் 200 ரூபாயாக இருந்தபொழுது 50 ரூபாய் வரை தருவேன்.

காரைக்குடிக்கும் சென்னைக்கும் அப்போது ரயில் டிக்கட் 7 ரூபாய், 50 பைசாவாக இருந்த நேரம், அதனால் 50 ரூபாய் என்பது பயணச் செலவையும் பலநாள் சாப்பாடு பிரச்சினைகளையும் தீர்க்கப் பயன்பட்டது.

அவர் கதை வசனம் என்றால், நான் பாடல்கள் எல்லாவற்றையும் எழுதுகிற வாய்ப்பைப் பெறுவது என்பது அவருடைய ஆசை. அதற்காகவும் உதவி செய்தேன் என்பது உண்மையானாலும், உண்மையான கலையார்வம் என்னுள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த கால கட்டத்தில்தான், இந்த நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

அவர் சென்னைக்கு வந்து (1965 ஆம் ஆண்டு) நாகப்பன் என்பவருடன் நட்பு கொண்டு, சினிமா தயாரிக்கின்ற சூழ்நிலையை ஏற்படுத்திக் கொண்டார் தங்கராஜ்.

சேம்பியன் மூவிஸ் என்பது சினிமா கம்பெனியின் பெயர். ஒரு ரூபாய் என்பது கதையின் பெயர். கதை வசனம் தங்கராஜ், டைரக்‌ஷன் ராஜேந்திரன்.

சினிமா ஆபிஸ் வைக்கின்ற ஒரு இடத்தை பிடித்துவிட்டால், பைனான்ஸ் வாங்குவது எளிது. தரவும் ஒருவர் தயாராக இருக்கிறார் என்கிற சூழ்நிலை.

என்னிடம் வந்தார் தங்கராஜ். சென்னையில் இப்படிப்பட்ட சூழ்நிலை அமைந்திருக்கிறது. ஆரம்ப செலவுக்கு நீங்கள் ஆயிரம் ரூபாய் தரவேண்டும். அதற்குப் பிறகு, எல்லா வேலைகளும் எளிதாக நடந்து விடும் என்று தங்கராஜ் என்னிடம் விவரித்தார். இல்லை இல்லை. வற்புறுத்தினார்.

என் வாழ்க்கையே உங்கள் கையில்தான் இருக்கிறது. இந்த உதவியைச் செய்தால், நானும் உயர்ந்து விடுவேன். உங்களுக்கும் ஒரு நல்ல பிரகாசமான வாழ்க்கை அமைந்துவிடும் என்று தங்கராஜ் பல நாட்கள் பேசினார். அவர் முயற்சியில் வெற்றியும் பெற்றுவிட்டார்.

என் தந்தையிடம் பலவாறாக எதிர்வாதம் செய்து, அவரை என் முடிவுக்கு ஒத்துக்கொள்ளச் செய்தது என் வேலையல்ல. விதியின் விளையாட்டு என்றே நான் கூறுவேன்.

என் தந்தையிடம் அனுமதி பெற்று, ஆயிரம் ரூபாயையும்

பெற்றுக்கொண்டு, தங்கராஜுடன் நானும் சென்னைக்கு வந்தேன். ஒரு வாரம் தங்கினேன். சினிமா ஆபிஸுக்கு என ஒரு வீடு எடுத்து, நாற்காலி மேஜை வாங்கி செட்அப் செய்த நேரத்தில், ஓரிரு சினிமாகம்பெனிகளுக்கு கேமராமேன் ஜி.கே. குட்டி அவர்கள் என்னை அழைத்துச் சென்றார். அறிமுகப்படுத்தினார். அவர்களும் எனக்கு பாடல்கள் எழுதுவதற்கு வாய்ப்பளிப்பதாக உறுதி கூறினார்கள்.

நானும் மிகுந்த நம்பிக்கையுடன், மிகுந்த எதிர்பார்ப்புடன் மகிழ்ச்சியடைந்தேன். காரைக்குடிக்குப் பெரும் கற்பனைகளுடன் திரும்பினேன். ஏப்ரல் மாதத்திற்குள் இரண்டு மூன்று முறை, சென்னைக்கு நான் வந்து போக வேண்டிய சூழ்நிலையும் வந்தது.

'ஆயிரத்தில் ஒருத்தி' என்ற படம் ஒன்றுக்கு பாடல் எழுதுமாறு ஓம் சக்தி பிலிம்ஸ் உரிமையாளர், இயக்குநர் திரு கந்தசாமி அவர்கள் என்னை அழைத்திருந்தார்கள். ஒரு நாள் முழுவதும் இசையமைப்பாளர் நடேஸ் என்பவருடன் அமர்ந்து. பாடல் எழுதி முடித்து, இசையும் அமைக்கப்பெற்று, அடுத்த நாள் ரெக்கார்டிங்கிற்காகத் தயாராகி விட்டோம்.

ஆனால், ஸ்டுடியோ வரை சென்று, ரெக்கார்டிங் தியேட்டரிலும் நின்று, பாடுகிற ஒரு பெண்மணிக்கு தொண்டை சரியில்லாமல் போகவே, அன்று நின்று போயிற்று.

அடுத்தநாள் ரெக்கார்டிங் என்றார்கள். அந்த நாள் மீண்டும் வராமலே போயிற்று, பார்ட்னர்கள் இருவருக்குள் புகைச்சல் என்றதால், பிளவுபட்டு, என் முதல் முயற்சியே முனைமுறிந்து போயிற்று.

அடுத்தடுத்து, என் முயற்சிகளுக்கு சென்னை வரவேண்டிய நிலைமை வந்தது. குறிப்பிட்ட நபர்களுக்குக் கடிதம் எழுதி, நாளும் தேதியும், நேரமும் குறித்துக் கொண்டு சென்னைக்கு வந்தாலும், அந்த நபர்களை சந்திக்க முடியாமல் போனதால், எனது மனதுக்கு வேதனையாகவே இருந்தது.

கல்லூரியில் லீவு, பணச் செலவு, மன வேதனை - இப்படி பல இழப்புக்களை தொடர்ந்து இழக்கும் பொறுமையை நான் இழந்துபோன சமயத்தில், ஒரு நாள் கண்ணபிரான் என்பவர் வந்தார்.

சென்னையிலிருந்து ஸ்போர்ட்ஸ் கம்பெனியின் ரெப்ரசென்டேட்டிவ் அவர் சென்னைக்கு வந்தால், பல உதவிகளைச் செய்து தருகிறேன் வாருங்கள் என்று வாக்குறுதி தந்திருந்தார்.

அவரை நான் சென்னையில் சந்தித்தபோது, அடிக்கடி நீங்கள் சென்னைக்கு வந்துபோவது, சிரமம் மட்டுமல்ல. நீங்கள் எதிர்பார்த்த எதையும் அடைவதும் கஷ்டம் தான். சென்னையிலே நீங்கள் இருந்தால்தான், உங்கள் லட்சியக் கனவு பலிக்கும் என்று, ஒரு யோசனையைக் கூறினார்.

அவர் சொல்வதும் எனக்கு சரியாகவே பட்டது. வீணான அலைச்சல், எதிர்பார்ப்புக்கும் மேலாக மன உலைச்சல், பண இழப்பு. பலநாள் வீண்.

சென்னையிலேயே ஒரு வேலையை பார்த்துக் கொண்டால் போதும் என்று சொல்லிவிட்டு அந்த நண்பர், மைலாப்பூரில் உள்ள **வித்யாமந்திர்** என்னும் பள்ளிக்கு என்னை அழைத்துச் சென்றார். நேர்முகமாகப் பேசும் வாய்ப்பையும் ஏற்படுத்தி தந்தார்.

வித்யா மந்திர் பள்ளியின் தாளாளர் திருமதி **சாரி.** தலைமை ஆசிரியை **திருமதி தாரா சத்ய நாராயணன்** இருவரிடமும் பேசிப் பார்த்தேன்.

கல்லூரியில் பணியாற்றிக்கொண்டிருக்கும் ஒருவர், அந்த வேலையை உதறிவிட்டு, பள்ளி ஒன்றில் வேலை செய்வதாக இருந்தால், அவர் ஏதோ தவறு செய்து விட்டு மறைப்பதற்காகத் தான் வரவேண்டும். அல்லது கல்லூரி நிர்வாகத்தால் வெளியேற்றப்பட்டிருக்க வேண்டும் என்று அவர்கள் அபிப்ராயப் பட்டார்கள்.

சென்னையில் செட்டிலாகப் போகிறேன். அதற்காகத்தான் உங்கள் பள்ளியில் வேலை கேட்கிறேன் என்றேன். சினிமா சங்கதிகள் பற்றி அவர்களிடம் ஒன்றும் பேசவில்லை.

(சென்னையில் நிரந்தரமாகத் தங்கி விடப் போகிறேன் என்று அன்று சொன்ன பொய், இன்று உண்மையாகி விட்டது.)

உங்கள் படிப்பு, தகுதி, விளையாட்டில் உள்ள மற்ற தகுதிகள் அனைத்தும் பாராட்டுக்குரியதுதான். ஆனால், இவ்வளவு தகுதி படைத்த ஒருவர், எங்கள் சிறிய பள்ளியில் உடற்கல்வி ஆசிரியராகப் பணியாற்ற முடியாதே. நீங்கள் விரைவில் வேலையை விட்டு போய் விடுவீர்கள் என்று தங்கள் சந்தேகத்தைத் தெரிவித்துவிட்டு, சம்மதத்தையும் கூறினார்கள்.

சினிமா வாய்ப்புகள் இருப்பதாலும், மேலும் பல புத்தகங்கள் எழுத முடியும் என்ற நம்பிக்கை இருந்ததாலும், போகிற புதிய இடத்தில், 40 வயதுக்கு மேல், லட்சாதிபதியாகி விடுவீர்கள் என்று காரைக்குடி ஜோசியர் சொல்லியிருந்ததாலும், எனக்குள்ளே ஒரு எதிர்கால கனவு அது உறுதியாக மனதில் ஊன்றிக் கொண்டிருந்தது. இதையெல்லாம் வெளியே எப்படி சொல்வது?

அதனால் நானும் தைரியமாக அவர்களிடம் ஒரு வாக்குறுதியை அளித்தேன். இந்த நிகழ்ச்சி நடந்தது 1965 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில்.

என்னை பணியில் சேர்த்துக் கொள்ள இருவரும் சம்மதம் தெரிவித்தபோது, நான் ஒரு நிபந்தனையைக் கூறினேன்.

நீங்கள் எனக்கு வேலை தருவதாக இருந்தால், அப்பாயின்ட்மென்ட் ஆர்டரை இப்போதே தரவேண்டும். பெற்றுக்கொண்டதும்தான், நான் கல்லூரியில் மூன்றுமாத நோட்டீஸ் கொடுப்பேன். பிறகு வந்து சேர்கிறேன் என்று நான் கேட்டதற்கு, இப்பொழுதே ஆர்டர் தருகிறோம். ஜுன் மாதத்தில் வந்து வேலையில் சேர்ந்து விடுங்கள் என்றார்கள்.

அப்பொழுதும் என்மனதில் புதுக்குழப்பம் ஒன்று புகுந்து

கொண்டது. எப்படி சென்னையிலே வந்து தங்குவது, வேலை பார்ப்பது என்பதில் அல்ல அந்தக் குழப்பம். நிரந்தரமான வேலையை விட்டுவிடப்போகிறோமே அவனவன் உத்தி யோகத்திற்கு ஆளாய் பறக்கிறான். அதுவும் கௌரவம் மிகுந்த கல்லூரி வேலையை விட்டு விட்டு, பள்ளிக்கூடம் ஒன்றில் வந்து, என்று மனதுக்குள்ளே தடுமாறினேன்.

எனக்கு யோசிக்கக் கொஞ்சம் அவகாசம் கொடுங்கள், காரைக்குடி சென்று இன்னும் கொஞ்சம் தீவிரமாக யோசனை செய்துவிட்டு உங்களுக்கு கடிதம் எழுதுகிறேன் என்றேன் அதற்கும் அவர்கள் சம்மதித்தார்கள்.

படத்திற்குப் பாட்டு எழுத சென்னைக்கு வந்த நான், பாதுகாப்பாக ஒரு உத்தியோகத்தைத் தேடிக்கொண்டேன். அதை ஏற்றுக் கொள்ள ஆசையிருந்தாலும் அந்தராத்மா அரற்றிக்கொண்டு தடுத்தது.

கல்லூரி வேலையை விட்டு விடுவதா, சென்னை வேலையைத் தள்ளி விடுவதா, என்ற குழப்பத்துடன், காரைக்குடிக்கு புறப்பட்டேன்.

இரண்டு புத்தகங்கள் எழுதிய ஆசிரியர் என்ற மரியாதை மனதுக்குள் ஒரு தெம்பு, இதற்கும் மேலாக இன்னொரு குறிப்பு.

சென்னையிலிருந்து வெளியாகின்ற புத்தகங் களுக்குத்தான் மக்களிடையே மரியாதை, எவ்வளவு தான் அருமையான புத்தகமாக இருந்தாலும், கிராமப்புற நூல்கள் என்ற கேலியும் கிண்டலும் இருந்ததால், சென்னை வாழ்க்கையை நான் விரும்பியதும் உண்டு.

வெற்றிகரமாக விதி எனக்கு வழிகாட்டியது, புதிய வேலையை பார்ப்பது என உறுதி எடுத்துக் கொண்டேன்.

சென்னை வந்த பிறகு எத்தனை எத்தனை கஷ்டங்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது என்று தெரியாமலே, நான் உறுதி எடுத்துக் கொண்டேன். சிரமப்படவா நா  சென்னைக்கு புறப்பட்டேன்.

# 10. நினைத்தது நடந்தது

சினிமாவில் பாடல் எழுதும் வாய்ப்புகள் கிடைக்கப் பெற்று, அவற்றை செய்து முடிப்பதற்காக, சென்னைக்குப் பலமுறை வர நேர்ந்தது. சிரமங்கள் பல என்றாலும் அவற்றை சிரமமாக நினைக்காமல், சாதனைக்குரிய கருமமாக கருதி வந்தாலும், வேலை எதுவும் நடக்கவில்லை. நடந்ததாக நினைத்து மகிழவும் முடியவில்லை.

அதனால், சென்னையில் தங்கிக்கொண்டு, சினிமா முயற்சியைத் தொடர வேண்டும் என்று உறுதி செய்து கொண்டேன். வேலையில்லாமல் அதே முயற்சிகள் என்றால், பட்டினிதான் பரிசு, பரிதாபம்தான் துணை என்று, அனுபவப்பட்ட பலர் என்னிடம் பேசினார்கள். அவர்கள் வாழும் முறையை நேரில் பார்த்துத் தெரிந்த கொண்ட பிறகு, முழுநேர முயற்சி சரிவராது என்று, ஒரு பள்ளியில் ஆசிரியர் வேலையை ஏற்றுக்கொண்டேன்.

சென்னையில், மயிலாப்பூரில் உள்ள வித்யாமந்திர் என்கிற சிறந்த பள்ளியில், உடற்கல்வி இயக்குநர் பணிக்கு, அழைப்பை ஏற்றுக்கொண்டு, காரைக்குடி நோக்கிச் சென்றேன். - கல்லூரி வேலையை ராஜினாமா செய்ய,

கல்லூரியில் உத்தியோகம் என்றால் கௌரவம்

மிகுந்ததல்லவா ! எனக்கு எதிர்ப்புகள் நிறைய வந்தன. இல்லாததற்கு ஏங்கி, இருக்கிறதை கைவிடுகிற மடையன் போல ஆகிவிடாதே என்று, என்னிலும் வயது, அறிவு, அனுபவம் உள்ள ஆசிரியர்கள், அறிவுரை தந்தார்கள். சிலர் செல்லமாகத் திட்டியும் பார்த்தார்கள்.

விதி என்னை விரட்டுகிற போது, மதி என்ன செய்யும்? மயங்கிக் கொண்டது. துணிந்து என் கல்லூரிப் பணியை ராஜினாமா செய்தேன். மூன்று மாத நோட்டீஸ் தரவேண்டும் என்பது முறை. தைரியமாக, துணிந்து, ராஜினாமா கடிதத்தைத் தந்துவிட்டேன்.

ஜூலை மாதம் தொடங்கி, செப்டம்பர் மாதம் முடிய மூன்று மாதங்கள், செப்டம்பர் 30 ந் தேதி வேலையிலிருந்து விடுபட்டேன். சம்பளம் கேட்டதற்கு, கணக்கை முடித்து அனுப்புகிறோம் என்று கல்லூரி நிர்வாகம் கூறிவிட்டது.

கையில் இருந்தது 10 ரூபாய் தான், மறுநாள் காலை நான் சென்னையில் உள்ள பள்ளியில், வேலையில் சேர்ந்தாக வேண்டும். என்ன செய்வது? ஊரைவிட்டுப் போகிற ஆளுக்கு, யார் நம்பி கடன் தருவார்கள்!

கடன் கொடுத்துப் பழகிய எனக்கு, கடன் கேட்க, வாங்க மனமில்லை. அதனால், இருந்த 10 ரூபாயுடன், என்னிடம் உள்ள துணிச்சலுடன், சென்னை நோக்கிப் பயணமானேன். அப்பொழுது சென்னைக்கும் காரைக்குடிக்கும் டிக்கட் ரூ 7.50 தான். மிகுந்த நம்பிக்கையுடன், ஏராளமான எதிர்பார்ப்புகளுடன், மீதமுள்ள இரண்டரை ரூபாயுடன், இராமேஸ்வரம் எக்ஸ்பிரஸில் பயணமானேன்.

நீங்கள் விரைவில், இருக்கும் வேலையை விட்டு விட்டு, வேறிடம் செல்வீர்கள் என்று சொன்ன, முகம் தெரியாத ஜோசியனையும் நினைத்துக் கொண்டேன்.

இப்படியாக, நான் நினைத்தது நடந்தது. வேலையும் கிடைத்தது. சினிமா வாய்ப்புகளும் இருந்தது. புத்தக வேலையும் தொடரும் என்ற எனது நம்பிக்கைகள் எல்லாம் எப்படியெல்லாம் மாறிப்போயின. தெரியுமா?

சென்னை வந்து சேர்ந்த பிறகு, என்னை தங்கராஜ் வந்து வரவேற்றார். தான் தங்கியிருந்த சேம்பியன் மூவிஸ் ஆபிசிலே என்னையும் தங்க வேண்டும் என்றார். தியாகராய நகரில் உள்ள, தண்டபாணி தெருவில் இருந்த அந்த வீட்டில் தங்கிக் கொண்டு, பள்ளியிலும் சேர்ந்து பணியாற்றத் தொடங்கினேன்.

பகல் முழுவதும் பள்ளியில் வேலை, மாலை வந்ததும், சினிமா ஆட்கள் ஆபீசுக்கு வந்துவிட. அவர்களுடன் ஆலோசனைகள். இதற்கிடையே கேமராமேன் ஜி.கே. குட்டி அவர்களுடன், பல கம்பெனிக்குச் சென்று, தயாரிப்பாளர்களை சந்தித்தல், இப்படி ஒரு சில மாதங்கள் ஓடித் தொலைந்தன.

கதை ஆசிரியர் தங்கராஜ் , டைரக்டர் ராஜேந்திரன் இவர்கள், 'ஒரு ரூபாய்' என்ற கதையை, படமாக்க முயற்சி செய்தார்கள் என்பதை முன்னரே குறிப்பிட்டிருந்தேன்.

அந்தக் கதையில் சில மாற்றங்கள் செய்தால், நன்றாக இருக்கும், பைனான்சியரும் அதே கருத்தைத்தான் விரும்புகிறார் என்று இயக்குநர் சொல்ல, என் கதையில் ஓர் எழுத்தைக் கூட மாற்றமாட்டேன் என்று தங்கராஜ் அடம்பிடிக்க, இதனால் படவேலை மிகுந்த தாமதாயிற்று, மன வேறுபாடு தயாரிப்பாளர் இயக்குநர் கதாசிரியர். இவர்களிடையே நிறைய ஏற்பட்டு, கம்பெனியை கலைத்து விடுவதென்று முடிவு ஏற்பட்டது.

காரணம் - நான் கொடுத்த பணம், ஆபீஸ் பொருட்கள் வாங்கியது போக, மீதியான அட்வான்ஸ் தொகையும் வாடகையாக கழிந்து போயிற்று. பிறகு யார் வாடகை தருவது?

அதனால், ஆபீஸ் வேண்டாம் என்றும், தங்கராஜ் காரைக்குடிக்குப் போகட்டும், மீண்டும் பிறகு சந்திக்கலாம் என்றும் பேசி முடிவு செய்தனர்

என் நம்பிக்கையின் முதல் படி, முதல் அடியை வாங்கியது. கனவின் புஜங்கள் ஓடிய ஆரம்பித்த போது, நிஜ வாழ்க்கையின் நிதர்சனம் தெரிந்தது.

இந்த வேதனையான சூழ்நிலையில் மனதுக்கு இதமான ஒரு சேதி வந்து சேர்ந்தது. 'ஆண் குழந்தை பிறந்திருக்கிறது' என்று என் மனைவி கடிதம் எழுதியிருந்தாள். மீண்டும் முகம் தெரியாத ஜோசியனின் நினைவு தோன்றி நின்றது.

உங்களுக்கு மகன் பிறப்பான் என்று கையிலடித்துச் சொன்ன, அந்த தீர்க்கதரிசிக்கு நன்றி சொன்னேன். காரணம், அந்த அற்புத மனிதரின் வார்த்தைகளில் எனக்கு அபார நம்பிக்கை ஏற்பட்டிருந்தது தான்.

வேலையை ராஜினாமா செய்வது அடுத்து, உங்களுக்கு மகன் பிறப்பான் என்றது நீங்கள் இலட்சியத்தில் வெற்றி பெற்று இலட்சாதிபதியாகுவீர்கள் என்றது.

இரண்டு நடந்துவிட்டது. மூன்றாவதும் நடக்கும். இப்படித்தான் என் நம்பிக்கை ஆல மரமாக பரந்து விரிந்து நின்றது.

தங்கியிருந்த சினிமா கம்பெனி மூடப்பட்டு விட்டது. நான் எங்கே தங்குவது என்ற என் கேள்வி என்னைத் தடுமாற வைத்தது.

எனது பள்ளி தலைமை ஆசிரியை திருமதி தாரா சத்யநாராயணன் அவர்களுடன் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்தேன். பேச்சுக்கு இடையில், தங்க இடம் இல்லை என்ற என் கஷ்டத்தையும் சொன்னேன்.

கருணை மனம் கொண்டவர்கள் என்று எல்லோரும் அவர்களை புகழ்வதை நான் கேட்டிருந்தேன். ஆனால் எனக்கும் அந்தக் கருணை உள்ளம், கைமாறு கருதாமல் உதவுவதற்கு முன் வந்த அந்தத் தாய் உள்ளத்தை, இன்றும் என் மனதில் தெய்வமாக வைத்துக் கொண்டிருக்கிறேன்.

உங்களுக்கு விருப்பமானால், இந்தப் பள்ளியிலேயே ஒரு அறை தருகிறேன். தங்கிக் கொள்ளுங்கள் என்றார். அதற்குப் பள்ளி தாளாளர் திருமதி சாரி அவர்களும் ஒப்புதல் தந்தார்கள்.

எனக்கென்னவோ, பள்ளியிலே தங்கிக் கொள்ள, சங்கடமாக இருந்தது. இன்னும் ஒரு வாரம் இருக்கிறது. அதற்குள் ஒரு ஏற்பாட்டை செய்து கொள்கிறேன் என்றேன்.

நாங்கள் பேசிக் கொண்டிருந்த போது, விவேகானந்தா கல்லூரியின் முன்னாள் முதல்வரும், எங்கள் வித்யா மந்திர் பள்ளியின் நிர்வாக இயக்குனராக இருந்தவருமான திரு சேஷாத்திரி அவர்கள் வந்தார்கள்.

எங்கள் முகத்தில் இருந்த 'சீரியஸ்னஸை' ப் பார்த்து, சேதி என்னவென்று கேட்டார். திருமதி தாரா அவர்கள் என் கஷ்ட நிலையைக் கூறினார்கள்.

இதென்ன பெரிய பிரச்சினை? இந்த சாவியைப் பிடியுங்கள் என்று ஒரு சாவிக் கொத்தைக் கொடுத்தார்.

நாங்கள் திகைத்து உட்கார்ந்திருந்தோம்.

''இந்தியப் பெரும் விஞ்ஞானி, சர்.சி.வி இராமன் அவர்களுக்குரிய வீடு, தற்போது என் பாதுகாப்பில் தான் இருக்கிறது. எப்பொழுதாவது தான் போய், தங்கி ஓய்வெடுப்பது வழக்கம், இவர் ஒரு புறம் தங்கிக் கொண்டு வீட்டையும் பார்த்துக் கொள்ளட்டும் என்றார்.

அவரின் தயாள குணத்தைக் கண்டு நெகிழ்ந்து போனேன்.

தெய்வம் மனிதர்கள் மூலமாக உதவுகிறது. தெய்வத் திருவருள் எப்படி வரும்? எப்பொழுது வரும் என்று யாருக்கும் தெரியாது. ஆனால், தேவையானபோது, தேவையானதை, உண்மையானவர்களுக்கு தெய்வம் தேடி வந்து தரும் என்பார்களே! அது என் வாழ்க்கையில் நடந்தது.

இரண்டு படுக்கையறைகள் கொண்ட வீடு, கட்டில், மெத்தை, போன் போன்ற சகல வசதிகள் கொண்ட அந்த மேதை இருந்த இடத்தில், என்னையும் தங்குவதற்கு அனுமதி அளித்த, அந்தத் தங்க மனிதர் சேஷாத்திரி அவர்கள் என் வாழ்க்கையின் துருவ நட்சத்திரம் என்றால், உண்மைதான்.

எனக்கு அந்த வீடு கிடைத்தது என்றவுடன், எனக்கு இருந்த மரியாதை, மற்ற ஆசிரியர்களிடையே உயர்ந்து கொண்டது.

வித்யா மந்திர் பள்ளியைப் பற்றி நான் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.

பள்ளி மாணவர்கள் எல்லோரும் பையன்கள், படிப்பித்துத் தரும் ஆசிரியர்கள் எல்லோரும் பெண்கள். ஓவியம், விளையாட்டு, இந்தி, சமஸ்கிருதம், தமிழ் இந்த பாடங்களுக்கு மட்டுமே ஆண்கள். நாற்பதுக்கும் மேற்பட்ட ஆசிரியைகள்.

ஆசிரியைகளில் பெரும்பாலானவர்கள், நல்ல வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். ஆசிரியத் தொழிலை புனிதமாகக் கருதியவர்கள், சம்பளத்தை இரண்டாம் பட்சமாக நினைத்தவர்கள்.

அறிவுக்கும் திறமைக்கும் நிறைய மதிப்பு கொடுப்பவர்கள். என்னை, ஏதோ ஒரு உடற்கல்வி ஆசிரியர் என்றுதான் முதலில் நினைத்தார்கள். பள்ளி தலைமை

ஆசிரியையும், தாளாளர், மற்றும் நிர்வாக இயக்குனர் அவர்களும் சேர்ந்து கொண்டு எனக்கு வீடு கொடுத்து உதவியதை, அவர்களால் முதலில் நம்ப முடியவில்லை. என்னை அறிந்து கொள்ள ஆரம்பித்தார்கள், பள்ளியில் நான் பணியாற்றும் முறைகளை கண்காணிக்க ஆரம் பித்தனர்.

எதுவும் தெரியாமல், வீடு கிடைத்த மகிழ்ச்சியில், நான் பெற்ற திகைப்பு தீராத நிலையில் நடமாடிக் கொண்டிருந்தேன். விளையாட்டில் நான் கெட்டிக்காரன் என்றால், அது அவ்வளவு ஒன்றும் பெரிதல்ல அவர்களுக்கு. தமிழ் இலக்கியத்தில் எனக்கு இருந்த ஈடுபாட்டை அவர்கள் அறிந்து கொள்கிற ஒரு சூழ்நிலை அமைந்தது. அதன் பிறகு தான், என் அறிவும், சிந்தனையும் விழித்துக் கொள்ளத் தொடங்கின. அந்த சந்தர்ப்பத்தை இன்றும் நான் வியப்போடு சிந்தித்துக் கொண்டே வாழ்கிறேன்.

# 11. தமிழ் தந்த வாய்ப்பு

காரைக்குடி அழகப்பா கலைக்கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது, தமிழில் எம்.ஏ பட்டம் பெறவேண்டும் என்ற இலட்சியத்துடன் படித்துக் கொண்டிருந்தேன். முதல் மூன்று தாள்களும் எழுதி அதில் தேறிய செய்தியும் கிடைத்தபோது தான், வேலையை ராஜினாமா செய்துவிட்டு சென்னைக்குப் புறப்பட்டு விட்டிருந்தேன்.

எனக்குத் தமிழ் இலக்கியம் தெரியாது என்று எகத்தாளமாகப் பேசிய தமிழ்த்துறை ஆசிரியர்களை, வாயடைக்கச்செய்ய வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு தான் எம்.ஏ . தமிழிலக்கியம் படித்தேன். காரைக்குடியை விட்டு விட்டு, சென்னை வந்த பிறகு, அந்த படிக்கும் வேலை எதற்கு என்று நான் விலக்கி விடவும் இல்லை. விட்டுவிடவுமில்லை

தமிழ் இலக்கிய உணர்வு என்னிடம் இயல்பாகவே நிறைய இருந்தது. பள்ளியில், கல்லூரியில் படிக்கும்போது, சிறுசிறு கவிதை, கட்டுரை, ஓரங்க நாடகங்கள் எழுதி, மற்றவரிடம் படித்துக் காட்டி மகிழ்ந்தவன் நான்.

அந்தத் திறமையை வளர்த்துக் கொள்ள வேண்டும் என நான் ஆசைப்பட்ட போது, என் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகள் எல்லாம் என் இலக்கிய வேட்கையை

வளர்த்துக்கொள்ளவும், விருத்தி செய்து கொள்ளவும் வெகுவாக உதவின.

நான் பி.ஏ வகுப்பு படித்துக் கொண்டிருக்கும் பொழுதுதான், திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கிய காலம். அப்பொழுது, நிறைய வார இதழ்கள், மாத இதழ்கள் வெளிவந்தன. ஒவ்வொரு ஆசிரியரும் தங்களது கொள்கைப் பிடிப்பை காட்டிக் கொள்ள, அழகு தமிழில் ஆரவாரப் போக்கிலே எழுதித் தள்ளினார்கள். அத்தனைத் தமிழ்வேகம் இந்த பத்திரிக்கைகளில் வேகமாய் முழங்கி வாசகர்களின் தாகம் தீர்த்து உதவின.

கல்லூரி மாணவனான எனக்கு, அந்தப் பத்திரிகைகள் தந்த தமிழ்ப் பற்றும் தமிழ் வேகமும், உணர்வோடு கலந்து கொண்டது. இது ஒரு நிலை.

இன்னும் ஒன்று, விளையாட்டுகள் என்றால் உயிர் மூச்சாகக் கொண்டிருந்த எனக்கு முழங்கால் முட்டில் அடி, கணுக்கால் பிசகல், தோள் மூட்டில் பாதிப்பு, இடுப்பு பகுதியில் அடி, இப்படி பல விதங்களில் உடல் பாதிக்கப்பட்டிருந்தபோது, இனிமேல் போட்டி விளையாட்டுக்களில் ஈடுபட்டால், ஏற்பட்டிருக்கும் காயங்களும் கோளாறுகளும், உங்களைப் படுத்த படுக்கையில் தள்ளிவிடும் என்று டாக்டர் ஒருவர் அச்சுறுத்தி, அறிவுறுத்தியும், பொழுதைப் போக்கிட துப்பறியும் கதை புத்தகங்கள் தான் எனக்குத் துணையாக இருந்து, படுக்கையில் ஓய்வெடுக்க உதவின.

துப்பறியும் கதை படிப்பது என்றால் அந்த புத்தகத்தை முடித்துத் தூர எறியும் வரை விடாமல் தொடர்ந்து படிக்கின்ற பழக்கம் எல்லோருக்கும் இருக்குமே! இந்தப் பழக்கம் எனக்கு கொஞ்சம் அதிகமாகவே இருந்தது ஆயிரக்கணக்கான

துப்பறியும் கதை புத்தகங்கள் படித்ததால் எனக்கு, ஓரிடத்தில் உட்கார்ந்து படிக்கிற பழக்கம் ஏற்பட்டதுடன் எந்தப் புத்தகத்தை எடுத்தாலும் ஒரே மூச்சில் முடித்துவிட்டுத்தான் எழவேண்டும் என்ற முரட்டுப் பழக்கமும் ஒட்டி கொண்டது.

இந்த இரண்டும் தான் என்னை எம்.ஏ. படிப்பைத் தொடரச் செய்தன.

என்னை எதிர்த்த தமிழாசிரியர்களுக்கு முன்பாக தமிழ் எம்.ஏ. படிக்க வேண்டும் என்ற எண்ணம் மாறி, தமிழில் அதிகம் படிக்க வேண்டும், நிறைய அறிவு பெற வேண்டும் என்ற வேட்கையும் வெறியாகி, அதிகமாகவே எம்.ஏ பரீட்சையைத் தொடர்ந்து எழுத முனைந்தேன்.

வித்யா மந்திர் என்பது ஆங்கிலப் பள்ளியானதால், அதிகத் தமிழ் நூல்கள், நூலகத்தில் இருக்க வில்லை. ஒருநாள் நான் நூலகத்திற்குச் சென்று பார்த்தபோது, கம்ப இராமாயணப் புத்தகம் ஒன்று இருப்பதைக் கண்டு, அதை எடுத்துக் கொண்டு, என் அறைக்கு வந்து படித்துக் கொண்டிருந்தேன்.

அந்தப் பள்ளியில், தமிழ் வகுப்பு எடுத்துக் கொண்டிருக்கும் நீலா என்பவர், நூலகத்திற்குச் சென்று அந்த கம்ப இராமாயணப் புத்தகத்தைத் தேடியிருக்கிறார். காணவில்லை என்றதும், விசாரித்திருக்கிறார். நூலகப் பொறுப்பாளரான அம்மையார், என் பெயரைச் சொல்லி, அவர் படிப்பதற்காக எடுத்துக் கொண்டுபோயிருக்கிறார் என்று பதிலளித்திருக்கிறார்.

பி.டி மாஸ்டருக்கும் கம்ப இராமாயணத்துக்கும் என்ன சம்மந்தம் என்று கேள்வியாகக் கேட்காமல் கேலியாக பேசி சிரித்து விட்டு, என்னிடம் வந்து நின்றார் அந்த அம்மையார்.

உங்களுக்கு இந்த இராமாயணம் எதற்கு? விளையாட்டு வாத்தியார் தமிழ் படிப்பது வேடிக்கையான ஆச்சரியம் தான் என்று, கிண்டல் செய்து கொண்டு சிரித்தார்கள்.

நான் தமிழ் எம்.ஏ பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருக்கிறேன். உங்களுக்குத் தேவையானால் எடுத்துக் கொள்ளுங்கள் என்று எடுத்துத் தந்தேன். பிறகு தருகிறேன் என்று வாங்கி கொண்டு போய் விட்டார்கள். ஒரு மௌனமான புன்சிரிப்புடன் என்னைப் பார்த்து விட்டுப்போனார்கள். நானும் விஷயம் புரியாமல் நின்றேன்.

ஒரு நாள் என்னை 5-ம் வகுப்புக்குத் தமிழ் எடுக்குமாறு தலைமை ஆசிரியை பணித்தார்கள். நானும் சென்றேன். ஏதோ ஒரு மூட் (mood). ஒரு பாட்டை கரும்பலகையில் எழுதி மாணவ- மாணவியரை எழுதிக் கொள்ளச் செய்தேன்.

நீரே நீரே தண்ணீரே

நெருப்பில் காய்ந்தால் வென்னீரே!

இப்படித் தொடங்கி, தண்ணீரின் பெருமையை விளக்குவதாக அந்தப் பாடலை எழுதியிருந் தேன்.

இந்தப் பாடலைப் படித்த, அந்தத் தமிழாசிரியைக்கு என்னை சோதித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆசை வந்துவிட்டது. என்னை ஒரு சிக்கலான சூழ்நிலையில் சிக்க வைத்து விட்டார்.

ஒரு நாள் நண்பகல் 1 மணி இருக்கும் ஆசிரியைகள் அனைவரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கிறபோது, எனக்கு ஒரு அழைப்பு வந்தது. நான் போன போது, சாப்பாட்டை முடித்துவிட்டு எல்லோரும் ஜாலியாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

தமிழாசிரியை தொடங்கி வைக்க, தலைமை ஆசிரியை என்னிடம் பேச ஆரம்பித்தார்கள்.

இந்த ஆண்டு நமது பள்ளி ஆண்டு விழாவில், ஒரு நாட்டிய நாடகம் நடத்த இருக்கிறோம். அதுவும் கம்ப இராமாயணத்திலிருந்து ஒரு காட்சியை வைப்பதாகவும் முடிவு

செய்திருக்கிறோம். உங்களுக்குக் கவிதை எழுதத் தெரியும் என்று நீலா கூறினாள். எப்பொழுது எழுதித் தருவீர்கள்'' என்று கேட்டார்கள். நீலாவின் புன்னகையின் மர்மம் புரிந்துவிட்டது, என்னுடைய தமிழறிவை சோதித்து வெளிப்படுத்த, இந்த சிக்கலை ஏற்படுத்தி விட்டார்கள்.

எப்பொழுது என்ன? இப்பொழுதே எழுதித் தருகிறேன். காட்சியை நீங்கள் தேர்வு செய்து விட்டீர்களா என்று கேட்டேன்.

குகப்படலம் என்றனர் ஒரே குரலில் பலர்.

முன்கூட்டியே பேசி எடுத்த முடிவு.

நான் சொல்லிக் கொண்டே வருகிறேன் யாராவது எழுதிக் கொள்ளுங்கள் என்றேன். சர்வ சாதாரணமாக,

வியப்பில் விழிகளை ஏற்றி இறக்கினார்கள் எல்லோரும். ஒரு ஆசிரியை பேப்பரும் கையுமாக உட்கார்ந்து கொண்டார். எழுதுங்கள் என்று நான் பாடலை சொல்ல ஆரம்பித்தேன்.

தாயின் சொல் கேட்ட
தந்தையின் சொல் கேட்டு
நாயகன் இராமனும்
நடந்தான் நாடுவிட்டு

என்று நான் தொடங்கியதுமே, அப்படியே திகைத்துப் போனார் கள் எல்லோரும்.

உடற்கல்வி ஆசிரியர் என்று நினைத்து ஏதோ கேட்கப் போய், இராமாயணம் பாடுகிறாரே. இப்படி பாடுகிறாரே! வியப்போடு நோக்கினார்கள்.

கணவன் இருக்குமிடம்
கைலாசம் என்றதனால்
துணைவன் நிழல்போல
தொடர்ந்தாள் சீதையும் .....

என்று அடுத்த அடியைப் பாடினேன்.

அண்ணன் திருவடிக்கு

ஆயிரம் பணி செய்ய

சின்னவன் இலக்குவனும்

சேர்ந்தான் அவரோடே......

இப்படி நான் தொடர்ந்து 100 வரிகளுக்கு மேல் பாடினேன். எப்படிப் பாடினேன் நான், என்று அப்பொழுது ஆச்சரியப்பட்டேன். இப்பொழுதும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இன்றும் அந்த ஆச்சரியத்திற்குப் பதிலே கிடைக்கவில்லை. ஆண்டவனின் அனுகிரகம் அது என்று நம்பிக் கொண்டிருக்கிறேன்.

குகப்படலத்தை நாட்டிய நாடகமாக எழுதிய விதம், எல்லோருக்கும் பிடித்திருந்தது. என் தமிழ் அறிவை அவர்கள் ஏற்றுக் கொண்டனர். அந்த ஆண்டு விழாவில், இராமயண நாட்டிய நாடகம், பெற்றோர்கள் போற்றும் விதத்தில் பெரும் சிறப்பாக நடந்தேறியது. இல்லை! என் வாழ்க்கையின் உயர்வு. அங்கே அரங்கேறி ஆரம்பமானது என்றே கூறலாம்.

ஏன் இந்த நிகழ்ச்சியை இவ்வளவு விரிவாக இங்கே எழுதுகிறேன் என்றால், இந்த நிகழ்ச்சி தான், எனது இன்றைய முன்னேற்றத்திற்கு முதன் முதல் கால் கோளாக அமைந்திருந்தது.

எனக்குப் பள்ளி ஆசிரியைகள் மத்தியிலே ஒரு நல்ல மரியாதையை ஏற்படுத்தித் தந்தது. அகில இந்திய வானொலியில் (சென்னை) என்னை அறிமுகப்படுத்தி வைத்தது. தியாகபூமி என்ற பத்திரிகையில் தொடர்ந்து எழுதுகிற வாய்ப்புகளை வழங்கியது. என் எதிர்கால முயற்சிகளுக்கெல்லாம் நிறைய ஆதரவை பெற்று தந்தது இந்த நிகழ்ச்சி தான் என்றால் என்னால் எப்படி மறக்க முடியும்?

# 12. வியப்பும், மலைப்பும்

இராமாயணத்தினை ஒரு முறை படித்து விட்டால், அதன் தமிழ் ஆக்கமானது படித்தவரைப் பற்றிக்கொள்ளும் என்றெல்லாம் தமிழறிஞர்கள் பேசுவார்கள்.

அவர்கள் கூற்றினை நம்பிய நானும், நேரம் கிடைக்கிற பொழுதெல்லாம், இராமாயணக் கவிதைகளைப் படித்துப் படித்து, கம்பரின் கவி நயங்களை ரசித்துப் புசித்துக் கொள்வதும் உண்டு.

அப்படி இருந்ததால் தான், என்னால் ஒரு நல்ல இராமாயண நாடகத்தை, விரைவாக எழுத முடிந்தது. எழுதியதால் எனக்கு எந்தப் பரிசும் கிடைத்துவிடவில்லை. ஆனால் என் எதிர்கால இலட்சியத்திற்கு, இந்த நாடகமே, வழிகாட்டியாக அமைந்து கொண்டது.

நான் எழுதிய பாடல்களுக்கு, இசை அமைக்கும்படி, ஒரு பெண்மணியிடம் தலைமை ஆசிரியை தந்திருந்தார்கள். எங்கள் எல்லா ஆசிரியர்களாலும் ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப் பட்ட இசையரசி அவர்கள்.

ஒரு பி.டி.மாஸ்டர் எழுதிய பாடல்கள் என்று அவரிடம் தந்து, இசை அமைக்கும்படி கேட்ட போது, அலட்சியமாக வாங்கி, அவசரமாக தன் கைப்பையில் வைத்துக்

கொண்டார்கள்.

''நான் இப்பொழுது பாண்டிச்சேரி போகிறேன். போகிறபோது படித்துப் பார்க்கிறேன் முடிந்தால், இசையை அமைப்பதற்கு முயல்கிறேன்'' என்று கூறியபடி அவர் புறப்பட்டுப் போய்விட்டார்.

இரண்டு நாள் கழித்தும், எந்தவிதத் தகவலும் வரவில்லை. அன்று மாலையே ஒரு ஆள் வந்து, தலைமை ஆசிரியையை வரச்சொல்லி அழைத்தான். தலைமை ஆசிரியையும் அவர்களைப் பார்க்கப் புறப்பட்டார்தள். நாங்கள் காரணம் புரியாமல், ஒருவரை ஒருவர் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டோம்.

விரைவில் திரும்பி வந்த திருமதி தாரா கூறிய பதில், எங்களை, குறிப்பாக, என்னை வெகுவாக வியப்பில் ஆழ்த்தியது.

''பாண்டிச்சேரி சென்ற அந்த அம்மையார், காரில் போகும் போதே, கவிதையைப் படித்திருக்கிறார், மிகவும் பிடித்துப் போய் விட்டதால், அங்கேயே இசை அமைக்கத் தொடங்கிவிட்டார். காரிலே பயணம், கையிலே கவிதை, கருத்தோ இசை லயத்தில்.

காரியம் முடிந்து வேறொரு காரை மாற்றிக் கொண்டு சென்னைக்கு வந்தபோது, அந்த அம்மையார் கவிதையை கை தவறுதலாக எங்கேயோ வைத்து விட்டு, சென்னை வந்து சேர்ந்து விட்டார்.''

இதுவரை எந்தவித ஈடுபாடும் இல்லாமலே கேட்டுக் கொண்டிருந்த எனக்கு, அவர் மேலும் கூறியது அதிர்ச்சியாகவே இருந்தது.

''கை தவறிப்போன அந்த ஸ்கிரிப்ட், கிடைக்கும் வரை

நான் சாப்பிடப் போவதில்லை'' என்று அந்த அம்மையார் வைராக்கியத்துடன் இருக்கிறார்கள்.''

தலைமை ஆசிரியை இப்படி கூறியதும் எனக்கு திகீரென்றது. காணாமல் போன ஸ்கிரிப்டுக்காக, கண் கலங்குவது எதற்கு? அது போகட்டும். இன்னொன்றை இப்பொழுதே எழுதித் தருகிறேன் என்று, ஒரு பேப்பரை எடுத்துக் கொண்டு எழுத அமர்ந்துவிட்டேன்.

அலட்சியமாக என் கவிதையை வாங்கிய அந்த அம்மையாருக்கு, இப்படி ஒரு அக்கறை ஏற்பட்டு, ஒரு வித ஈடுபாட்டை வளர்த்துக் கொண்டதே எனக்கு வெற்றிதானே! அதனால், என் மகிழ்ச்சியான மனதில் காணாமல் போன விவகாரம், மாறுதல் ஒன்றையும் ஏற்படுத்தவில்லை.

நினைவில் கொஞ்சம் பாட்டுக்கள் நிலைத் திருந்ததால், விடுவிடென்று 30,40 வரிகளை எழுதி முடித்து நிமிர்ந்தபோது, இன்னொரு வியப்பு எனக்காகக் காத்திருந்தது.

உங்கள் ஸ்கிரிப்ட் பாண்டிச்சேரியிலிருந்து வந்துவிட்டது. அவர்களே உங்களைப் பார்க்க வந்து கொண்டிருக்கின்றார்கள் என்பது தான் அந்த செய்தி.

அவர்கள் வந்து என்னிடம் பாடல்களின் நயம் பற்றி பேசி, பாராட்டிச் சென்ற விதம், மற்றவர்கள் என் கவிதை ஆற்றலை நன்கு புரிந்து கொள்ளச் செய்தது. அப்பொழுது என் உடனிருந்த நண்பர். ஆசிரியர் **திரு சீனிவாசன்** அவர்கள், இந்தக் கவிதையை இப்படியே விட்டுவிடக்கூடாது, இதற்கு நான் ஒரு ஏற்பாடு செய்கிறேன் என்றார். அந்த ஏற்பாடு என்ன என்று நானும் கேட்கவில்லை , அவரும் சொல்லவில்லை.

ஒரு மாதம் கழித்து டெல்லியிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அனுப்பியவர் டெல்லி ஆல் இண்டியா ரேடி[illegible]ா, டைரக்டர் [illegible] **கிருஷ்ணசாமி அவர்கள்**, எழுதிய கடிதம்[illegible]ா அது.

''உங்கள் இராமாயண நாடகப் பாடல்களை ரசித்துப் படித்தேன். சென்னை வானொலியின் மூலமாக வந்தால் இன்னும் சிறப்பாக இருக்கும் என்று நினைக்கிறேன் அதனால், சென்னை வானொலி டைரக்டருக்கு, உங்கள் ஸ்கிரிப்டை அனுப்பி வைத்திருக்கிறேன். நீங்கள் எப்பொழுது வேண்டுமானாலும் அவரை சந்தித்துப் பேசலாம்'' என்பதாக வாழ்த்தி எழுதி இருந்தார்.

கடிதம் கிடைத்தவுடனே காற்றெனக் கிளம்பினேன். இப்படி ஒரு சந்தர்ப்பம் கிடைக்காதா என ஏங்கிக் கிடந்தவன் ஆயிற்றே! திரு சீனிவாசன் அவர்களிடம் இந்த சேதியைச் சொன்னேன். பிறகு தான் தெரிந்தது. இந்த வேலை திரு சீனிவாசன் அவர்கள் செய்தது தான் என்று.

திரு சீனிவாசன், சென்னையிலிருந்து அவரது உறவினர் ஒருவரிடம் என் பாடல்களை காட்ட, அவர் தனது கணவரான திரு கிருஷ்ணசாமி அவர்களுக்கு அனுப்பி வைக்க, இப்படித்தான் எனக்கு அழைப்பு வந்தது என்று தெரிந்து கொண்டு, அவர்களுக்கு நன்றி கூறினேன்.

கடிதத்தை எடுத்துக்கொண்டு, சென்னை வானொலி நிலையம் சென்று, இயக்குநர் அவர்களை சந்தித்தேன். நீங்கள் **அய்யாசாமி** என்பவரை சந்தியுங்கள், சிறுவர் நிகழ்ச்சிகளுக்கு அவர்தான் பொறுப்பாளி, உதவுமாறு சொல்லுகிறேன் என்று போனும் செய்தார்.

இவ்வளவு சிபாரிசு இருக்கிறதே! வானொலியில் பங்கு பெற வேண்டும் என்ற நமது கனவு நினைவாகிவிடும் என்ற நம்பிக்கையுடன், நடைக்கு வேகம் கொடுத்து, அய்யாசாமி (வானொலி அண்ணா) என்பவரின் அறை வாசலில் போய் நின்றேன்.

நவராஜ் செல்லையா! உள்ளே வாருங்கள் என்ற குரல்

அழைப்பு என்னை வரவேற்றது. மகிழ்ச்சி யுடன், வணக்கம் செய்தபடி உள்ளே நுழைந்தேன். உட்காருங்கள் என்றார். உட்கார்ந்தேன். அவர் என்னை ஏற இறங்கப் பார்த்தார்.

மிகுந்த நம்பிக்கையுடன், நுனி நாற்காலியில் அமர்ந்திருந்தேன். நீங்கள் பெரிய கவிஞரோ! என்று அய்யாசாமி ஆரம்பித்தார். அப்படியொன்றும் இல்லை. கவிதை எழுதுவேன் என்றேன்.

டெல்லியிலிருந்து சிபாரிசு செய்தால், நீங்கள் பெரிய கவிஞர் ஆகி விடுவீர்களோ! உங்களுக்கு யாப்பு தெரியுமா என்றார் கேலியாக,

நான் தமிழ் எம்.ஏ என்றேன்.

தமிழ் எம்.ஏ என்றால் பெரிய கொம்பா? என்று முழங்கி, என்னை ஒரு மாதிரி ஆக்கிவிட்டார். ஏன் இங்கே வந்தேன் என்று என்னை நானே நொந்து கொள்ளும்படி நிலைமை ஆகிவிட்டது.

என்னிடம் நேரே வந்திருந்தால் இரக்கப்பட்டு, ஒரு வாய்ப்பு தந்திருப்பேன் இப்படி சிபாரிசு பிடித்துக் கொண்டு வந்தால், வாய்ப்பு கிடைக்கும் என்று, இனிமேலாவது மனப்பால் குடிக்காமல் இரு என்றார் மிகவும் ஆத்திரப் பட்டு.

நானே டெல்லிக்குப் போய், சிபாரிசு கடிதம் வாங்கி வந்ததாக, அவர் தவறுதலாக நினைத்துக் கொண்டார் போலும்.

அவர் படுத்திய அவமானத்தை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். அவர் என்னை பேசிய விதத்தை, என்னை இகழ்ச்சியாகப் பேசியதை சகித்துக் கொள்ள முடியவில்லை.

நான் எழுந்து நின்று கொண்டேன்.

ஏ! அய்யாசாமி! உன்னைப் பெரிய மனிதன் என்று நினைத்துக்கொண்டு வந்தேன். நீ பிச்சை போட்டு நான் பிழைக்கும் நிலையில் இல்லை. என்றைக்கு நீ இந்த சீட்டை விட்டு, காலியாகிறாயோ அன்றுதான் இந்த நிலையத்துக்குள் நுழைவேன் என்று சத்தமாகப் பேசி விட்டு வெளியே வந்து விட்டேன்.

முன் கோபக்காரன் மட்டுமல்ல..... கொஞ்சம் முரட்டுத்தனம் அதிகம் உள்ளவன் நான். முன் கோபக்காரனான எனக்கு, நல்ல தண்டனைதான் கிடைத்தது. வானொலியில் சந்தர்ப்பம் கிடைக்க மூன்றாண்டு காலம் காத்துக் கொண்டிருக்க நேர்ந்தது. அதாவது அந்த அற்புத மனிதன் ரிடையர்டு ஆகும் வரை.

# 13. முதல் ஏமாற்றம்

அகில இந்திய வானொலியில் என் பாடல்கள் ஒளிபரப்பாகப் போகின்றன என்ற நம்பிக்கையுடன் நடந்து போன எனக்கு, உயர்திரு அய்யசாமி என்பவர் கொடுத்த அதிர்ச்சியானது 'எனக்குக் கொஞ்ச நஞ்சம்' இருந்த ஆசையை கூட, கவ்விக் குதறி, வெளியே தூக்கி எறிந்து விட்டன.

என் இளமைப்பருவம் தந்த பயமறியா கோபத்தால், நீ இந்த இடத்தை விட்டு ஒழிந்தால் தான், நான் மீண்டும் இந்த நிலையத்திற்குள் நுழைவேன்' என்று வார்த்தைகளைக் கொட்டி விட்டு வந்தேன். அதற்குப் பிறகு வானொலி ஆசையையே மறந்து போனேன்.

இந்த மூன்றாண்டு காலத்திற்குள் சென்னை அனுபவங்கள் எனக்கு நிறையவே ஏற்பட்டன.

பள்ளியில் பணியாற்றிக் கொண்டே சினிமாவில் சான்ஸ் வாங்கி முன்னுக்கு வந்துவிட வேண்டும், இலக்கியத்துறையில் ஓர் உயர்ந்த இடத்தைப் பிடித்துக் கொள்ளவேண்டும். வசதியாக வாழ, பணத்தை நிறைய சம்பாதித்துக் கொள்ள வேண்டும். இதுதான் என் லட்சிய வெறியாக இருந்தது.

சினிமா சான்ஸ் வாங்கித் தருகிறேன் என்று தலையிலடித்து சத்தியம் செய்த கருமப் பிரபுக்கள் நிறைய

பேர்கள் இருந்தார்கள். தருமப்பிரபுக்கள் என்று ஏன் எழுதுகிறேன் என்றால் காசுபணம் கொடுத்தால் தான் தருமப்பிரபுவா என்ன? வாக்கு உறுதிகளை அள்ளி வழங்கியவர்கள் கூட அந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் தானே!

எனது நண்பராக நெருங்கிப் பழகியவர்களில் ஒருவர் காமிராமேன். ஜி.கே. குட்டி என்பவர் நானாச்சு! இந்த சினிமாவுக்குப் பாடல் எழுதும் வாய்ப்பு வாங்கித் தர என்று என்னை அழைத்துக் கொண்டு கிளம்புவார்.

நம்பிக்கையுடன் நானும் போனேன், பல கம்பெனிகளில் ஏறி இறங்கினேன். சென்ற இடங்களில் மரியாதை இருந்தது. ஆனால் வாய்ப்புகள் தான் கிடைக்கவில்லை. காரணம்-என்னை அழைத்துச் சென்ற இடமெல்லாம் ஏழைக் கம்பெனிகள். இப்பொழுது இப்படிப்பட்ட கம்பெனிகளுக்குப் பெயர் உப்புமா கம்பெனிகள்.

அலைந்ததும் ஆசைக்குள்ளே உலைந்ததும், களைப்பினால் உடல் நலிந்ததும்தான் மிச்சம். இதற்கும் காரணம் இருக்கத்தான் இருந்தது.

மூன்று குழந்தைகளுக்குத் தந்தையான எனக்கு, குடும்பப்பொறுப்பும் கூடவே இருந்ததால், குடும்பத்தைக் காக்க, வருமானத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

பள்ளியில் பெற்ற மாத சம்பளம் ரூ.200 அதில் வீட்டுவாடகை ரூ.75. பாலுக்கும் அரிசிக்கும், கொஞ்சமாக மளிகை சாமான்களுக்கும் போதுமானது. மீதிக்கு கடன் வாங்க முடியாதல்லவா?

ஆகவே டியூஷன் சொல்லித் தரும் வாய்ப்பை ஏற்படுத்திக்கொண்டேன். காலையில் 2 டியூஷன் மாலையில் 2 டியூஷன்.

அதாவது காலையில் 6.30 மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்பினால், 7 மணி முதல் 8 மணி வரை ஒரு வீட்டில் டியூஷன், பிறகு 8-15 லிருந்து 9-15 வரை 2வது டியூஷன். உடனே பள்ளிக்குப்போயாக வேண்டும்.

மாலையில் 4.30 மணிக்கு பள்ளிவிட்டதும் 5 முதல் 6 வரை, 6.30 முதல் 7.30 வரை டியூஷன். பிறகு தான் வீட்டுக்கு வரவேண்டும். இதற்கிடையில் நான் எம்.ஏ தேர்வுக்காக படித்துக் கொள்ள வேண்டும். சினிமா வாய்ப்புக்கும் அலைய வேண்டும்.

இந்த நிலையில் என் தந்தையின் மரணச் செய்தி வந்தது. எனக்கு இருந்த ஒரே ஆதரவும் ஆறுதலும் ஒடிந்து விழுந்தது.

மனைவி குழந்தைகளை திருச்சியில் விட்டுவிட்டு நான் சென்னையில் இருக்க வேண்டும் என்று ஒரு இடைக்கால ஏற்பாடு நடந்தது.

கேமரா மேன் ஜி.கே. குட்டி அவர்களின் நண்பர் ஒருவர். சுரேஷ் என்பவருடன் சேர்ந்து இருக்கலாம் என்று யோசனை வந்தது.

விதி நடத்திச் செல்கிற போது மறுக்க முடியுமோ? குடும்பத்தைப் பிரிந்து, யுக்தி மிக்க ஒருவருடன் சேர்ந்து வாழும் நிலை ஏற்பட்டது.

என்னுடைய எழுத்து ஆர்வத்தையும் சினிமா முயற்சியையும் நன்கு புரிந்துகொண்ட அவன், சிரித்துக் கொண்டே என் வேகத்தை வேகப் படுத்தினான். அதனால் என்ன லாபம் அவனுக்கு என்றால், என் சம்பளம் முழுவதும் சாப்பாட்டுக்கும், வீட்டு வாடகைக்குமே சரியாகப்போயிற்று. பேசிப் பேசி வாய்க்கு ருசியாகச் சாப்பிட்டான் அவன். செலவைப் பற்றி நான் சிந்திக்கவே இல்லை.

நாளைக்கு சம்பாதித்து விடலாம் என்ற ஒரு நம்பிக்கை வேகத்தில், நானும் யோசிக்காமலேயே செலவு செய்து வந்தேன்.

ஒரு நாள் 'நாம் ஒரு சினிமா பத்திரிக்கை ஆரம்பிக்கலாமே' என்று தூபம் போட்ட சுரேஷ், நீங்கள் ஆசிரியர், நான் வெளியீட்டாளர் என்று கூறியதை, நானும் ஆவேசமாக ஏற்றுக் கொண்டேன்.

சினிமா சம்பந்தப்பட்ட பத்திரிக்கையல்லவா! கலைநீதி என்று பெயர் வைத்தேன். மாதப் பத்திரிகை விலை 20 பைசா, ஆண்டு சந்தா 2 ரூபாய்.

எல்லா செலவையும் செய்து, பள்ளியில் எல்லா ஆசிரியைகளிடமும் ஆண்டு சந்தா வசூலித்து, தெரிந்தவர்களிடம் எல்லாம் ஆண்டு சந்தாவுக்கு அலைந்து 100 அங்கத்தினர்கள் கொண்ட பட்டியலையும் மொத்த பணத்தையும் கொண்டு வந்து சுரேஷிடம் கொடுத்தேன். அத்தனைஆர்வம்.

முதல் இதழாயிற்றே! இன்னும் கொஞ்சம் பணம் இருந்தால் இன்னும் சிறப்பாக இதழைக் கொண்டு வரலாமே என்றான். என் கையிலே, பணமில்லை, கையில் தானே ஒன்றுமில்லை. விரலைப் பார்த்தேன்.

கல்யாண நினைவாகப் போட்ட மோதிரம் விரலிலே மின்னிக்கொண்டு இருந்தது. ஆபத்துக்குப் பாவமில்லை என்று கழற்றிக்கொடுத்தேன். அடகு வைத்து விட்டு இத்துடன் எல்லாப்பணத்தையும் சேர்த்துக் கொண்டான்.

முதல் இதழ் வந்தது. அதில் ஆசிரியர் இடத்தில் என் பெயர் இல்லை. ஆசிரியர் வெளியிடுபவர் என்று அவன் பெயரையே போட்டுக்கொண்டான், என்ன செய்வது?

முதல் ஏமாற்றம். அன்பான மோசடி, என் சோற்றையும் தின்று கொண்டு, என்முகத்திலே நோகாமல் சேற்றையடித்த அந்த நயவஞ்சகன் முகத்தில் இனி விழிக்கக் கூடாது என்று குடியிருந்த மேல்மாடிக் குடிசையை விட்டு வெளியேறினேன்.

அவனைப் பார்க்கவே வெறுத்ததால் எனக்கு என்ன இழப்பு ஏற்பட்டது என்றால், என்னுடைய கல்யாண மோதிரம், வட்டிக் கடையிலே முழுகிப் போயிற்று. அவ்வளவுதான்.

எப்படி இவ்வளவு எளிதாக ஏமாந்து போனேன் என்று இன்றும் எண்ணிப் பார்க்கிறேன். புரியவில்லை.

காரணம் இலக்கிய வெறி தான். பத்திரிக்கை ஆசிரியராக வேண்டும் என்று என்னுள்ளே பற்றி எறிந்த பாழான வெறியால் தான் பணம் போயிற்று, பள்ளியில் இருந்த மரியாதை போய், பாவம், பரிதாபம் என்று பேச்சுக்கள் கேட்கின்ற நிலைமையும் ஏற்பட்டது.

இந்த அவமானத்தைத் துடைத்துவிட்டு, ஆசிரியர் ஆகியே ஆக வேண்டும் என்ற எண்ணம் துடித்தது. புயலாக அடித்தது. ஆசிரியர் ஆகிவிட வேண்டும் என்று பின்னிருந்து விரட்டியது அந்த வேகத்தில் எல்லா காரியங்களையும் பரபரப்புடன் தொடங்கினேன்.

சுரேஷ் உறவை முறித்துக்கொண்டு குடியிருந்த கோடம்பாக்கத்தில் உள்ள, ரெங்காராஜபுரம் சாலை வீட்டிலிருந்து வெளியேறி, அதே ரெங்கராஜபுரம் சாலையில், விஸ்வநாதபுரம் முதல்-வீதியில் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்தேன். குடும்பத்தையும் மீண்டும் வரவழைத்துக் கொண்டேன்.

பத்திரிக்கை ஒன்றைத் தொடங்கிவிட வேண்டும்! என்று என் மனைவியிடம் கூறினேன். இப்பொழுது வேண்டாமே. இன்னும் கொஞ்சம் வசதி வரட்டுமே என்று ஆலோசனை

கூறினாள்.

வசதி வரட்டும் என்று பார்த்தால், வயதாகிப் போகும். கிழமாகிப் போய் விடுவோம். கஷ்டமோ, நஷ்டமோ, பத்திரிக்கையை ஆரம்பித்து விடுவது என்று முடிவு செய்துவிட்டேன் என்றேன்.

கஷ்டமோ நஷ்டமோ என்று எப்பொழுது கூறினேனோ, அவை எந்தக் கெட்ட தேவதையின் காதில் விழுந்ததோ, அந்த கஷ்டமும் நஷ்டமும் என்னை விடாப்பிடியாகக் கெட்டியாகக் கட்டிப் பிடித்துக் கொண்டன. என்னை விடவே மாட்டேன் என்று அவையும் என் வீட்டோடு ஒரு அங்கமாய் தங்கிக் கொண்டன.

பத்திரிக்கை ஆரம்பித்தாக வேண்டும் என்று முடிவாகிவிட்டது. அதற்கு என்ன பெயர் வைக்கலாம்? இப்படி ஒரு போராட்டம்.

ஒரு நாள் இரவு 12 மணி இருக்கும். ரெங்கராஜபுரம் ரோட்டிலே மிகவும் யோசனையுடன் கைகளைப் பின்புறமாகக் கட்டியபடி நடந்து கொண்டிருந்தேன். ஒரு அன்பர் தெரிந்தவர் என்னைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்.

என்ன சார் இது! இந்த நேரத்துலே? அதிசயமா இருக்குதே! இந்நேரத்துலே எப்பவும் தூங்கிகிட்டு தானே இருப்பீங்க. அதிசயம் தான் என்று இரண்டுமுறை அதிசயம் என்ற வார்த்தையை உதிர்த்து விட்டார். அவரை ஒரு மாதிரியாக சமாளித்து அனுப்புவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது.

எனக்குள்ளே, **அதிசயம்** என்ற வார்த்தை அழுத்தமாக விழுந்தது. எனது அந்தராத்மா விழித்துக் கொண்டது. தேடிக் கொண்டிருந்த தலைப்பு கிடைத்துவிட்டது என்பதை உணர்ந்தேன். சிந்தை சிலிர்த்துக் கொண்டது.

எனது பத்திரிக்கைக்கு **அதிசயம்** என்று பெயர் சூட்டி விட்டேன். அடுத்து எக்மோரில் உள்ள மேஜிஸ்டிரேட் அலுவலகத்தில் பெயரைப் பதிவு செய்து கொள்வது, அச்சகத்தாரிடம் அனுமதி பெறுவது போன்ற காரியங்கள் எல்லாம் துரித கதியில் நடந்தேறின.

காரணம் பிறகு தான் தெரிந்தது. ஆனால் அப்போது எனக்கு எதுவும் தெரியவில்லை. என்னுடைய பத்திரிக்கைக்கு உதவி செய்ய ஓர் ஆள் வேண்டும் என்று தேடுவதற்குள், துரைராஜ், என்பவர் ஒருவர் வந்து அவராகவே ஆஜராகி, சேர்ந்து கொண்டார். அப்படி இல்லை. தன்னை இந்தப் பத்திரிக்கையோடு இணைத்துக் கொண்டார்.

பத்திரிக்கை உதவி ஆசிரியர் அவர்தான். சர்குலேஷன் மேனேஜர் அவர்தான். ஆபீஸ் பாய் அவர்தான். பத்திரிக்கையில் பாதி விஷயங்கள் எழுதுவதும், அச்சகத்திற்கு போய் புரூப் திருத்துவதும், பத்திரிக்கையை விற்க ஏஜெண்ட் தேடி அமர்த்துவதும் அவர்தான்.

இத்தனை சாமார்த்தியம் உள்ள அவருக்கு சம்பத்து என்பது ஒரு நாலைந்து சமையல் பாத்திரங்கள், பாய் தலையணை... ஒரு வயதான தாய்.

சம்பளம் என்று ஒன்றுமில்லை, எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்வார். அதாவது அப்போதைய தேவைக்கு வேண்டும் என்பார். 10 பைசா, முதல் 10 ரூபாய் கொடுத்தாலும், 100 ரூபாய் கொடுத்தாலும், முகத்தில் எந்தவிதமான சலனத்தையும் பார்க்க முடியாது. சோகமும் காட்டாமல் சிரிக்கவும் செய்யாமல் விடைபெற்றுக் கொண்டு போய்விடுவார்.

அப்படி ஒரு நபரிடம் அகப்பட்டுக் கொண்டு முதல் இதழைக் கொண்டு வந்து விட்டேன். ஆனந்தவிகடன் சைஸ், 64

பக்கங்கள், விலை 50 காசுகள், ரூபாய் 200 என்ற எனது சம்பளத்தில், 100 ரூபாய் செலவு.

முதல் இதழ் நன்றாக விற்றது. விஞ்ஞானம், சரித்திரம், தத்துவம், உளவியல் என்று பெரிய பெரிய விஷயங்களை எழுதினேன். முதல் இதழ் விற்றாலும், நமக்கு காசு வராது, 2வது இதழ் வெளிவந்து, மூன்றாவது இதழுக்குப் போகும்போது தான் பணம் வரும் என்றாலும், முதல் 6 மாத இதழ்களுக்கு, நாம் தான் முன் பணம் போட்டு பத்திரிக்கை நடத்த வேண்டும்.

விளைவு- வீட்டில் உள்ள நகையுடன், சமையல் பாத்திரங்கள், அண்டா, குண்டா, இட்லி கொப்பறை என்று எல்லாமே மார்வாடியிடம் போய் சேர்ந்தன. வீடு, இந்த காலக்கட்டத்தில், எதுவுமே இல்லாமல் சுத்தமாகவே தெரிந்தது தான் எனது இலாபம்.

ஒரு மாதப் பத்திரிக்கையின் ஆசிரியர், எனது அதிசய இதழின் மாநில ஏஜெண்ட் ஆவார், எனக்கு உதவுவதற்காகவே ஏஜெண்சி எடுத்தவர், தனது பத்திரிக்கையுடன் என் இதழையும் சேர்த்தே பல கடைகளிலும் போட்டார்.

முதல் மாத இதழ் என்னுடையது நன்றாக விற்றது. நல்லது தான். ஆனால் அவரது பத்திரிக்கை பல கடைகளில் விற்காமல் போனது தான் எனக்கு வந்த கஷ்டம். சோதனை. எனது அடுத்த மாத இதழை, ஓரிரு கடைகளில் போட்டு விட்டு, அதிசயத்தை தனது குடோனில் மூட்டைக்கட்டிப் போட்டுவிட்டார். இப்படி அவர் செய்த துரோகம், என்னைக் கஷ்டத்திலும் நஷ்டத்திலும் அழுத்திவிட்டது.

விளையாட்டுத் துறை இலக்கியம் எழுதத்தானே நான் சென்னைக்கு வந்தேன்! பிறகு ஏன் வேண்டாத ஒரு துறையில், பத்திரிக்கை தொடங்கினேன். தொடர்ந்து நடத்தினேன்!

இதனால் என்ன கஷ்டம் நஷ்டம் என்று கேட்கலாம். சம்பளம் 200 ரூபாய், வீட்டு வாடகை 75, அச்சகத்திற்கு 100

ரூபாய் மற்ற செலவு 25. சாப்பாட்டுக்கு என்ன செய்வது?

இங்கே தான் ஆண்டவன் என்னை ஆட்படுத்திவிட்டான். வறுமையோடு என் வாழ்வு. நிறைந்து இருந்தது. நான் உதவி செய்தவர்கள், பலர். என்னிடம் வந்து கொண்டிருந்த பலர், என் மாணவர்கள் உட்பட, எல்லோரும் நைசாக விலகிக் கொண்டார்கள். வழியில் பார்த்தாலும், பார்க்காத வர்கள் போல ஒதுங்கிப் போனார்கள்.

மனிதர்கள் யார் என்பதைப் புரிந்து கொண்டேன். வறுமை, பசி, என்ன என்பதையும் புரிந்து கொண்டேன். ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவு என நான் பழகிக் கொண்டேன். என் மனைவியையும் குழந்தைகளையும் பசி தெரியாமல் வாழ்வித்துக் கொண்டேன்.

எட்டு மாதங்கள் பத்திரிக்கையை நடத்தினேன், ஆனால், என் இலட்சியமோ எட்டாத இடத்தில் நின்று கொண்டு கை நீட்டி அழைத்தது. கைகளை உயர்த்தக்கூட முடியாத அளவுக்கு பணமுடை. பலஹீனம்.

அதிசயப் பத்திரிக்கை அநியாயமாக மாண்டு போனது. மாண்டுபோனதை என்னால் பார்க்கத்தான் முடிந்தது. பசிக்கு முன்னால் இலட்சிய வேகம் எப்படி நிலைக்கும்? அதிசயம் அகால மரணத்தை அடைந்தது.

இனி கௌரவத்தை சம்பாதித்தாக வேண்டும். அதற்கு பணம் தான் மூலதனம் என்பதை தெரிந்து கொண்டேன். பட்டபின் ஞானியல்லவா!

கோடம்பாக்கம் எல்லையை விட்டு மேற்கு மாம்பலம், ரயில்வே பார்டர் ரோட்டில் உள்ள வீட்டிற்கு வந்தேன். அந்த வீட்டிற்கு வந்த பிறகு எத்தனை எத்தனை அனுபவங்கள்! எனக்கு வித்தை காட்டிய விந்தை நிகழ்ச்சிகள். விளையாட்டு இலக்கியத்தின் விதை தூவப்பட்ட காலக் கட்டம். சுவாரசியமான வாழ்க்கை என்றும் கூறலாம். இலக்கிய வளர்ச்சிக் காக நான் பட்ட என் துன்ப சம்பவங்கள் ஏராளம். ஏராளம்.

# 14. வறுமையும் வியாபாரமும்

**49**, ரயில்வே பார்டர் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை 33 என்ற முகவரி, ஆரம்ப கால எனது புத்தகங்களில் அச்சிடப்பட்டிருக்கும்.

அந்த வீடு மாம்பலம் ஸ்டேஷனுக்கும் கோடம்பாக்கம் ஸ்டேஷனுக்கும் இடையிலே அமைந்திருந்த ஒரு இடம். பழைய பங்களா அமைப்பிலே இருந்த அந்த கட்டிடத்தின் முன்புறம். ஒரு கிரவுண்டுக்கு மேலே காம்பவுண்டு போட்ட காலியிடமாக இருந்தது.

ஒரு பெரிய ஆபிசருக்குச் சொந்தமான இடம். ஆனால் அவரோ அதைப் பற்றிக் கவலைப் படாமல், வாடகை வந்தால் போதும் என்றதோடு வேறு எதையும் எண்ணாமல் இருந்ததால். அந்த வீட்டினைப் பற்றி வெளியில் பலவிதமான கெட்டப்பெயர்களும் இருந்து வந்தன.

எந்த விதமான விசாரிப்பும் இல்லாமல் ஏதாவது ஒரு வீடு கிடைத்தால் போதும் என்ற வேகத்தில், ஒரே ஒரு அறை, ஒரு சமையலறை என்னும் சிறிய வீட்டில் (ஒரு போர்ஷனில்) குடி வந்து விட்டேன்.

வந்ததும் தான் ஏன் வந்தோம் என்றாகிவிட்டது.

ஒரு நாள் இரவு திடு திடென்று ஆட்கள் ஓடுகிற சத்தம்.

எங்கள் வீட்டுக் கதவுகள் தட்டப்பட்டு, ஒரு பெண் ஓடி வந்து உள்ளே நுழைந்து பதுங்கிக் கொண்டாள். போலீசார் கெடுபிடி.

கொஞ்ச நேரம் கழித்து, சப்தம் அடங்கியது. என் வீட்டில் ஒளிந்திருந்த பெண், எதுவுமே நடக்காதது போல வெளியேறி, பக்கத்திலே உள்ள பெரிய வீட்டிற்குள் புகுந்து விட்டாள்.

அந்த வீட்டில் வசிப்பவர்கள் ஒரு மாதிரி போல் இருக்கிறதே என்று நான் சந்தேகப்பட்டது உண்மையாயிற்று. அந்த வீட்டுக்கு யார் வந்தாலும், அந்த டைப்பில் தான் வருவார்களாம். அரிசி வியாபாரம், தேங்காய் வியாபாரம் என்று ஏதோ சொல்லி வீட்டிற்கு குடி வந்து, தங்கள் ''சொந்த பிசினஸை'' தொடங்கி விடுவார்களாம். கேட்க மேய்க்க ஆளில்லாத காரணம் தான்.

பக்கத்திலே இருந்த எதிர் வீட்டுக்காரர் இஞ்சினியர் ஒருவர். அவரது குடும்பம் எங்களை ஒரு மாதிரியாகப் பார்த்துக்கொண்டே போகும். ஆனால் பேசமாட்டார்கள். ஏன் என்று எதுவும் புரியாத குழப்பமாக எங்களுக்கு இருந்தது.

ஒரு நாள் அவரோடு பேச நேர்ந்தபோது, பள்ளிக்கூட அட்மிஷன் பேச்சு வந்தது. நான் வித்யாமந்திர் எனும் பள்ளியில் ஆசிரியர் என்று சொன்னேன். விவரம் புரிந்து கொண்ட அவர், என்னிடம் மன்னிப்பு கேட்டார்.

அந்த வீட்டுக்கு வருகிறவர்கள் எல்லோருமே, 'அந்த' 'பலான' வேலையைச் செய்கின்றவர்கள், நீங்களும் அந்த வீட்டிற்குக் குடிவந்ததால். நாங்கள் உங்களைத் தவறாக நினைத்து விட்டோம் என்று மன்னிப்பு கேட்டார்.

பனை மரத்தின் கீழ் பாலைக் குடித்தது யார் குற்றம்? என் -நிலைமை புரிந்தது. வேறு வீடு பார்க்கலாம் என்றால், வறுமை விடவில்லையே! வறுமையின் கோரப்பிடியில் அடங்கிக் கிடந்த எனக்கு, பொறுமையே மேலோங்கியிருந்தது. திறமை

தன் வாலை சுருட்டி, அடக்கி மடக்கிக் கொண்டு விட்டது.

ஓராண்டு இப்படியே கழிந்தது. அன்றாடம் பல சோதனைகள்-வேதனைகள். இப்படி பயங்கரமான வீட்டுக்குள்ளே வந்துவிட்ட அவமானங்கள். அலங்கோலங்கள்.

இந்தச் சூழ்நிலையிலும் நான் சும்மா இருக்கவில்லை. ஒரு நாடகக் குழுவை ஆரம்பித்தேன். **நவராஜ் நாடக மன்றம்** என்ற பெயரிட்டு, நாடகம் எழுதி, அரங்கேற்றிக் கொண்டிருந்தேன்.

நாடகம் போட பணம் ஏது என்று நீங்கள் ஆச்சரியப்படலாம். பணம் செலவு செய்கிற நடிகர்களாகப் பார்த்து போட்டுக் கொள்வது, வேஷம் கொடுத்து டிக்கெட் விற்கும் திறமையுள்ளவர்களாக அழைத்து நாடகம் போட்டேன்.

இப்படியாக, நாட்களை ஓட்டிய நேரத்தில் தான், அதிலே இருந்த பெரிய வீடு காலியானது. வாடகைக்கு எனக்குக் கொடுக்கப்பட்டது. நிம்மதியோடு அந்த வீட்டிற்குள் குடி புகுந்தேன்.

உடலை அழிக்கும் காரியம் நடந்த வீட்டில். உடலை வளர்க்கும் உடற்பயிற்சி மன்றம் ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டது இது போன்ற பலப் பல புதிய வேலைகள் வேகமாக தொடங்கப்பட்டன.

1968-ம் ஆண்டிலே நடைபெற்ற நிகழ்ச்சிகள் இவை. பள்ளியில் வேலை. மாலையில் டியூஷன். அதற்குமேல் நாடக ஒத்திகை. இப்படியே பொழுதுகள் கழிந்தன.

நான் நாடகம் நடத்தியபோது, என்னுடன் இருந்து, என் நாடகக் குழுவில் ஒத்துழைத்த இருவர் இன்று, சினிமாத்துறையின் உச்சக்கட்டப் புகழில் இருக்கின்றார்கள்.

ஒருவர் பாரதிராஜா, இன்னொருவர் இளையராஜா.

நாடகம் நடத்தியதில் என்ன பலன் என்றால், வருகிற சம்பளத்துக்குமேலே, கொஞ்சம் செலவுக்கு பணம் கிடைத்ததுதான்.

குடும்பத்தை இனிமேல் கஷ்டத்திற்கு ஆளாக்கக் கூடாது என்ற ஒரு ஆழ்ந்த முடிவு தான். என் புத்தியை புத்தகம் எழுத விடாமல் செய்தது.

உள்ளத்தின் ஒரு மூலையில், நீ காலத்தை **வீணாகக் கழிக்கிறாயே** என்று உறுத்தல் ஒன்று உறுத்திக் கொண்டேயிருக்கும். வறுமை ஒன்று வந்து, வழியை மாற்றிக் கொள்ளக் கூடாது என்று அழுத்திக் கொண்டேயிருக்கும். இப்படியே , என் மனம் ஓடிக்கொண்டும் வாடிக் கொண்டும் இருந்ததே தவிர உட்கார்ந்து யோசிக்கக்கூட விடாமல் விரட்டியது.

இந்தச் சூழ்நிலையில்தான், நான் ஒரு ஆளை சந்திக்க வேண்டியிருந்தது. இது காலத்தின் கட்டாயமாகவே அமைந்துவிட்டது.

என்ன வேலை செய்தாலும் நான் எந்தத் திசையில் போனாலும், நான் புத்தகம் எழுதியாக வேண்டும் என்பது இறைவன் எண்ணம் போலும். அந்த சக்திதான் என்னை ஆட்படுத்தியது போலும். அந்த விரும்பத்தகாத ஆளினை, எனக்கு அந்த சக்திதான் காட்டிக் கொடுத்துவிட்டது.

சென்னையில் பல இடங்களுக்குப் போய் வர சைக்கிள்தான் வாகனமாக இருந்து உதவியது. காரைக்குடி கல்லூரியில் பணியாற்றியபோது, என் முதல் மாத சம்பளத்தில் வாங்கிய சைக்கிள் அது.

தியாகராய நகர் உஸ்மான் ரோட்டில் ... ான் வந்து

கொண்டிருந்தபோது, பஞ்சராகிவிட்டது. பஞ்சர் ஒட்டப்போனபோது, அந்த மனிதன் என் கண்ணில் பட்டு, வணக்கம் தெரிவித்தார். என் இயல்புக்கு ஏற்ப இரக்க மனதுடன் விசாரித்தேன்.

காரைக்குடியில் நாம் இருவரும் ஒரே ஜிம்மில் உடற்பயிற்சி செய்தோமே! தங்களுக்கு நினைவு இருக்கிறதா என்று விசாரித்தார்.

ஆமாம் என்றேன்.

சைக்கிள் கடை வைத்திருந்தேன். நஷ்டம் ஆகிவிட்டது. குடும்பத்தில் சண்டை. பிழைப்புக்காக சென்னை வந்து, சைக்கிள் கடையில் வேலை செய்கிறேன். எனக்கு நீங்கள் உதவி செய்தால், நன்றியோடு இருப்பேன் என்று மிகவும், பணிவோடு வேண்டிக் கொண்டார்.

என் வீட்டிற்கு வா என்று, என் முகவரியைக் கொடுத்துவிட்டுச் சென்றேன்.

வரமாட்டார் என்று தான், முகவரியைக் கொடுத்துவிட்டு வந்தேன். ஆனால், விதிவிடவில்லை. என்னிடம் விரட்டிக் கொண்டு வந்து, அந்த மனிதரை சேர்த்து விட்டது.

அவருக்கு சோறுபோட்டு, உறங்கவும் இடம் கொடுத்து உபசரித்தேன். தங்கக்கூட இடம் இன்றித் தவித்துக் கொண்டிருந்த அந்த மனிதர், என்னை நன்றாகப் பிடித்துக்கொள்ள வேண்டும் என்று முடிவு செய்து விட்டார் போலும்.

தினம்வந்து, எனக்குக் கிடைத்த கொஞ்ச நேரத்தையும் அழித்தபடி, பேசிக் கொண்டிருந்ததின் விளைவு - சைக்கிள் கடை வைப்பது என்று முடிவாயிற்று.

சைக்கிள்களை நான் வாங்கித்தர வேண்டும். அந்த ஆள், வேலை பார்ப்பது - செலவு போக, லாபத்தில் பாதி என்றும் முடிவாயிற்று.

யுனைடெட் பேங் ஆப் இந்தியா என்ற பேங்கில் வேலை செய்த ஒரு நண்பர், லோன் வாங்கித் தருகிறேன் என்றார். லோனுக்கு முன் பணமாக 300 ரூபாய் கட்ட வேண்டும் என்றார்.

வாங்கிய அந்த மாத சம்பளத்தை பேங்கில் கட்டிவிட்டு செக்கை வாங்கிக் கொண்டு, சைக்கிள் கடையில் போய் சைக்கிள்களைப் பெற்றுக் கொண்டு, மேற்கு மாம்பலம் ஏரிக்கரைத் தெருவில் உள்ள 59ம் எண்ணுள்ள கடையில், முதன் முதலாக வியாபாரத்தைத் தொடங்கினேன்.

இதில் என்ன விசேஷம் என்றால், கையில் இருந்த பணத்தையெல்லாம் (அதாவது சம்பளத்தை) கொடுத்துவிட்டு, சைக்கிள்கள் வாங்கியாயிற்று. கொஞ்சம் கடன் வாங்கி, கடைக்கு அட்வான்ஸும் கொடுத்தாகிவிட்டது. காலையில் 6 மணிக்கு கடையும் திறந்தாகி விட்டது.

காலையிலே வீட்டிலே டீ கூட போடவில்லை. வீட்டில் நான், என் மனைவி. 3 குழந்தைகள். யாரும் எதுவும் சாப்பிடவில்லை.

சைக்கிள் ஷாப்பில் வருகிற பணத்தைக் கொண்டு ஏதாவது சமைத்து சாப்பிடலாம் என்று நாங்கள் (குடும்பமே) காத்துக் கொண்டிருந்தோம். என்னே இறைவனின் சோதனை!

அன்று மாலை 5 மணி வரை ஒரு பத்து பைசாவுக்குக் கூட வண்டி ஓடவில்லை. பசியோ பசி என்று காத்திருந்தோம். இனி பொறுக்க சக்தியில்லை இறைவா என்று என் உள் மனம் ஓங்காரமிட்டுக் கொண்டேயிருந்தது.

சரியாக மாலை 6 மணி அளவில், ஒரு ரூபாய்க்கு வண்டி

வாடகைக்கு ஓடி. கிடைத்தது பணம், எடுத்துக் கொண்டு கடைக்கு ஓடிப்போய் அரிசி, பருப்பு, காய், போன்றவற்றை வாங்கிக் கொண்டு, நாங்கள் சமைத்துசாப்பிட, இரவு 9 மணி ஆயிற்று.

இந்த நிகழ்ச்சியை இங்கு நான் எதற்காக விவரித்துக் காட்டுகிறேன் என்றால், இன்று நான் முழுநேர புத்தக வியாபாரியாக இருப்பதற்கு அன்று ஏற்பட்ட பசிக்கொடுமையே காரணம்.

வியாபாரத்தை ஒரு கை பார்த்துவிடுவது என்ற வெறி அன்றுதான் ஏற்பட்டது. ஒரு ரூபாய்க்காக ஒரு நாள் முழுவதும் நான் காத்துக்கொண்டும், ஏங்கிக் கொண்டும் இருந்த அன்றைய அவல நிலையை, நான் இன்றும் நினைத்துக் கொண்டிருக்கிறேன். மறக்கக் கூடிய அனுபவமா இது!

தினம் தினம் சைக்கிள் ஷாப்பில் வருகிற பணம் வருவாயாக இருந்தது. எங்கள் வயிற்றுக்கு சாப்பாடாக ஆனது.

எங்கள் கூடவே சாப்பிட்டும், உறங்கியும் வந்த அந்த மனிதர், சரிபாதி பணத்தை வாங்கிக் கொண்டார். இன்னும் பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசையில் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தார் போலும்.

காலையில் உடற்பயிற்சிகள் செய்து வருவது என் வழக்கம். ஒரு நாள் உடற்பயிற்சி செய்கிறபோது என்னைப் பார்த்த அந்த மனிதர், நாம் ஜிம் ஒன்று ஆரம்பித்தால் என்ன என்றார்.

நீங்களும் செய்தது போல இருக்கும், வருகிறவர்களுக்கும் சொல்லிக் கொடுத்தால் வருமானமும் வருமே என்று கூறிய யோசனை, எனக்கு சரியாகப் பட்டது.

உடனே செயல்படத் தொடங்கினேன். அடுத்த மாத

சம்பளத்தில், வெயிட் டிரெயினிங் செய்வதற் காக இரும்பு எடைத்தட்டுக்களை வாங்கி விட்டேன். என் வீட்டுக்கு முன்புறம் உள்ள ஒரு கிரவுண்ட் காலி இடத்தில், **ராஜ்மோகன் உடலழகுப் பயிற்சிப் பள்ளி** என்று பெயர்வைத்து, ஆரம்பித்து விட்டேன்.

ஒரு மாதம் வகுப்பு எடுக்க ஒருவருக்கு 3 ரூபாய் கட்டணம். மாலை 6 மணியிலிருந்து இரவு 9 மணி வரை பயிற்சிகள் நடக்கும். காலை 6 மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்பி 6-7.30 - 8 - 9.30 வரை 2 டியூஷன்கள் எடுத்துவிட்டு, பிறகு 4.30 முதல் இரவு 6.30 வரை டியூஷன் எடுத்துவிட்டு வீட்டிற்கு வந்தவுடன். உடற்பயிற்சி வகுப்புக்கு வந்து விடுவேன்.

இரவு 9 மணிக்கு மேலே சாப்பிட்டுவிட்டு புத்தகங்கள் எழுத வேண்டும் என்ற வேகம் வரும். உடனே படிக்கப்போனால், இரவு 12 ணி ஆகிவிடும். அதற்குப் பிறகு, எப்பொழுது எழுதுகிறேன், எப்பொழுது உறங்குகிறேன் என்று எனக்கே தெரியாது. உடல் களைத்துப் போகும் வரை, எனது படிப்பும் எழுத்தும் தொடரும்.

அடுத்த நாள் காலை 5 மணிக்கு எழுந்து, விடுவேன். இப்படியே ஒரு 6 மாதங்கள் கழிந்தன. ஓயா உழைப்புதான், உழைப்புக்கேற்ற வருமானம் வந்தது. ஆனால் போதவில்லை.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான் என்னை புத்தகம் எழுதவேண்டும் என்று ஒரு சக்தி தூண்டியது. அந்த சக்தியின் அதி வேகத்திற்கு நான் ஆளாகிக் கொண்டேன்.

காலை 6 மணிக்கு டியூஷன்கள். பிறகு பள்ளிக்கூடம். மாலை-டியூஷன்கள், நாடக ஒத்திகைகள், உடல் பயிற்சி கூடத்தில் வருகிறவர் களுக்குப் பயிற்சியளித்தல், என் வாழ்க்கைப் பயணம் நிறைய உழைப்புடன் நிறையாத வருமானத்துடன் ஓடத் தொடங்கியது.

# 15. பாலும் நூலும்

சைக்கிள் கடையும் நடந்து கொண்டிருந்தது. ஏறத்தாழ 8,9 சைக்கிள்கள் இருந்தன. தினம் ஒன்றுக்கு வரவு 10 ரூபாய் என்று தான் கணக்கு வந்தது. எவ்வளவு வந்தாலும், இந்த கணக்கு இப்படியே நிலையாக இருப்பதைக் கண்டு எனக்கு திகீரென்றது.

எங்கேயோ தவறு நடக்கிறது? எப்படி என்று தான் புரியவில்லை. ஏனென்றால் நான் யார் மீதும் நம்பிக்கை வைத்து விடுவேன். நம்பிக்கை நிறைவாக இருக்கும் போது சந்தேகம் எப்படி வரும்?

சைக்கிள் கடையில் வேலை செய்த ஆளின் பெயர் சேது. தினம் உடற்பயிற்சி செய்தாக வேண்டும் என்பதால், பயிற்சிக்கு சரியாக வந்து விடுவார். பயிற்சிப் பள்ளியில் வருகிற பணத்திலும் பாதி என்று ஒப்பந்தம்.

கையில் கொஞ்சம் காசு சேர ஆரம்பித்தது. அதாவது வறுமையானது உணவு வகையில் இல்லை. ஆனாலும் செழிப்பான அமைப்பு இல்லை, சாப்பாட்டிற்கு கவலையுமில்லை என்ற கௌரவமான நிலை. கொஞ்சம் மன நிம்மதி.

விளையாட்டுப் புத்தகம் எழுத வேண்டும் என்று மனதுக்குள்ளே உறுத்தல்களும் உந்துதல்களும், உணர்வுகளும் நிறைய இருந்தாலும், நினைவுக்கு உற்சாகம் வரவில்லை. நேரம் வரவேண்டாமா?

சேது ஒரு நாள் ஒருவரை அழைத்து வந்தார். இவர் பெயர் ராமநாதன். நல்ல மனிதர். பால் வியாபாரி. உங்கள் வீட்டுக்குப் பால் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறேன் என்றார்.

ஒரு மனிதரை எப்படி கவர்ந்து, அட்ராக்ட் செய்ய வேண்டும் என்பதற்கு சாட்சியாக அவரையே சொல்லலாம். அந்தப் பால்காரர் பேச்சில் செயலில், நடைமுறையில், பழக்கத்தில், நான் நம்பி விட்டேன்.

அவர் எதற்கு அப்படி அடக்கத்துடன் நடந்து கொண்டார் என்பது அப்போது எனக்குப் புரியவில்லை. எல்லோரும் என்னைப் போலவே இருப்பார்கள் என்று தான் நான் நம்பினேன். என்னைப் போல என்று எழுதியதற்கு ஒரு காரணம் உண்டு.

**எனக்கு பணம் தேவை தான். ஆனால் நான் பணத்துக்கு அடிமையில்லை.** பணத்தின் பின்னால் போகிறவனும் அல்ல. பிறர் பணத்துக்காக பொய் சொல்வதும் இல்லை முயற்சிகள் செய்வதும் இல்லை போன்ற செயல்கள் எனக்கு எப்போதும் பிடிக்கும் என்பதால் தான், என்னைப் போல் என்றேன்.

ஓர் எருமை மாடு வாங்கி விட்டால், ஒரு நாளைக்கு 10 ரூபாய் லாபம் கிடைக்கும். காலை மாலையில் அரை லிட்டர் பாலும் வீட்டுக்கு கிடைக்கும், 6 மாதத்தில் மாடு வாங்கிய பணம் முழுவதும் கைக்கு வந்து விடும். பிறகு மாட்டிற்கு போட்ட பணம் நமக்கு முதல் தானே என்று ஒரு யோசனையை பால்காரன் ஒருநாள் என்னிடம் கூறினான்.

நமக்கெதற்கு மாட்டு வேலை என்று முதலில் தட்டிக் கழித்து விட்டேன். **எனக்கு நல்ல பாடம் கற்பிக்க வேண்டும் என்பது ஆண்டவனுக்கு ஆசைபோலும்.**

நான் தடுக்கும் முயற்சியில் தோற்றுவிட்டேன். என்னை சரி என்று சொல்ல வைக்கும் முயற்சியில் பால்காரன் ஜெயித்து விட்டான். இது நடந்தது 1969 ஆம் ஆண்டு. இருந்த பணத்தையெல்லாம் சேர்த்து 2000 ரூபாய்க்கு ஒரு டெல்லி எருமை என்று அழைக்கப்படுகிற எருமையை, ஆந்திராவிலிருந்து வரவழைத்து வாங்கினேன். வீட்டுக்கு பால்கறக்கும் எருமை மாடு வந்து விட்டது.

பால்கார இளைஞனிடம் இப்படித் தான் அன்பாகக் கூறினேன். விதியோ வேறு விதமாக அந்த வார்த்தைக்கு அர்த்தம் கொடுத்துவிட்டது.

**தம்பி! வீட்டுக்கு மாடு வந்து விட்டது. என்னால் மாட்டை பராமரிக்கும் அளவுக்கு நேரமில்லை. அந்த வேலையும் தெரியாது. இந்த என் மாட்டை, உன்மாடு போல பார்த்து கொள்** என்று தான் கூறினேன். அவனும் சரி என்று சந்தோஷத்துடன் சிரித்தபடி பேசினான். அவன் உள் மனதில் சதியும் சேர்ந்து சிரித்து விளையாடிக் கொண்டிருந்தது என்று அப்போது எனக்குப் புரியவில்லை.

சரியாக 6 மாதம் கழிந்தது. பால்கார ராமனாதனோ, மிகவும் மரியாதையாக, நாங்கள் சிறிதும் மனம் கோணாதவாறு நடந்து கொண்டான். நல்ல நாணயமான மனிதன் என்று நாங்களே பேசும் அளவுக்கு நடந்து கொண்டான்.

அவன் கணக்குப் பார்த்திருக்கிறான் மாட்டுக்கு கொடுத்த விலை, பால்விலை எல்லாவற்றையும் கூட்டிக் கழித்து விட்டு, எனக்கு கணக்கு சரியாகி விட்டது, என்று ஒரு நாள், நான் இல்லாத நேரம் பார்த்து மாட்டை பிடித்துக்கொண்டு போகத் தொடங்கினான்

எங்கோ வெளியில் போய் வந்த நான், மாட்டுக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு அவன் மாட்டோடு அல்லாடியபடி போனதைப் பார்த்து விட்டு, என்னப்பா! எங்கு மாட்டைக் கொண்டுபோகிறாய் என்றேன்.

என் மாட்டை நான் கொண்டு போகிறேன். அதற்கு உங்களிடம் பர்மிஷன் எதற்கு கேட்க வேண்டும் என்றான்.

அதிர்ச்சியாக இருந்தது எனக்கு.

இது என் மாடப்பா! உன் மாடு என்கிறாயே. எப்படி? என்று கோபமாகக் கேட்டேன் நான்.

நீங்கள் தானே உன் மாடு போல பார்த்துக்கொள்ளச் சொன்னீர்கள்! இதை என் மாடு போலத் தான் நானும் பார்த்துக்கொண்டேன். அப்பவும் என் மாடு தான் , இப்பவும் என் மாடு தான். என்று அடித்துப் பேசினான். சத்தமாகப் பேசினான். கூட்டம் சேர்ந்து விட்டது.

என் அண்டைவீடு, அடுத்த வீட்டுக்காரர்களி டம், இதை அவனது சொந்த மாடு என்றே சொல்லிக்கொண்டு வந்திருக்கிறான். திட்டமிட்டு , இந்த விஷயம் எனக்குத் தெரியாதே!

என் பேச்சு அந்தக் கூட்டத்தில் எடுபடவில்லை. ஏனென்றால், எல்லோரும் இது அவனுடைய மாடு என்று தான்சொன்னார்கள். நானும் தலை நிமிராமல் நின்றேன். பேச என்ன இருக்கிறது!

அவன் கையிலிருந்த மாட்டுக் கயிற்றை, இப்படிக்கொடு என்று வாங்கிக்கொண்டேன். எல்லோரும் என்னையே பார்த்துக் கொண்டு மௌனமாக நின்றார்கள். வேடிக்கை பார்த்தார்கள்.

என்னை ஏமாளி என்று நினைத்தார்களோ,

ஏமாற்றுக்காரன் என்று நினைத்தார்களோ, நானறியேன்.

தம்பி! என்று பால்காரனை அமைதியாக அழைத்தேன். **''நீயாக என் மாட்டை ஓட்டிக் கொண்டு போனால், இது எனக்கு அவமானம். நானாக் இந்த மாட்டைக் கொடுத்தால், அதற்குப் பெயர் சன்மானம்.**

மாட்டை ஓட்டிக்கொண்டு போ! ஆனால் மனதார உன்னை நம்பினேன், நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டாய்... நீ விளங்க மாட்டாய் போ! என்று கயிற்றை அவன் கையில் கொடுத்து, அனுப்பினேன்.

அவன் ஒரு மாதிரியாக என்னைப்பார்த்து சிரித்த சிரிப்பு, இன்றும் என் மனதில் பசுமையாகத் தெரிகிறது.

என் வயிற்றெரிச்சல். ஏமாற்றம் தந்த சாபம், அவனை சும்மா விடவில்லை.

மாட்டோடு போன அவன் ஒருநாள், ரெயில்வே லெவல் கிராசிங்கில் மாட்டை ஓட்டிக் கொண்டு சென்றபோது, எலக்டிரிக் டிரெயின் வந்து விடவே, மாடு மிரண்டு துள்ள, அவன் மாட்டை விடாமல் பிடித்துக் கொண்டு தடுமாற, ரயில் பக்கத்தில் வந்து விட்டதே என்று பயந்து விழிக்க, அவன் வாய் ஒரு பக்கமாக இழுத்துக் கொண்டது.

இப்போதும் பார்க்கிறேன். அவன் சும்மா இருந்தாலும் வாய் சிரிப்பது போலவே இருக்கிறது. ஐயோ பாவம்!

படிக்காத பேரோடு ஞானப் பெண்ணே!

பாம்போடு பழகுதல் ஆகும் பெண்ணே!

அடிபட்டுத் துடித்தேனே ஞானப் பெண்ணே!- அந்த

அனுபவம் போதுமே ஞானப் பெண்ணே!

என்று நான் பாடும் அளவுக்கு, எனக்கு அனுபவம் வந்து விட்டது, வாழ்வின் ஒரு பாதி கல்வி உலகத்தில் இருந்து விட்டு,

மறுபாதியான வாழ்க்கை உலகத்திற்கு வந்தபோது அனுபவம் கிடைத்ததே அவையெல்லாம் நல்ல அனுபவம்.

படிக்காதவர்களோடு பழக்கம், இந்த பால்காரனுடனே நின்று விட்டதா! இல்லையே! ஒரு தொடர் கதை போலவே தொடர்ந்து, ஒரு முடிவுக்கு வர 4 ஆண்டுகள் ஆயின.

இப்படியெல்லாம் இடர்பட்ட போது, புத்தகம் எழுதுகிற புத்தி எனக்கு எப்படி ஏற்படும்?

அப்படியும் வந்ததே! அதுதான் அதிசயம். ஆச்சரியம், கையெழுத்துப் போடவும் ஓரிரண்டு வார்த்தைகள் எழுதவும் தெரிந்த ஒரு ஆள் தான், சைக்கிள் கடையின் பார்ட்னர், உடலழகுப் பயிற்சிப் பள்ளியில், பயிற்சி கொடுக்கும் உதவி ஆளாகவும் அவர் இருந்தார்.

பயிற்சி செய்ய வந்தவர்கள் எல்லோருமே, நன்கு படித்தவர்கள். வக்கீல்கள், டாக்டர்கள், அலுவலகங்களில் பணி புரிபவர்கள். இப்படி வந்தபோது, உடலைப் பற்றிய விளக்கம், அவ்வப்போது எழுகின்ற சந்தேகங்கள், இவற்றிற்கெல்லாம், விளக்கம் தந்தால் தானே, வருபவர்களுக்கும் மகிழ்ச்சியாக இருக்கும்!

ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக விளக்கம் சொல்லி, எனக்கும் அலுத்துவிட்டது. சில சமயங்களில் எரிச்சலும் ஏற்பட்டது.

இதனால் ஒரு முடிவுக்கு வந்தேன். நாம் பேசுகிற விளக்கங்களையெல்லாம் தொகுத்து, ஒரு புத்தகமாகப் போட்டு விட்டால் என்ன?

சிந்தனை செயல் வடிவம் பெற்று விட்டது. நூல் எழுதுவதற்கு முன்னரே, தலைப்பையும் தேர்ந்தெடுத்து விட்டேன். கேட்பதற்கு இனிமையாக, புதுமையாக இருக்கவேண்டு மல்லவா! உடற்பயிற்சி என்றதும் பின் வாங்காமல், வாங்க முன் வரவேண்டும் என்பதாக தலைப்பு

இருக்க வேண்டும் என்பதற்காக '**நீங்களும் உடலழகு பெறலாம்**' என்று தலைப்பு தந்தேன்.

ஆர்வமாகத்தான் ஆரம்பித்தேன். அத்தனை ஆவேசம் எப்படி வந்ததோ தெரியவில்லை. ஒரு மாதத்திற்குள்ளே 100 பக்கங்கள் உள்ள புத்தகம் ஒன்றை எழுதி விட்டேன்.

புத்தகத்தை அச்சிட வேண்டுமே? யாரிடம் போவது? எவரிடம் போய் கேட்பது?

யாராவது புத்தகத் தயாரிப்பாளரை அணுகிக் கேட்கலாம். நமக்கும் சுலபம். புத்தகமும் விரைவில் வெளியாகிவிடும் என்று நம்பினேன். முயற்சிகள் பலவற்றை மேற்கொண்டேன்.

நான் ஏறி இறங்காத பதிப்பகம் இல்லை. சென்னையில் உள்ள முக்கியமான பதிப்பகம் அனைத்திலும் நான் எழுதிய ஸ்கிரிப்டுடன், ஏறி இறங்கினேன்.

என்னை ஏற இறங்கப் பார்த்தவர்கள் பலர். யாரடா இவன்? கிறுக்கனாக இருப்பான் போலிருக்கிறது' என்று ஏனோ தானோ என்று பார்த்தவர்கள் பலர். பேசியவர்கள் பலர்.

இப்படி, இந்தத் தலைப்பில் புத்தகம் போட்டால் யாரையா வாங்குவார்கள். நாங்கள் தலையில் கை வைத்துக் கொண்டு தெருவில் நிற்க வேண்டியது தான். ஏதாவது நாவல், சிறுகதை, செக்ஸ் , இப்படி கொண்டு வந்தால், நாங்கள் முயற்சிப்போம் என்று முடிவாகக் கூறியவர்களும் உண்டு.

நானும் ஒரு முடிவுக்கு வந்தேன். ஏறி இறங்கிய பதிப்பக வாசலில் நின்று, வைராக்யமாக, உறுதி எடுத்துக் கொள்வது எனக்கு வழக்கமாக, அரிய பழக்கமாகவே போய் விட்டது.

வெகு வேகமாக என் மீசையை முறுக்கிக் கொள்வேன் என் மனதுக்குள்ளேயே பேசிக்கொள்வேன். உடற்பயிற்சி என்றால் இவ்வுளவு கேவலமாகவா இருக்கிறது? **இதை நானே பதிப்பிப்பேன், புத்தகத்தை வெளியிடுவேன். போட**

**மாட்டேன் என்று சொன்ன பதிப்பாளர்களே! என்னிடம் இப்பொழுது வந்து, புத்தகங்களை காசு கொடுத்து வாங்குமாறு செய்வேன். 'இது சத்தியம்'** என்று எனக்குள்ளேயே கத்திக்கொண்டு, என்னை தோல்வியானது துவளச் செய்து விடாமல் தேற்றிக் கொள்வேன். எனக்கு கதி நான் தான். வேறு கதி?

எப்படியும் 'நீங்களும் உடலழகு பெறலாம்' என்ற எனது மூன்றாவது புத்தகத்தைப் போட்டுவிடவேண்டும் என்று, உடனே பலப்பல முயற்சிகளை மேற்கொண்டேன்.

முதல் புத்தகத்தை 150 ரூபாய் கொடுத்து விலைக்கு வாங்கிப் போட்ட அழகு பதிப்பகத்தை நினைத்துக் கொண்டேன்.

இரண்டாவது புத்தகம், காரைக்குடி அழகப்பா உடற்பயிற்சிக் கல்லூரி முன்னாள் மாணவர் கழகத்தின் சார்பாக, கழகத்தின் பணம் கொண்டு வெளியிடப்பட்டதை நினைத்துக் கொண்டேன்.

மூன்றாவது புத்தகம், நானே போட வேண்டும் என்ற நிலை வந்தபோது, விழி பிதுங்க நேரிட்டது. வயிற்றுப் பாட்டுக்குத்தான் வருமானம் போதும் என்கிற நிலையில், எவரும்போட விரும்பாத, புத்தகம் தயாரிக்க முயற்சிக்காமல் ஒதுக்கித் தள்ளிய ஒரு விளையாட்டுத் துறையில், மேலும்புதிய முயற்சியை மேற்கொண்டு, மேலும் மேலும் கடனாளியாவதா?

குடும்பமா? புத்தகத்தைப் போட்டுத்தான் ஆக வேண்டுமா? குழப்பக் கடலுக்குள் கொஞ்ச நாள் குளியல், கடைசியில் இலட்சியம் தான் என்னைத் தூக்கி நிமிர்த்தியது. துரத்திப் பிடித்தது.

குடும்பத்தைக் கடவுள் காப்பாற்றுவார் என்று மனைவியிடம் இருந்த மீதி நகைகளை மார்வாடிக் கடையில் அடகு வைத்து, பணம் புரட்டிக் கொண்டு, புத்தக வேலையை

ஆரம்பித்தேன்.

பதிப்பகத்திற்கு என்ன பெயர் வைப்பது எனது இரண்டு மகன்களின் பெயர்களை தனித்தனி சீட்டில் எழுதி சுருட்டிப்போட்டு, ஒன்றை எடுக்கச் செய்தேன். ராஜ்மோகன் என்று வந்தது.

உடனே ராஜ்மோகன் பதிப்பகம் என்று ஆரம்பித்தேன். வீரசிவாஜி, குதிரை மேல் வேகமாக சவாரி செய்வது போல ஒரு படத்தைத் தயாரித்தேன். அதுவே பதிப்பக சின்னமாக இருந்தது.

எனது அட்டைப் படத்திற்கு யாரைப் போடுவது என்று யோசித்து, என்னிடம் வேலைக்கு இருந்த சைக்கிள் கடை வேலையாளை, பயிற்சி செய்வதுபோல, போஸ் கொடுக்கச் செய்து, படம் எடுத்து அட்டையில் போட்டேன்.

யாரோ முகம் தெரியாத ஒருவரை, அட்டைப் படத்தில் போடுவதைவிட, நம்மிடையே உள்ள, நமக்கு தெரிந்த ஒருவரின் படத்தைப் போட்டால், அவர் நன்றியோடாவது இருப்பார், அவரை வாழ்வில் உயர்த்தியது போல இருக்கும் என்ற ஒரு நல்லெண்ணத்தில் தான் இப்படிச் செய்தேன்.

ஆனால், அந்த மனிதன் புத்தகம் வந்த பிறகு, செய்த அயோக்கியத்தனத்தை, என்னால் ஜீரணிக்க முடியவில்லை. கஷ்டப்பட்டு, காசு சேர்த்து, எதிர் நீச்சல் போட்டு, புத்தகத்தை வெளிக்கொணர்ந்து, பலரிடம் கொடுத்த போது, அவர்கள் பாராட்டியது எனக்கு மகிழ்ச்சியளிக்கவில்லை. காரணம், புகழ்ச்சியைவிட, எனக்கு ஏற்பட்டிருந்த மனதிருப்தி முழுவதும் கேள்விப்பட்ட விஷயத்தில் மரண அடியைப் பெற்றிருந்தது.

மலர்ப்படுக்கையிலே நல்ல மகிழ்ச்சியுடன் படுத்தபோது, முள் ஒன்று குத்தியது போல, அந்த வேலைக்கார நண்பன் பேசியிருந்த பேச்சுக்கள் எனக்கு வேதனைக்கு மேல் வேதனையை அளித்தன.

# 16. கடவுள் கொடுப்பார்

புத்தகம் எழுதவேண்டும் என்ற வேகத்தில் தான், கல்லூரி வேலையை ராஜினாமா செய்தேன். சென்னைக்கு வந்து, பள்ளி ஒன்றில் சேர்ந்தேன். ஏனென்றால், குடும்பச் செலவுக்கு பணம் வேண்டும் என்பதற்காக,

ஆனால், கல்லூரி வேலையிலிருந்து கீழே வந்து, நான் பள்ளியில் பணியாற்றியதைப் பற்றி, பலர் பலவிதமாக, அவர்களுக்கு யோசிக்கத் தெரிந்த அளவில், நிறையவே பேசினார்கள்.

ஏதோ நான் கல்லூரியில் தவறு செய்தது போலவும், அதனால் வேலையை விட்டு டிஸ்மிஸ் செய்யப்பட்டதாகவும், கடைசியில் பள்ளியில் வந்து சேர்ந்து கொண்டேன் என்பதாகவும் பேசினார்கள்.

கேள்விப்பட்ட நான், கவலைப்படவில்லை. கிண்டலும், கேலியும் எனக்குப் பழக்கப்பட்டது தானே. இந்த ஏச்சும், பேச்சும், லட்சியத்தில் இருந்த எனது பிடிப்பைத் தளர்த்தி விட முடியவில்லை.

சுரேஷ் என்பவரோடு சேர்ந்தேன். கலைநீதி என்ற பத்திரிகை ஒன்றைத் தொடங்கினேன். எனக்கு அதில் ஏற்பட்ட

அவமானத்தால், நானே ஒரு புதிய மாத இதழை ஆரம்பித்து, பெருமிதம் கொண்டேன்.

மன திருப்தி, பண திருப்தியைத் தரவில்லை, வறுமைக்கடியில் நான் வதங்கியதால், பணம் திரட்டிட, எழுத்துப் பணி எனக்கு உதவ வில்லை என்பதாலும்; சினிமா முயற்சிக்கு நாடகம் தான் ஏணிப்படி என்று பலரிடம் பெற்ற உபதேசத்தாலும் நாடகத்தில் இறங்கி, இரவு பகலாக அலைந்து திரிந்து, 2,3 ஆண்டுகளை வீணாகக் கழித்து விட்டேன்.

இந்நிலையில் தான், பால்கார ராமானாதன் என்பவருடன் பழக்கம் ஏற்பட்டு, எருமை மாடு ஒன்றை 2000 ரூபாய்க்கு வாங்கி, 8 மாதம் கழித்து எருமை மாட்டை பால்காரன் சொந்தம் கொண்டாடி ஓட்டிக்கொண்டு போக பறி கொடுத்துவிட்டு ஏமாந்த கதையையும் உங்களுக்கு முன் பகுதிகளில் விளக்கமாக எழுதியிருந்தேன்.

வேதனையான இந்த ஏமாற்ற நாடகத்திலிருந்து விடுபட்டு, மனச்சுமையை இறக்க முயற்சித்தபோது தான், சைக்கிள் கடையை ஆரம்பிக்க சேது என்ற மனிதனை விதி சந்திக்க விட்டது.

சைக்கிள் கடை வியாபாரத்திலிருந்து உடற் பயிற்சி தருகிற ராஜ்மோகன் உடலழகுப் பயிற்சிப் பள்ளி என்ற நிலையத்தையும் ஆரம்பித்தேன்.

அப்பொழுதே, (Man in Madras) என்ற நாடகம் ஒன்றை எழுதி, தயாரித்து, நடித்து, இயக்கிக்கொண்டிருந்தேன். அன்று பாவலர் பிரதர்ஸ் என்ற பெயரில் இசைக்குழு நடத்தி வந்த இளையராஜாதான், அந்த நாடகத்திற்கு இசையமைப்பாளர்.

அந்த நாடகத்தில், முரட்டுத்தனமான அடியாள் போன்ற வேஷத்தை உருவாக்கி, எனது சைக்கிள் கடை வேலையாளை, அதில் நடிக்கவும் வைத்தேன்.

சைக்கிள் கடையில் ஒர்க்கிங் பார்ட்னர். உடற்பயிற்சிப்

பள்ளியில் மரியாதைக்குரிய மாஸ்டர், நாடகத்திலும் ஒரு நடிகர். புதிதாக எழுதிய நீங்களும் உடலழகு பெறலாம் என்ற புத்தகத்தின் அட்டைப் படத்தில் படம் போட்டு இவ்வளவு உதவிகளையும் செய்து, அந்த மனிதனை முன்னுக்குக் கொண்டு வர முயற்சித்த எனக்கு, கிடைத்த பரிசு என்ன தெரியுமா?

**நம்பிக்கை துரோகம்.**

நான் சைக்கிள் கடையில் கொஞ்ச நேரம் தான் இருப்பேன். மீதி நேரம் முழுவதும், அந்த மனிதனின் பொறுப்புதானே. அதனால் கடைக்கு வந்த வருமானத்தில் பாதி, கணக்கில் வராமல்போக ஆரம்பித்தது. துரோகம் நடக்காது என்று நான் நூறு சதவிகிதம் நம்பினேனே! அதற்குக் கிடைத்த அன்பளிப்பு.

வீதியிலே உறங்கியவனுக்கு காசும், மற்றவர்கள் தருகிற மரியாதையும், புத்தியில் தலைக் கனத்தை கொடுத்து விட்டது. தான் யார்? தன்னுடைய நிலை என்ன? தன்னுடைய தகுதி என்ன? படிப்பு அறிவு என்ன? என்பதையெல்லாம் அவர் மறந்து விட்டார்.

'என்னைவிட எல்லா தகுதியும் பெற்றவர். எனக்கும் மேலே' என்று அவர் எண்ணத் தொடங்கினார். அதனால், அவர் பேச்சும் போக்கும் வித்தியாசமாக மாறி விட்டன.

'நீங்களும் உடலழகு பெறலாம் என்ற புத்தகத்தை நான் சொல்லச் சொல்ல, நவராஜ் செல்லையா எழுதிவிட்டார். அவருக்கு எழுதவே தெரியாது' என்பதாக எல்லோரிடம் பேசத் தொடங்கினார்.

நான் இந்த உதவியை செய்ததால்தான், இந்தப் புத்தகத்தின் அட்டைப் படத்தில், என் போட் டோவைப் போட்டார். பார்த்தீர்களா என்று. என் புத்தகத்தையும் காட்டத் தொடங்கினார்.

என்னைக் காணவரும் நண்பர்கள், ப... சி செய்யும்

அன்பர்கள், சைக்கிள் கடைக்கு வருகிற வாடிக்கையாளர்கள், என்னிடம் நேரிடையாகவே கேட்கத் தொடங்கினார்கள்.

அப்பொழுதெல்லாம், எனக்கு ஒரு பாதிரியார் கதைதான் உடனே நினைவுக்கு வரும்.

ஒரு பாதிரியார், அதிகாலைப் பொழுதில் வாக்கிங் போவது வழக்கம். ஒருநாள், காலைக் குளிரில், பாம்பு ஒன்று நடுங்கிக்கொண்டு சுருண்டு கிடந்ததாம். சாவிலிருந்து அதைக் காப்பாற்ற வேண்டும் என்ற கருணையால், அதை எடுத்து, சூடுபண்ணுவதற்காக, அங்கிக்குள்ளே எடுத்து வைத்துக் கொண்டாராம்.

சூடாகிக் கொண்ட பாம்பு, புத்துணர்ச்சியும், புதுத் தெம்பும் பெற்றவுடன், படம் எடுத்துக் கொண்டு, பாதிரியாரின் முகத்துக்கு நேரே வந்து, உன்னைக் கொத்தப்போகிறேன் என்று நின்றதாம்.

இந்தக் கதையை நினைத்துக் கொண்டேன்.

நீங்கள் எழுதவில்லையா இந்தப் புத்தகத்தை என்று கேட்கிறவர்களிடம், பதில் சொல்லவே எனக்கு கூச்சமாக இருந்தது. அவமானத்தால் கூனிப் குறுகிப் போனேன்.

இவ்வளவு உதவிகளையும் என்னிடம் பெற்றுக் கொண்டு, இப்படிப்பேச அவருக்கு எப்படி மனம் வந்தது? எவ்வளவு தைரியம் இருக்கும்? என்று எண்ணிக் கொண்டு, இவரை என்னிடமிருந்து எப்படி வெளியேற்றுவது என்று யோசிக்கத் தொடங்கினேன்.

ராஜ்மோகன் உடலழகுப் பயிற்சிப் பள்ளியின் முதலாவது ஆண்டு விழாவை சிறப்பாக நடத்தி, அவரைப் பத்திரிக்கைகளில் எல்லாம் பிரமாதமாக எழுதி வெளியிட்டதைக் கூட அவர் மறந்து போனாரே! என்ன செய்யலாம் என்று முனைப்பாக யோசிக்கும் போது, விதிதாள்

எனக்கு வந்து கைகொடுத்தது.

ராஜ்மோகன் உடலழகுப் பயிற்சிப் பள்ளியின் 2-வது ஆண்டுவிழாவை நடத்தவேண்டும் என்று, அவர் அதிக முயற்சிகளை மேற்கொண்டார். எனக்குத் தெரியாமலேயே, என் பெயரைச் சொல்லி, வசூல் செய்யவும் தொடங்கினார்.

நன்கொடை கொடுத்த நண்பர்கள் கூறிய கணக்குக்கும், அவர் தந்த கணக்குக்கும் பாதி அளவு தான் இருந்தது தெரிய வந்தது. இங்கே, கள்ளக் கணக்குதான் எனக்கு கை கொடுத்து உதவியது. என்னுடன் இருந்த எல்லா தொடர்புகளிலிருந்தும் அவரை நீக்கினேன். அவரை என் முன்னே வரக்கூடாது என்றும் கூறினேன். சைக்கிள் ஷாப்பை, விற்கவும் முயற்சி செய்தேன்.

ஒருவர் வந்து என்னிடம் சைக்கிள் ஷாப்பை அப்படியே வாங்கிக் கொள்வதாகப் பேரம் பேசினார். பத்து சைக்கிள்களுடன் அந்தக் கடையை விற்றேன். அந்த ஆள் என்னிடம் பேசுகிறபோதே, அவர் அவரின் ஆள் என்றும் புரிந்து கொண்டேன்.

என் பணத்தையே நம்பிக்கைத் துரோகம் செய்து சம்பாதித்து, என் சைக்கிள் ஷாப்பையே பினாமி பெயரில் வாங்குகிறாரே என்று தெரிந்து கொண்டு, கொதிக்கும் கனலாக இருந்தேன். என்ன செய்ய?

சைக்கிள் கடையை வாங்கிவிட்ட மதர்ப்பில், என்னிடம் விடைபெற வந்தார் அவர். அவரை அழைத்து, ''இதோ பார் தம்பி! என் கடைக்கு இப்போது நீ எஜமான் ஆகிவிட்டாய். என்னை ஏமாற்றிய பணத்தால் வாங்கிவிட்டாய். ஒன்று மட்டும் ஞாபகம் வைத்துக்கொள். நம்பிக்கைத் துரோகம் நீண்ட நாள் நிற்காது. கடவுள் உனக்கு நல்ல பாடம் கற்பிப்பார்.

எப்படி நீ ஒன்றுமில்லாமல் சென்னைக்கு வந்தாயோ, அப்படித்தான், நீ ஊருக்குப் போகும்போது, திரும்பிப் போவாய், போ என்று சத்தம் போட்ட பிறகு தான், என் மனம்

சமாதானம் அடைந்தது.

அந்த வார்த்தை பலித்து விட்டதை இப்பொழுதும் நினைத்துப் பார்க்கிறேன். என் கடையில் உள்ள சைக்கிளை விற்று விட்டு, காணாமல் போயிற்று என்று கதை சொல்லி, காசு சேர்த்ததுபோல. அவரும் 'அந்த ஒரு ஆளை' நம்பி கடையை விட்டு விட்டுப் போகும் போதெல்லாம் அதேபோல, காசை கணக்குக் காட்டாமலும், சைக்கிளை விற்று விட்டு சைக்கிள் கடையையே இல்லாமல் செய்துவிட்டார்.

நான் விட்டு விட்டு வந்த கடையின் சொந்தக்கார அம்மாள், கோர்ட்டிலே கேஸ் போட்டு, இருந்த கொஞ்ச நஞ்ச பணத்தையும் செலவு செய்ய வைத்து, ஓட்டாண்டியாக அந்த இடத்தை விட்டுக் காலி செய்து அனுப்பி வைத்தாள் என்று என்னிடம் அவரைப் பற்றிக் கூறினார்கள்.

ஒரு நம்பிக்கைத் துரோகக்கதை முடிந்தது என்ற நம்பிக்கையில், கடவுளுக்கு நன்றி சொல்லிவிட்டு, புத்தகங்களை எழுதியே தீரவேண்டும் என்ற வெறியுடன், எழுத ஆரம்பித்தேன்.

**நீங்களும் உடலழகு பெறலாம்** என்ற புத்தகம், 6 மாதங்களில் விற்றுத் தீர்ந்தது எனக்கு, என் மேலுள்ள நம்பிக்கையை மேலும் புதுப்பித்து, பலப்படுத்தி வைத்தது.

எந்த சிக்கலுக்கும் இனி இடங்கொடுக்காமல், எழுத்துப் பணியையே தொடர வேண்டும் என்று நான் முயற்சித்தாலும், சோதனைகள் என்பவை, இன்னும் என்னைத் தொடர்ந்து கொண்டேயிருந்தன. நான் கொஞ்சம் வசதியாக ஆக இருப்பதை அறிந்து, நாடகம் நடிக்கும் நண்பர்கள், என்னை வந்து மீண்டும் பிடித்துக் கொண்டனர். ஆக, பள்ளி வேலை, காலை மாலை டியூஷன், உடற்பயிற்சி வகுப்பு, இதற்கும் மேலாக நாடக ஒத்திகை என்று நாட்களை ஓட்டிக் கொண்டிருந்தேன்.

என்ன இருந்தாலும், என் எழுத்துப் பணிக்கு இன்னல் ஏற்பட்டு விடாமல் துரத்திக் கொண்டு நின்றது. நான் குற்றம் செய்வது போன்ற உணர்வை ஊட்டி, இலட்சியமானது குத்திக் காட்டிக்கொண்டே இருந்தது. என்ன ஆனாலும் சரி என்று நான் தீவிரமாக எழுத்துப் பணியில் ஆர்வம் காட்டினேன். என்னிடம் ஒரு பழக்கமுண்டு. விந்தையானது தான்.

எந்த காரியத்தை நான் செய்ய மேற்கொண்டாலும், அவற்றில் ஆழ்ந்து போய்விடுவேன். இது எல்லோரும் செய்வது தான். ஆனால், எனக்கிருந்த ஒரு அதிர்ஷ்டம். என் முயற்சிக்குத் துணையாக, நான் போகும் இடங்களிலெல்லாம் உதவி கிடைக்கும். அது என்னை விரட்டி வேலை வாங்கிவிடும்.

அப்படி நேர்கிற நிகழ்ச்சிகள் என் வேலையை தீவிரமடையச் செய்துவிடும். இரவு பகல் பார்க்காமல், வீட்டில் இருக்கும் நேரங்களிலெல்லாம், படிப்பதும் எழுதுவதுமாகவே இருப்பேன். அதாவது வீட்டில் தங்கும் நேரம் இரவு 11 மணியிலிருந்து காலை 5 மணி வரை தான். பகல் நேரத்தில், பணம் சம்பாதிக்க மேற்கொள்ளும் முயற்சிகள்.

ஏறத்தாழ 5 புத்தகங்களை எழுதி தயாரித்து விட்டேன். அச்சாக வேண்டுமே. பணத்திற்கு எங்கே போவது? எதை நம்பி நீங்கள் புத்தகம் எழுதத் தொடங்கினீர்கள். யார் உங்களுக்கு பணம் தருவார்கள்? எந்த எதிர்பார்ப்பில் இப்படி எழுதி வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கின்றீர்கள் என்று என் மனைவி கேட்ட கேள்விகள் ஆயிரம். தினம் தினம் இதே கேள்விகள்தான். அத்தனைக்கும் நான் அளித்த ஒரே பதில்.

கவலைப்படாதே....கடவுள் கொடுப்பார்.

இந்த நம்பிக்கை ஒன்றுதான் என்னை வாழ்வித்தது. வழி நடத்தியது என்றால். வியப்பாக இருக்கிறதல்லவா. அல்ல. இது, உண்மையிலும் உண்மை.

# 17. நம்பிக்கை வீண்போகவில்லை

விளையாட்டுத் துறையில் நூல்கள் எழுத வேண்டும், எழுதியே ஆகவேண்டும் என்ற வேகத்தில் தான், என் எழுத்துப் பணியையே காரைக்குடியில் ஆரம்பித்தேன்.

300 பக்கம் உள்ள ஒரே புத்தகத்தை, எனது முதல் புத்தகத்தை, நான்கு முறை மாற்றி மாற்றி எழுதி எழுதி முடிக்க மூன்று ஆண்டு காலம் எடுத்துக் கொண்டேன். எப்படி புத்தகத்தை வெளியிடுவது என்ற எனது கவலைக்கு, கதவு திறந்து வைத்து, புத்தகத்தை அழகுற அச்சிட்டுத் தந்தனர். அழகு பதிப்பகத்தார். விளையாட்டுக்களின் வரலாறும் வழிமுறைகளும் என்பது தான் எனது முதல் புத்தகம்.

ஆறே மாதத்தில் 1000 காப்பிகள் விற்றுப் போனதால், ஆர்வத்தில் புயலாகிப் போன எனது ஆசைகள், அடுத்த புத்தகத்தை எழுதுகிற ஆவேசத்தைப் பெற்றன.

விளையாட்டுக்களின் வரலாற்றையும், விளையாடும் முறைகளையும் எழுதிய நீங்கள் விளையாட்டுக்களின் விதிகளை தமிழில் எழுதித் தரக் கூடாதா? என்ற விளையாட்டு அன்பர்கள் விடுத்த வேண்டுகோளும் என் வேலையை வேகப்படுத்தின.

புத்தகம் எழுதுவது என்பது எனக்கு எளிதாகப் பட்டதே தவிர, என் கவலை எல்லாம் எப்படி புத்தகமாக ஆக்குவது

என்பது தான். அதற்காக நான் அலைந்ததுதான், என் நேரத்தையெல்லாம் ஆட் கொண்டு விட்டன.

விளையாட்டுக்களின் விதிகள் என்ற எனது இரண்டாவது புத்தகத்திற்குத் தலைப்புத் தந்து, ஆங்கிலத்தில் இருந்த விதிகளை தமிழாக்கம் செய்யத் தொடங்கினேன். ஓராண்டுக்குள் புத்தக வேலை முடிந்தது. பதிப்பாளர் ஆர்வமுள்ளவராக இருந்திட வேண்டும் என்பதில் நான் கண்ணும் கருத்துமாக இருந்தேன்.

அழகப்பா உடற்கல்விக் கல்லூரி பழைய மாணவர் சங்கத்தின் சார்பாக, இந்தப் புத்தகத்தை வெளியிடுவது என்று, அப்போதைய முதல்வராக இருந்த திரு. ராப்சன் அவர்களுடன் பேசி. ஒரு ஒப்பந்தத்திற்கு வந்தேன்.

பல மாதங்கள் கழிந்தன. ஒரு நாள் ஒப்புதல் பெற்று, புத்தகமாக்கும் பணியை நானே சுமந்து கொண்டு, இரண்டாவது புத்தகத்தை வெளிக் கொணர்ந்தேன். பணம் மாணவர் கழகத்திற்கு உரியது. உழைப்பு என்னுடையது, செலவு போக, இருக்கும் நிகரத்தொகையை, இரண்டாகப் பிரித்துக் கொள்வது என்பதுதான் ஒப்பந்தம்.

பல ஆண்டுகள் என் புத்தகத்தை (ராப்சன் இருக்கும் வரை), அழகப்பா உடற்கல்வி மாணவர்களுக்குக் கொடுத்தனர், அவருக்குப் பிறகு முதல்வராக வந்த எனது இனிய நண்பர் திரு ஆதிச்ச பிள்ளை அவர்கள், புத்தகத்தை மாணவர்களுக்குத் தராதவாறு பார்த்துக் கொண்டார். அவர் அன்பு மனத்திற்கு, நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அவர் அப்படி செய்விப்தற்குதான், நான் வேறு வழிகளைப் பார்த்து, என் எழுத்து வேலையைத் தொடரக் கூடிய சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொண்டேன்.

கல்லூரியில் எனது புத்தகம் பாடமாக இடம்

பெற்றபோது, மிகவும் கௌரவம் என்று மகிழ்ந்தேன். அது நிறுத்தப்பட்டபோது, என் மனநிலை எப்படி இருந்திருக்கும் என்பதை இங்கு நான் எழுதவில்லை. உங்களுக்கு புரிந்திருக்கும் என்று நம்புகிறேன்.

மூன்றாவது புத்தகமாக, நீங்களும் உடலழகு பெறலாம் என்ற புத்தகத்தை எழுதினேன். பதிப்பகம் பதிப்பகமாக அலைந்தேன். விளையாட்டுப் புத்தகத்தைப் போட்டால், யார் சார் வாங்குவாங்க போய் காதல் கதை, நாவல்னு எழுதிகிட்டு வாங்க என்று புத்திமதி கூறியாவர்களிடம் நிறைய வாங்கிக் கொண்டு வந்து, நானே புத்தகம் தயாரிப்பது என்ற முடிவுக்கு வந்தேன்.

மனைவியிடம் இருந்த நகைகள் மார்வாடி கடைக்குப் போக, புத்தகமாக எனது 3-வது நூல் வீட்டுக்கு வந்தது.

இந்த வேகத்தில்தான் 5 புத்தகங்களை ஒரே மூச்சில் எழுதிக் கொண்டிருந்தேன். என்னைப் பார்த்துப் பரிதாபப்பட்ட என் மனைவி, ஏதோ பணம் கைவசம் இருப்பது போல, இப்படி கஷ்டப்பட்டு எழுதி, ஏன் நலிந்து போகின்றீர்கள் என்று ஒருவித எரிச்சலும், கோபமும், கிண்டலும், பச்சாதாபமும் கலக்கப் பேசும்பொழுதெல்லாம், கவலைப்படாதே, கடவுள் கொடுப்பார் என்று கூறிவிடுவேன்.

மிருகச்சாலையில் உள்ள மிருகத்தை வேடிக்கை பார்ப்பதுபோல, என் மனைவி பார்த்துவிட்டுப் போய்விடுவாள்.

என் நம்பிக்கையில் அவளுக்கு நம்பிக்கை இல்லை. கடவுள் கொடுப்பார் என்றால் எப்படி கொடுப்பார் என்பதுதான் அவளின் வினா! சந்தேகம்! .... குழப்பம்.... தடுமாற்றம் எல்லாம்.

எனது நம்பிக்கையோ, மலையளவு இருந்தது. தினம்

தினம் அந்த நம்பிக்கை வளர்ந்ததே தவிர, தினையளவும் குறையவில்லை.

கடவுள் என்ன, நேரில் வந்து தரிசனமா தந்துவிடப் போகிறார்? மனிதர்கள் என்பவர்கள், கடவுளின் சாயல் என்று நம்புபவன் நான். தன்னையொத்த நல்ல மனிதர்களை என்னிடம் அனுப்பி, எனக்கு உதவுவார் என்பதுதான் என் நம்பிக்கை.

அப்படி யாராவது வந்தால் பார்த்துக் கொள்ளலாம் என்று நான் நேரத்தையும் காலத்தையும் வீணாக்கவில்லை. நிச்சயம் வருவார்கள் என்ற நம்பிக்கையுடன்தான் எழுதிக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள் நான் வீட்டிற்கு மிகவும் களைத்துப்போய் வந்தபோது, என் மனைவி என்னை மிகவும் மகிழ்ச்சியுடன், முகமலர்ச்சியுடன் வரவேற்றாள்.

ஏதோ எதிர்பாராதவிதமான ஒரு நல்ல காரியம் நடந்திருக்கிறது என்ற நினைவுடன் அமர்ந்தபோது, என்னிடம் வந்து 5000 ரூபாய் கட்டு ஒன்றைத் தந்து, என் முகத்திலே ஏற்படுகிற மாற்றங்களை கூர்ந்து பார்த்தாள்.

புத்தகம் போடவேண்டும் என்றீர்களாம். உங்கள் மாணவர் ஒருவர் வந்து, இந்தப் பணத்தைக் கொடுத்துவிட்டுப் போனார். நீங்கள் வந்ததும் சொல்லுங்கள், அவசரமாகப் போக வேண்டும் என்று சொல்லி விட்டுப் போனார் என்றாள்.

இப்படி ஒரு திருப்பமா என் வாழ்வில்? என்று நெகிழ்ந்து போனேன். கடவுள் என்னைக் கைவிடவில்லை என்று சத்தம் போட்டுக் கூவினேன். ராமானுஜத்தின் முகம் என் நினைவுக்கு வந்தது. தொடர்ந்து நாங்கள் பேசிக் கொண்டிருந்த உரையாடல்களும் என் நினைவுக்குள் ரீங்காரமாய் ஒலிர்ந்தன.

டெல்லியில் நடைபெற்ற அகில பாரத வித்யார்த்தி பரிஷத் என்ற மாணவ அமைப்பின் அகில இந்திய மாநாட்டிற்கு, தமிழ் நாட்டின் சார்பாக, பத்து உறுப்பினர்களுடன் நானும் போய் கலந்து கொள்வதாக இருந்தேன். டெல்லி போகும் செய்தியை உடற்பயிற்சியின்போது, பலரிடம் பேசிக் கொண்டு இருந்தேன். மிகவும் அமைதியாக வந்து பயிற்சி செய்துவிட்டு அமைதியாகப் போகும் அந்த மாணவர் **ராமானுஜமும்** நான் பேசுவதைக் கேட்டுவிட்டு, என்னிடம் ஒரு நாள் வந்தார்.

நானும் உங்களுடன் டெல்லிக்கு வருகிறேன். அழைத்துப் போகிறீர்களா என்று கேட்டார். நானும் சரி என்றேன்.

ஒரு வாரம் மாநாட்டில் கலந்து கொண்டுவிட்டு, சென்னைக்குத் திரும்பியபோது ரயிலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது அவர், தனது குடும்பநிலை, அவரது ஆவல் போன்றவைகளையெல்லாம் விவரமாகச் சொன்னார். சொல்லிய பிறகு அவர் கேட்ட கேள்வி என்னை வியக்க வைத்தது.

நீங்கள் இரவு பகலாக எழுதுகிறீர்கள், அலைகிறீர்கள், இருந்தாலும், உங்கள் பொருளாதார நிலைமை அவ்வளவு திருப்திகரமாக இல்லையே. ஏன்? என்று என்னிடம் கூறலாமா என்றார்.

நான் உழைக்கிறேன். இன்னும் கடுமையாக உழைக்கவும் தயாராக இருக்கிறேன். உழைப்புக்கு உடல் பலம் மட்டும் போதாது. பண பலமும் பக்கபலமாக இருந்தால்தானே சாதிக்க முடியும். பணம் பற்றாக்குறை, பிறரிடம் போய் கடன் கேட்க மறுக்கும் என் தன்மானம், என்ன செய்வது? காலம் ஒரு நாள் மாறும். என் லட்சியம் யாவும் நிறைவேறும் என்று என் கவிதையை பாடிக் காட்டினேன்.

மிகவும் சீரியஸாகிவிட்டார் அவர். ஏன் அவரிடம் இப்படி

பேசினேன் என்றாகிவிட்டது எனக்கு. நீண்ட நேரம் கழித்துஅவர் பேசத் தொடங்கினார்.

எவ்வளவு பணம் இருந்தால், உங்களுக்கு உதவியாக இருக்கும் என்றார். - தன் மனதிற்குள் பல கணக்குகளைப் போட்டபடி.

5 புத்தகங்களை எழுதி முடித்திருக்கிறேன். அந்த புத்தகங்களைப் பதிப்பிக்க, குறைந்தது 5000 ரூபாயாவது தேவைப்படும் என்றேன்.

அந்த புத்தகங்களின் பெயர்களைக் கூறமுடியுமா என்றார்.

1. நீங்களும் ஒலிம்பிக் வீரராகலாம்.

2. விளையாட்டுக்களின் கதைகள்.

3. விளையாட்டு விழா நடத்துவது எப்படி?

4. எதற்காக உடற்பயிற்சி செய்கிறோம்?

5. பெண்களும் பேரழகு பெறலாம்.

ஆகா! நல்ல அருமையான தலைப்புகள். மக்களுக்கு பயன்படக் கூடிய மணியான நூல்கள் என்று ராமானுஜம் பாராட்டினார்.

அத்துடன் அந்தப் பேச்சு முடிந்துவிட்டது. பணத்தைப் பற்றியோ, புத்தகத்தைப் பற்றியோ அவர் பேசவும் இல்லை. நான் தொடரவும் இல்லை.

எத்தனையோ பேர்களிடம் புத்தகம் பற்றி பேசியிருக்கிறேன். கேட்டவர்கள் எல்லாம், தந்து விடவா போகிறார்கள். மற்றவர்களைப் போலத்தான் நான் ராமானுஜத்தையும் நினைத்தேன்.

டெல்லிக்குப் போய் திரும்பி வந்து இன்று இரண்டு வாரங்கள் ஆயின. நானும் அந்தப் பேச்சுக்களை மறந்து

போனேன். ஆனால் ராமானுஜம் மறக்காமல் ரூ.5000- த்தைக் கொண்டு வந்திருக்கிறார். நான் இல்லை என்று தெரிந்தும், என் மனைவியிடம் கொடுத்துவிட்டுப் போய் விட்டார்.

முயற்சி மிகுந்தவர்களுக்கு கடவுள் வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு, உதவி செய்ய வந்துவிடுவார் என்று இலக்கியங்கள் நிறையவே பேசும்.

நானும் அப்படித்தான் நம்பினேன். நிறையவே நம்பு கிறேன். இன்னும் நம்புவேன்.

விளையாட்டுத் துறையில் நான் இத்தனை நூல்களும் எப்படி எழுதி முடித்தேன் என்றால் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களையும் அற்புதங்களையும் ஆண்டவன் எனக்கு அநேக முறை செய்து உதவியதால்தான். இந்த அதிசயங்களை இப்பொழுது நினைத்தாலும் என் உடல் சிலிர்த்துக் கொள்கிறது. மனமோ இனம் புரியாத ஒரு இதத்திற்குள் அலை பாய்ந்து கொள்கிறது.

# 18. நம்பியும் நம்பிக்கையும்

நீங்களும் உடலழகு பெறலாம் என்ற எனது மூன்றாவது புத்தகத்தை எழுதி, அதனைத் தயாரித்து வெளியிடும் பொறுப்பை நானே ஏற்றுக் கொண்டேன்.

சாதாரண சிறிய அச்சகத்திற்குப் போனால், செலவு குறையும். ஆரம்ப நிலை ஓவியரிடம் போனால், சம்பளம் குறையும். இப்படி நினைத்துக் கொண்டு, புதிய அச்சகம் பக்கம் போனேன்.

நாட்கள் நிறைய ஆகின. போய்வர செலவு, அச்சில் குறைகள். இப்படி செலவுகள் அதிகமாகி, ஒரு நல்ல புத்தகமாக அமைய வேண்டிய நூல் அரை குறையாகத் தெரிந்த முடிவெட்டுவோனிடம் சிக்கிய தலைபோல, வந்து சேர்ந்தது.

அப்பொழுதே முடிவெடுத்துக் கொண்டேன்.

ஒரு செயல் செழிப்பான முறையில் வெற்றி பெற வேண்டும் என்றால், நன்கு தெரிந்த, அனுபவம் உள்ளவர்களிடம் தான் போக வேண்டும் என்ற உண்மையைப் புரிந்து கொண்டேன்.

பல குறைகளுடன், பார்ப்பதற்கு மனக்கஷ்டம் தரக்கூடிய வகையில், புத்தகம் வெளிவந்தவுடன், என்னையே நான் திட்டிக் கொண்டேன்.

புத்தகம் எழுதத் தெரிந்தால் மட்டும் போதாது, அதனைச் சேர்ந்த எல்லா விஷயங்களையும் கற்றுக் கொள்ள வேண்டும் என்பது தான் முக்கியமான விஷயம்.

புலியிடம் தப்பி, சிங்கத்திடம் சிக்கியவன் கதை போல, எனது முயற்சி, இன்னொரு ஆளிடம் போய் சிக்கிக் கொண்டது.

புத்தக விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தபோது, புத்தகக் கண்காட்சி ஒன்றில், ஒரு மனிதரை சந்திக்க நேர்ந்தது. ஒரு புகழ் பெற்ற புத்தகக் கம்பெனியின் மேனேஜர் அவர்.

எனது புத்தகத்தைக் காட்டினேன். நல்ல புத்தகம். ஆனால் உங்களுக்குத் தயாரிக்கத் தெரியவில்லை. நான் உதவுகிறேன் என்றார்.

ஆகா, என்னே ஆண்டவரின் அருள், எதிர் பார்த்துப் போன உதவி, இப்படி எளிதாகக் கிடைத்ததே என்று மகிழ்ந்து போனேன்.

நானோ நம்பிக்கையின் மீது மாளாத காதல் கொண்டவன். உதவ வந்தவர் பெயரோ நம்பி! என்ன பொருத்தம்? புத்தகம் எப்படி தயாரிக்க வேண்டும் என்பது பற்றி, நிறைய எனக்கு யோசனைகள் தந்தார். பல புத்தகங்களைக் காட்டினார். தெளிவுபடுத்தினார். என்னைத் தெளியவும் வைத்தார்.

முதலில் அட்டைப் படம் பற்றிய அக்கறை வேண்டும். அட்டைப்படம் சிறப்பாக அமைந்து விட்டால், அதுவே புத்தக விற்பனைக்கு பெரிய சாதகமாக ஆகிவிடும் என்றார். நீங்களே எனக்கு உதவுங்கள் என்று கேட்டுக் கொண்டேன்.

ஒரு ஆர்டிஸ் ட்டிடம் அழைத்துப் போகிறேன் என்று ஒரு தேதியைக் கூறினார். அன்று மாம்பலம் பஸ் ஸ்டாண்டில் சந்தித்தோம்.

ஆர்டிஸ்ட் ஆபிஸ் ஜாம்பஜாரில் இருந்தது. 20 பைசாதான் பஸ் டிக்கெட்.

நான் பஸ்ஸில் போகும் பழக்கமில்லை. ஆட்டோவில் போவேன் அல்லது டாக்சியில் தான் போவேன். ஆட்டோவில் போகலாம் என்றார். சரி என்றேன்.

அவரது அந்தஸ்தையும், ஆடம்பர வாழ்வையும் கண்டு அயர்ந்து போனேன். அவரது நெடிதுயர்ந்த தோற்றமும், கம்பீரமான பேச்சும் அப்படித்தான் என்னை நம்ப வைத்தது.

ஆட்டோவில் போனோம். அங்கு போய் டிபன் சாப்பிட்டோம். ஆர்டிஸ்ட் ஆபீஸ் வந்ததும், என்னை வெளியே நிற்க வைத்தார். ஏனென்று கேட்டேன்.

புதிய பதிப்பகத்து ஆட்கள் வந்தால், அந்த ஆர்டிஸ்ட் படம் போட்டுத் தர மாட்டார். நான் எனக் கென்று கேட்டு, படம் போட ஏற்பாடு செய்கிறேன் என்றார்.

நானும் ஏமாந்து போனேன். உண்மை என்று நம்பி. கொஞ்ச நேரம் கழித்து வெளியே வந்தார். ஒரு படம் வரைய 50 ரூபாய் ஆகும் என்றார். நானும் எடுத்துக் கொடுத்தேன். வாங்கிக் கொண்டு உள்ளே போனார் சிறிது நேரம் கழித்து வந்தார்.

இன்னும் இரண்டு நாளில் கிடைத்துவிடும். நானே வாங்கி வந்து விடுகிறேன். நீங்கள் ஏன்அலைய வேண்டும் என்றார். அவரது நல்ல மனதுக்கு, நல்ல பேச்சுக்காக, நன்றி தெரிவித்தேன்.

கடைசி வரை, அந்த ஆர்டிஸ்டை காட்டாமலே, கெட்டிக்காரத்தனமாகஎன்னை வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்து விட்டார். அட்டைப் பட ஓவியம் வந்தது. அந்த புத்தகம், புத்தக உலகில் நல்ல பாராட்டைப் பெற்றது. புத்தகம் தயாரிக்கின்ற முழு பொறுப்பையும் அவர் பெற்றிருந்தார்.

பணம் என்னுடையது. வழிகாட்டுதல் அவருடையது, கொஞ்சம் செலவு அதிகம். அவ்வளவுதான்.

இந்த நிகழ்ச்சி நடந்து மூன்று ஆண்டுகள் கழித்து, நான் 5 புத்தகங்களுக்கு அட்டைப் பட ஓவியம் தயாரிக்க, அந்த ஆர்டிஸ்ட் அலுவலகம் நோக்கிப் போனேன்.

அவர் மட்டும்தான் இருந்தார். என்னை அன்புடன் வரவேற்றார். 'நீங்களும் உடலழகு பெறலாம்' என்ற புத்தகத்தின் ஆசிரியர் என்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

'உங்களை எனக்கு 5 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தெரியும் என்னைத்தான் உங்களுக்குத் தெரியாது' என்றார் அந்த ஓவியர்.

ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனேன். எப்படி என்றேன்! திகைப்புடன்.

காரைக்குடியிலிருந்து வெளிவந்த உங்கள் இரண்டு புத்தகத்திற்கு அட்டைப்படம் வரைந்ததே நான்தான். உங்களைப் பார்த்தது இல்லையே தவிர, உங்கள் பெயர் எனக்கு நன்கு அறிமுகமானதுதான் என்றார். மேலும் எனக்கு ஆச்சரியம்.

பிறகு, ஏன் நீங்கள் புதிய பதிப்பாளர்களைப் பார்ப்பதில்லை. படம் வரைந்து தருவதில்லை என்று கேட்டேன்.

உங்கள் கேள்வி எனக்குப் புரியவில்லை என்றார்.

என் மூன்றாவது புத்தகத்துக்கு படம் கேட்க வந்தபோது, என்னை வெளியே நிற்க வைத்துவிட்டு உங்களிடம் நம்பி என்பவர் வந்தாரே, அவர்தான் சொன்னார் என்றேன்.

பதிப்பாளர்கள் நிறைய பேர் என்னிடம் வர வேண்டும் என்று தானே நான் காத்திருக்கிறேன். உங்களைப் போன்றவர்கள் என்னிடம் வந்தால் தானே எனக்கு வாழ்க்கை,

நான் ஏன் புதுசு-பழசு என்று பதிப்பாளர்களைப் பிரிக்கப் போகிறேன் என்றார்.

இதில் என்னவோ குழப்பம் என்று நாங்கள் யோசித்தோம். இரண்டு பேருக்குமே புரியவில்லை. ஏன் அப்படிக் கூறினார்? என்னை வெளியே நிற்க வைத்தார் அவர்.

இதை மறந்துவிட்டு, இருவரும் அறிமுகம் செய்து கொண்டோம். என் வாழ்க்கை லட்சியத்தை அவரிடம் கூறினேன். நூறு புத்தகங்கள் எழுதி விட்டுத்தான் மறுவேலை என்றேன். உங்கள் லட்சத்தியத்திற்கு நான் உதவுகிறேன் என்று வாக்குறுதி தந்துவிட்டு, புத்தக வியாபாரத்தில் இருக்கும் சில நெளிவு சுளிவுகளைப் பற்றியும் கூறினார்.

நான் கொண்டு போயிருக்கும் 5 புத்தகங் களுக்கான முகப்பு அட்டை எப்படியிருக்க வேண்டும் என்று விளக்கினேன். அவரும் புரிந்து கொண்டு, ஒரு வாரத்தில் தந்து விடுகிறேன் என்றார்.

ஒரு முகப்பு அட்டைப் படத்துக்கு எவ்வளவு என்றேன். 15 ரூபாய். பெரிய படமாக இருந்தால் 20 ரூபாய் என்றார்.

இப்பொழுது குழப்பம் தீர்ந்தது என்றேன்.

உங்களிடம் 15 ரூபாயைத் தந்துவிட்டு, உங்களையும் என்னையும் சந்திக்க விடாமல், சமர்த்தாக நாடகம் ஆடியிருக்கிறார். அப்படியா! அவருக்கு ஒரே ஆச்சரியம்.

ஏமாற்றியவரின் சாமர்த்தியத்தைப் பற்றி அல்ல. ஏமாந்து போன என் நம்பிக்கையைப் பற்றி.

உங்களுக்கு இப்படி ஒரு நம்பிக்கையா என்றார். ஆட்களைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று அறிவுரை தந்தார்.

எத்தனை நாட்கள் இந்த உலகில் இருக்கப் போகிறோம் என்று தெரியாமலேயே, நம்பிக்கையோடு நாம் வாழவில்லையா! நல்லது செய்பவர்கள் என்று நம்பித்தான், ஒருவரின் உதவியை நாடுகிறோம். செய்ததற்குக் கூலி வாங்கிக் கொண்டார் என்றேன்.

நம்பி நல்லவர்தான். அவரது ஆடம்பர செலவுக்கு, என்னைப் போல ஆட்களும் ஏமாந்த பணமும் தேவைப் படுகிறது என்றேன். அவர் சிரித்துக் கொண்டார். வேறு வழி!

இனிமேல் ஆள் மூலமாக, ஆள் அனுப்பி எந்தக் காரியத்துக்கும் முயற்சிக்கக் கூடாது. நேரே போய் நாடுவது தான் முறையான செயல் என்று ஓர் உறுதி எடுத்துக் கொண்டு, அவரிடம் விடை பெற்றுக் கொண்டு வந்தேன்.

அட்டைப் படத்திற்கு மட்டுமா அவர் அனுபவம் தந்தார்? பாடம் கற்பித்தார்? பலமுறை, பல வழிகளில் பயன்படுத்திக் கொண்டு என்னை பாடாய் படுத்தி விட்டார். என்னை ஏமாற்றி அவர் பணம் பெற்றுக் கொண்டதெல்லாம், எனக்கு நஷ்டம் ஏற்படாமல், கஷ்டம் மட்டும் கொடுத்ததால் தான், நான் அதிகம் கவலைப் படவில்லை.

அவர் செய்த உதவிக்காக, என்னிடம் அவர் ஒரு உதவி கேட்டார். அவர் ஒரு கதை வைத்திருந்தார். இதை நாடகமாக்கி, அரங்கேற்ற வேண்டும் என்பது அவர் ஆசை.

அவர் ஆசையை நிறைவேற்றித் தருவதாக வந்து, பல நூறு ரூபாய்களை சாப்பிட்டுவிட்டுப் போனவர்களைப் பற்றி, அவர் ஒரு சரித்திரமே கூறினார். நானும் பரிதாபப்பட்டு உதவிக்கு வந்தேன்.

கதையை அவருடைய பெயரில் போட்டு, வசனம், பாடல்கள், டைரக்ஷன், தயாரிப்பு என்று நான்

பொறுப்புக்களை எடுத்துக் கொண்டு, வசனம் எழுதி, ஒத்திகை பார்த்து, நடிகர்களும் நடிகைகளும் அரங்கேற்றம் செய்யத் தயாராக இருக்கும் போது, அவர் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார்.

கதை, வசனம், டைரக்ஷன், தயாரிப்பு என்று என் பெயர் இருந்தால்தான், நான் நாடகத்தை அரங்கேற்ற விடுவேன். இல்லையென்றால், நிறுத்தி விடுகின்ற எல்லா வேலைகளையும் செய்வேன் என்றார்.

நாடக அரங்கிற்குப் பணம் கட்டியாகிவிட்டது. எல்லோரிடமும் டிக்கெட் விற்றாகி விட்டது, எப்படி நாடகத்தை நிறுத்துவது? எல்லா செயல்களையும் செய்து, இரவு பகலாக சிரமப்பட்டு, கடைசியில் அவரே எல்லாமுமாக இருக்கட்டும் என்று விட்டுக் கொடுத்து விட்டு, நாடகத்தை அரங்கேற்றி வைத்தேன்.

இதில் எனக்கு என்ன லாபம் என்றால், பல அவமானங்கள், பல சோதனைகள், போலீஸ் ஸ்டேஷனில் போய் உட்கார்ந்து, கோர்ட்டுக்குப் போய் நிற்க, என்பன போன்ற நிகழ்ச்சிகள் ஏற்பட, இந்த நாடகம் தான் என்னை நடிக்க வைத்துவிட்டது.

உதவிகள் செய்யப்போய், போதுமடா சாமி என்று கும்பிடு போட்டு விட்டு, நம்பியிடம் இருந்து கழன்று கொண்டேன். வியாபார ஆரம்பத்திலேயே இப்படி சோதனைகளா என்பதில் எனக்கு ஏற்பட்ட கஷ்டங்களைப் பற்றி கவலைப்படவில்லை.

நாடகத்தின் மூலமாக எனக்கு ஏற்பட்ட சோதனைகள் வேதனைகள் இருக்கிறதே? அவற்றை சொல்லி மாளாது. சொன்னாலும் தீராது ஆறாது.

# 19. நாடகத்தின் உச்சக்கட்டம்

புத்தகங்களை விற்பதற்குத் தெரிந்தால்தான், புத்தகங்களை பதிப்பிக்க முடியும். புத்தகங்களைப் பதிப்பிக்க, கையிலே பணம் இருந்தால்தான், புத்தகங்கள் எழுத முடியும்.

புத்தகம் எழுதுகிற புத்திசாலித்தனத்தைவிட, பத்து பேர்களிடம் அணுகவும், அவர்களை அனுசரித்துப் போகவும், வேண்டிய உதவிகளைச் செய்து, நல்ல பெயர் வாங்கிக் கொள்ளுகிற **'ஒரு மாதிரி'** குணாதிசயம் கட்டாயமாகத் தேவைப்பட்டது. இது தான் எனக்கு முதலில் தேவைப்பட்ட தகுதியும் திறமையும்.

இந்தக் கட்டாயத்தால்தான், புத்தகங்கள் எழுதி வெளியிட முனைந்தபோது, நம்பியின் நட்பு கிடைத்தது.

நம்பியை சந்தோஷப்படுத்த வேண்டும் என்பதற்காக, நம்பி, எழுதிய, ஒன்றுக்கும் உதவாத கதை ஒன்றை, நாடகமாக எழுதி, **'காத்திருந்த கரங்கள்'** என்ற பெயரில் அரங்கேற்றித் தந்தேன். அதற்குள் ஆயிரமாயிரம் குழப்பம், பணத்தகராறு.

எப்படியோ! நன்றிக் கடன் என்று நாடகத்தை வெற்றிகரமாக முடித்துத் தந்தேன். நாடகம் நடந்தபோது, கிளைமாக்ஸ் என்பார்களே, அது நாடகத்தில் நடக்காமல், என் வாழ்க்கையிலே வந்து நடந்ததுதான், விதி நடத்திய 'நம்பர் ஒன்'

நாடகமாக இருந்தது.

அந்த நாடகத்திலே நகைச்சுவை நடிகராக ஒருவரை நான் அறிமுகம் செய்தேன். உடற் கல்வித் துறை அலுவலகத்தில் ஒரு குமாஸ்தாவாக பணி யாற்றியவர். நான் அங்கு அடிக்கடி போய் வர நேர்ந்தபோது. தன்னை யார் என்று அறிமுகப் படுத்திக் கொண்டார்.

நாடகத்தில் ஒரு வாய்ப்பு தந்தால், நன்றி உடையவனாக இருப்பேன் என்று, தாழ்ந்து பணிந்து கேட்டுக்கொண்டார்.

சரி உதவலாம் என்றுதான் நாடகத்தில் காமெடி வேஷம் கொடுத்தேன். அவரோ என் வாழ்க்கையில் வில்லன் வேஷம் போட்டு, விளையாடி விட்டார்.

அந்தக் காமெடி நடிகர், நாடகம், நடந்த ஒரு வாரம் கழித்து, என்னைப் பார்க்க, என் வீட்டுக்கு வந்திருந்தார். அவர் முகத்திலே கலவரம். பேச்சிலே குழப்பம். கை கால்களில் நடுக்கம். முகத்திலே சவக்களை தெறித்தோடியது.

என்ன விஷயம் என்று கேட்டேன்.

'என் மனைவிக்கும் நான் வசிக்கும் தெருவி லுள்ள பெண்களுக்கும் பல நாட்களாகத் தகராறு. இன்று அது உச்சக் கட்டத்திற்கு வந்து விட்டது. இன்னும் இரண்டு நாட்களுக்குள் வீட்டை காலி செய்துவிட்டு வராவிட்டால், எங்கள் உயிருக்கே ஆபத்து வந்துவிடும் உடனே எந்த வீடும் எனக்குக் கிடைக்கவில்லை. உங்கள் வீட்டில் ஒரு பகுதியில் தங்கியிருக்க அனுமதி கொடுங்கள். இரண்டொரு நாளில், வேறு வீடு பார்த்துக் கொண்டுபோய், விடுவேன். உங்களை நம்பியே வந்துவிட்டேன்'' என்று புலம்பினார் அந்த நடிகர்.

இயற்கையாக இருக்கும் என்று எப்போதும் ஏற்படுகிற என் அனுதாபம்' அந்த வேண்டுகோளைக் கேட்டு பீறிட்டு

விட்டது. என்ன செய்கிறேன் என்று தெரியாமல், என்னிடம் இருந்த பரிதாபம், சரி என்று சொல்லி விட்டது.

அந்த சரி என்ற ஒரு சொல்தான் என்னைப் படாதபாடுபடுத்தி, புரட்டி எடுத்துவிட்டது.

இரண்டு நாளைக்குத் தங்கிவிட்டு, வேறு வீடு பார்த்துக் கொண்டு போகிறேன் என்று வந்து தங்கிக் கொண்ட அந்த மனிதர், வேறு வீடு எதுவும் கிடைக்கவில்லை என்று சாக்குபோக்கு சொல்ல ஆரம்பித்து விட்டார்.

இதுபோல வசதியான வீடு எங்கே கிடைக்கப் போகிறது என்று, தன்னைப் பார்க்க வருபவர்களிடம் பேசி பெருமை கொள்ளவும் தொடங்கிவிட்டார்.

பாவப்பட்டு, என் சமையல் அறையை ஒதுக்கிக் கொடுத்துவிட்டு, குழம்பிய மனதுடன் கஷ்டப்பட்ட எங்களுக்கு கொஞ்சம் கொஞ்சமாகப் அவர்களைப் பற்றி புரிய ஆரம்பித்தது.

அந்த ஆள் ஒல்லியாக இருந்தார். அந்தப் பெண்ணோ அவருக்கு எதிர்மாறாக, குண்டாக, கனதாராவாக இருந்தாள். அந்தப் பெண் ஒரு சத்தம் போட்டால், சர்வ நாடியும் அடங்கி அவர் அமைதியாகி விடுவார்.

இந்தத் தொந்தரவு தாங்காமல் தானோ என்னவோ, அவர் காலையில் ஆபீஸ் போய் விட்டால், இரவு 10 மணிக்கு மேல் தான் வருவார். வந்ததும் சாப்பாடு, தூக்கம், இப்படிஅவர் வாழ்க்கை கழிந்து கொண்டிருந்தது.

எனக்குள்ள பிரச்சினை நான் ஒரு எழுத்தாளன். அமைதி எனக்கு வேண்டும், எழுத, யோசிக்க, ஆனால் அந்தப் பெண்ணோ நாள் முழுவதும் ரேடியோ கேட்பது. ஆசை வந்துவிட்டால் சத்தம் போட்டு பாடுவது.

கொஞ்சங் கொஞ்சமாக அந்தப் பெண்ணின் பேய்க் குணங்கள் வெளிப்பட்டன. வீட்டைக் காலி செய்யச் சொல்லிப் பார்த்தேன். நகர்வதா க இல்லை.

என்னையே அந்த வீட்டை விட்டு விரட்டுவதற்கு கணவன் மனைவி இருவரும் திட்டம் போட்டார்கள். சந்தர்ப்பத்திற்காக காத்திருந்தார்கள். அது எனக்குத் தெரியாமல் போயிற்று.

இதற்கிடையில் 6 மாதங்கள் ஓடிவிட்டன. சகித்துக் கொண்டேன். வேறுவழில்லாமல் 6 மாதம் வீட்டுக்கு வாடகையும் தரவில்லை, கரண்ட் பில்லும் கொடுக்கவில்லை.

முதல் வேளையாக. கரண்ட் கனெக்ஷனை துண்டித்து விட்டேன். அந்தப் பெண் பத்ரகாளி ஆகிவிட்டாள். சேரி வசனங்கள் அவள் வாயிலே சிம்மக் குரலாகத் தெறித்தன.

அப்போது இரவு 7 மணி. என் வீட்டுவாசலிலே. 20 பேர்களுக்கு மேல், உடற்பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கே சகிக்காமல், என்ன சார் இது? இந்தப் பொம்பளை இப்படி பேசுறாங்களே என்று காதுகளை பொத்திக் கொண்டனர்.

ஏன் இப்படி கத்துகிறாய் என்று கேட்கப் போன என்னை நெஞ்சில் கையை வைத்து, நெட்டித் தள்ளினாள் மறுமுறை என்னைத் தள்ள வந்தபோது. தடுத்து நான் தள்ளியதும், உடனே மல்லாந்து விழுந்து கொண்டு, புலம்ப ஆரம்பித்தாள்.

ஐயோ! என்னைக் கற்பழித்து, விட்டானே என்று கதறல். அதற்குள் போட்ட சத்தத்தைக் கேட்டு, அக்கம் பக்கத்திலுள்ள குடிசைவாசிகளில் பல பெண்கள் ஓடி வந்தனர்.

என்னைக் கற்பழித்து விட்டான். நான் முடியாது என்று முரண்டு பண்ணினேன். என் ஜாக்கெட்டைக் கிழித்து விட்டான். என் பிள்ளை என்காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

அவனைக் தூக்கி வெளியே எறிந்து கொல்லப் பார்த்தான். நானும் கத்தவே, என்மீது கிருஷ்ணாயிலை ஊத்திக் கொளுத்தப் பார்த்தான். நல்ல வேளை, நான் கதவை சாத்திக்கொண்டேன்.

என்று அவள் புலம்பியதைக் கேட்ட, மற்ற பெண்கள், இப்படியும் செய்யலாமா என்று என்னைத் திட்ட ஆரம்பித்து விட்டார்கள்.

என் சைக்கிள் கடையில் பார்ட்னராக இருந்த பழைய ஆள், அந்த மனிதனுக்கு நெருங்கிய நண்பனாகி விட்டிருந்தான். அவனும் இந்த நாடகத்தில் முக்கிய பங்கு வகித்தான். என்னிடம் சம்பாதித்த காசு கொஞ்சம் இருந்ததல்லவா!

உடனே போலீஸ் ஸ்டேஷனுக்கு போனார்கள். அவர்கள் கொடுத்த ரிப்போர்ட்டானது, எனக்கு 7 ஆண்டுகள் ஜெயில் தண்டனை கிடைப்பதற்கேற்ப ஜோடிக்கப்பட்டு இருந்தது.

முன்கூட்டியே போட்ட திட்டப்படி, இவை நடந்தன. அக்கம் பக்கத்து பெண்களிடம், கடந்த மூன்று மாதமாகப் போய், என்னைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமாக, சொல்லி வைத்த சூழ்ச்சியும் எனக்கு அப்போதுதான் தெரிந்தது.

மறுநாள் காலை அசோக் நகர் போலீஸ் ஸ்டேஷனுக்கு நானே போனேன். எஸ்.ஐ. இடம் விவரமாகக் கூறினேன். அதற்குள் அமைச்சரின் வீட்டிலிருந்து போன் வந்ததாகவும், என்னை லாக்கப்பில் வைக்க வேண்டும் என்பதாகவும் எஸ்.ஐ சொன்னார். அன்று முழுவதும் நான் ஸ்டேஷனில் இருக்க வைக்கப்பட்டேன்.

மேலிடத்து உத்தரவு என்று போலீஸ் என்னிடம் கூறியது. அதற்குள் சைக்கிள் கடையிலிருந்த சேது என்பவன் வந்து, ஒரு போலீஸ்காரனிடம் பணம் கொடுத்து, அந்த ஆளை அடித்துப் புரட்டி விடுங்கள் என்று சொல்லிவிட்டுப் போனதை அந்தப் போலீஸ்காரர் என்னிடம் வந்து கூறினார்.

அதற்குள் நான் அவர்களை சரிகட்டி விட்டு, வீட்டுக்கு வந்துவிட்டேன். ஏனென்றால், அடுத்த நாள் காலை 10 மணிக்கு டி.வி.எஸ் கம்பெனியில், ஸ்போர்ட்ஸ் ஆபிசர் பதவிக்கான இன்டர்வியூ இருந்தது.

இந்த இன்டர்வியூவுக்கு என்னைப் போக விடாமல் தடுப்பதும், என்னைக் கிரிமினல் குற்றவாளியாக்கி விட்டால், அந்த வேலை கிடைக்காது என்றும் அவர்கள் செய்த சதி, என்று பிறகுதான் எனக்குத் தெரிய வந்தது.

அதற்குள் அந்தத் தம்பதியினர் 5000 ரூபாய் வரை செலவு செய்து விட்டார்கள். எப்படியும் 7 ஆண்டுகள் சிறைக்குள் தள்ளிவிட வேண்டும் என்பது தான் திட்டம். கற்பழிப்பு முயற்சி, குழந்தையை கொல்லுதல், வீடு புகுந்து கொள்ளையடித்தல். இப்படி பல குற்றப் பிரிவுகள்.

கடைசியாக 75 கேஸ் என்பார்களே, அந்தக் கேஸ் போட்டு, சைதாப்பேட்டை கோர்ட்டில், இது முதல் முறை என்பதால், மன்னித்து விடுகிறோம் என்று நீதிபதி தீர்ப்பளித்து, கேஸை முடித்தார்.

இப்படி வாழ்க்கையில், போலீஸ், கேஸ், கோர்ட் என்ற புது அனுபவத்தைக் கொடுத்த காமெடி வில்லனின் கண்பார்வையிலிருந்து போய்விட வேண்டும் என்று முடிவு செய்தேன்.

எனக்கு டி.வி.எஸ்ம்பெனியில் ஸ்போர்ட்ஸ் ஆபிசர் பதவி கிடைத்ததும், அந்த வீட்டைக் காலி செய்துவிட வேண்டும் என்று முடிவு செய்தேன். காலியும் செய்து புறப்பட்டேன்.

ஒண்ட வந்த பிடாரி, ஊரையே விரட்டியது என்பது பழமொழி, என் வாழ்வில் உண்மை சம்பவமாயிற்று.

என்னை பயமுறுத்தவும், அடித்து சாய்க்கவும், அவர்கள்

ஏற்பாடு செய்திருந்த பேட்டை ரவுடி களுக்கு. அந்த அடங்காப் பிடாரியும் அடங்கிப் போன கணவனும், பணம் தரமுடியாமல், இரவோடு இரவாக ஓடினார்கள். பரிதாபப்பட்டு, மோசம் போன இந்த சம்பவம் என் வாழ்நாளில் மறக்க முடியாத நிகழ்ச்சியாகப் போய்விட்டது.

இதில் என்ன லாபம் என்றால், இந்தச் சம்பவம் நடக்காமல் இருந்திருந்தால், நானும் மேற்கு மாம்பலம் பகுதியை விட்டு வெளியே வந்திருக்கவே மாட்டேன்.

எடுப்பு கக்கூஸ், உப்பு தண்ணீர் உள்ள கிணறு, இருண்ட மண்டபம் போன்ற வீடு, கொசுக்களின் கூட்டம், அடிக்கடி தற்கொலை செய்து கொள்கின்ற எலக்டிரிக் டிரெயின் தண்டவாளப் பகுதி, இவற்றையெல்லாம் நான் விட்டு விட்டு, தி.நகர் பகுதிக்கு வந்துவிட இந்த சம்பவமே எனக்கு உதவியது.

கெட்டதிலும் ஒரு நல்லது என்று நினைத்துக் கொண்டேன். உதவி செய்யப்போய், உபத்திரவம் அடைந்து இந்த சம்பவத்திலிருந்து, நான் மீண்டு, சகஜ நிலைக்கு வர கொஞ்ச காலம் பிடித்தது.

ஆமாம்! எழுத்துப் பணியை மறந்து ஒழுங்காக உத்தியோகம் பார்க்க பாடி டி.வி.எஸ் கம்பெனிக்குப் போய் வந்தேன்.

அங்கே போனதும்தான், என் எழுத்துக்கு வேகம் கிடைத்தது.

# 20. என் மானசீக குருமார்கள்

எழுத்துக் துறையை என் வாழ்க்கைத் துறையாக ஏற்றுக் கொண்ட பிறகு, என் வாழ்வின் அன்றாடப் பழக்க வழக்கங்களே மாறிப் போயின. அதிலும், புதிய துறையான விளையாட்டுத்துறைக்கு புகுந்த பின்னர், முற்றிலும் மாறுபட்ட மனிதனாகவே மாறி விட்டேன்.

விளையாட்டுத்துறையில் தமிழ்நூல்கள் இல்லை என்ற குறை. ஆங்கிலப் புத்தகங்களை வாங்கிப் படிக்கலாம் என்றால், எண்ணிப்பார்க்க முடியாத, வாங்கமுடியாத விலை இரவல் வாங்கியாவது படிக்கலாம் என்றால் யாரிடம் கிடைக்கும் என்று தேடி அலைகிற சூழ்நிலை.

யாராவது தெரிந்தவர்களிடத்தில் புத்தகங்கள் வாங்கிப் படித்ததாக எனக்கு நினைவு இல்லை. நூலகங்களே எனக்கு உறவாக, உயிராக விளங்கின.

புத்தகங்களைக் குறித்த நாட்களுக்குள் திருப்பித் தந்துவிடவேண்டுமென்று கட்டாயத்தால், இரவு பகலாகப் படிப்பு. எந்த நேரத்திலும் எழுதியே ஆகவேண்டும் என்ற துடிப்பு. புரியாத நேரத்திலும், படித்தே தீரவேண்டும் என்ற' குறுகுறுப்பு.

இதற்கிடையே தெரிந்த பல ஆங்கிலக் கலைச் சொற்களுக்கு, தமிழில் புது சொற்களைக் கண்டு பிடித்தேயாக

வேண்டும் என்கிற பதை பதைப்பு.

இப்படி நான் தன்னந்தனியனாகவே, நாட்களை யும் நேரத்தையும் ஓட்டிக் கொண்டிருந்தேன். எனக்கென்று பேசிப் பழக நண்பர்கள். கிடைக்க வில்லை.

காரணம் நண்பர்களை நான் தேடிப்போவது இல்லை. என்னை நாடி வருபவர்களிடம் நான் கொஞ்ச நேரமாவது பேசிப் பொழுதைக் கழிக்க வேண்டாமா? அப்படி நேரத்தை வீணாக்கக் கூடாது என்ற எனது மனோநிலை.

எப்படி மற்றவர்கள் இதை சகித்துக் கொள்வார்கள்?

அதனால், எனக்குத் தெரிந்தவர்கள் தான் அதிகமாக இருந்தார்களே ஒழிய, ஆத்மார்த்தமான நண்பர்கள் என்று யாரும் இல்லாமல் போய் விட்டார்கள்.

வித்யா மந்திர் பள்ளியில் பணியாற்றியபோது, எனது வாழ்க்கை நிலை இப்படித்தான் அமைந்திருந்தது.

தொழில் சம்பந்தமான, தொடர்பு கொண்ட அன்பர்கள்தான் எனக்கு, மிகவும் வேண்டியவர்கள், அவர்களில் அச்சகத்தார். பதிப்பகத்தார், நூலகத் துறையினர், புத்தக விற்பனைக் கடை உரிமை யாளர்கள். பள்ளியில் பணியாற்றிய ஆசிரியை ஆசிரியர்கள், இப்படித்தான் இருந்தனர்.

இத்தகைய குழுவில் ஒருவர் **தமிழ்முடி** என்பவர், தமிழ்ப்பற்று மிகுந்தவர். சிறுவர்களுக்காக நூல்கள் எழுதி, புத்தகங்களை பதிப்பித்து, தானே விற்று விடுவதில் கெட்டிக் காரர் அவர். ஒரு பள்ளியில் ஆசிரியர்.

வித்யா மந்திர் பள்ளிக்கு புத்தகங்கள் விற்க வந்தபோது அறிமுகமானார். எனது நூல்கள் எழுதும் பணியைப் பார்த்து, புத்தகங்களை எந்த அச்சகத்தில் அச்சிடுகின்றீர்கள் என்று கேட்டார். சரியான அச்சகம் அமையவில்லை என்றேன்.

நான் அச்சிடும் அச்சகம் ஒன்று இருக்கிறது **நண்பர்கள் அச்சகம்** என்று பெயர். உரிமையாளர் மணி என்பவர் நல்ல மனிதர். அவர்களிடம் உங்களை அறிமுகப்படுத்துகிறேன் என்று தமிழ்முடி, தேனாம்பேட்டையில் அமைந்திருந்த அந்த நண்பர்கள் அச்சகத்திற்கு அழைத்துச் சென்றார்.

மணி நல்ல நண்பராகவே ஆகிவிட்டார். ஏறத்தாழ 50 புத்தகங்கள் அங்கேதான் அச்சாகியிருக்கின்றன என்றால், அது அவரது அன்பாகப் பழகும் சுபாவத்தால் தான்.

பள்ளியை விட்டால், நான் அதிக நேரம் தங்கியிருக்கும் இடம் நண்பர்கள் அச்சகத்தில் தான்.

ஏழாவது புத்தகம் எழுதியபோதுதான், நண்பர்கள் அச்சகத்தில் எனது புத்தகம் அச்சாகத் தொடங்கியது. அங்கு போன பிறகுதான், எனக்கு எழுத்தில் ஒரு வேகமும், அடக்க முடியாத ஆர்வமும் ஏற்பட்டது. அதாவது காட்டுத்தீ பற்றிக் கொண்டபோது, புயல் வீசிய நிலைமை போல அந்த சூழ்நிலையை விளக்கலாம்.

அதற்குக் காரணம், எனக்கு அமைந்த குருமார்கள்தான்.

ஒருநாள் அச்சகத்தில் அமர்ந்து, நானும் மணியும் பேசிக்கொண்டிருந்தபோது, வயதான ஒரு பெரியவர் வந்தார். புத்தகத்துறை சம்பந்தப்பட்டவர்தான். அறிமுகம் ஆனபிறகு, என் இலட்சியத்தைப் பற்றி அவரிடம் கூறினேன். அவரும் தன்னைப் பற்றி அறிமுகப்படுத்திக் கொண்டு, ஒரு நிகழ்ச்சியைப் பற்றி, வெகுவிமரிசையாக விவரித்துக் கொண்டு வந்தார். (மன்னிக்கவும். அவர் பெயரை மறந்து விட்டேன்.)

மகாகவி பாரதியாருக்கு வேண்டிய நண்பர்களில், ஒருவருக்கு இவர் நண்பராம். அந்த நண்பர் பாரதியைப் பற்றி நிறைய பேசுவாராம். அவர் குறிப்பிட்டதாக, ஒரு நிகழ்ச்சியை

என்னிடம் அவர் கூறினார்.

பாரதியார் திருவல்லிக்கேணியில் தங்கியிருந்த போது, தனது கவிதைகளை சிறு சிறு நூலாக பதிப்பித்து, வெற்றிலை பாக்கு கடைகளில் விற்பதற்குக் கொடுத்திருப்பாராம்.

காலையிலே எழுந்ததும், சில நண்பர்களுடன் நடந்தபடி, விற்கக் கொடுத்திருக்கும் கடைகளுக்குப் போய், புத்தகம் விற்றதா என்று கேட்பாராம், இல்லை என்றே பதில் வருமாம்.

பிறகு, வழக்கமாக ஓரிடத்திற்கு வந்து சேர்ந்த பிறகு, அங்கு டீக்கடை வைத்திருப்பவரிடம் போய், பாய்! நாலு டீ கொடு. நாளைக்குக் காசு தருகிறேன் என்பாராம்.

டீ குடித்துக் கொண்டிருக்கும் பொழுதே, அவர் தன்னைச் சுற்றியுள்ள நண்பர்களைப் பார்த்து, ஆவேசமாகப் பேசுவாராம்.

என் புத்தகத்தை எவனும் வாங்க மாட்டேன் என்கிறான், ஆனால் பாருங்கள். ஒரு நாளைக்கு, என் புத்தகங்கள் ஒவ்வொருத்தன் கையிலும் இருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் இருக்கும் என்பாராம்.

அந்த அற்புதமான அவரின் கனவு, உயிரோடு வாழ்ந்த அவர் காலத்தில் நடக்கவில்லை. ஆனால், அந்தத் தீர்க்கதரிசியின் பேச்சு, உண்மையாயிற்று. இன்று பாரதியைப் பற்றி பேசாத ஆளே இல்லை. புத்தகம் இல்லாத வீடே இல்லை.

இப்படி அந்தப் பெரியவர் பேசியபேச்சு, என்னை மெய்மறக்கச் செய்து விட்டது. உள்மனதை உசுப்பி விட்டது. அதாவது ஒரு இலட்சிய வெறியையே ஊட்டி விட்டது. என்னை மறந்து நானும் பேசலானேன்.

பாரதியாரின் ஆசை, அவர் வாழ்ந்த நாட்களில் நடந்தேறவில்லை **ஆனால், நான் எனது**

**வாழ் நாட்களிலேயே, ஒவ்வொருவர் கையிலும், ஒவ்வொருவர் வீட்டிலும், என் புத்தகங்கள் இருப்பதற்காக உழைப்பேன். அந்தக் காட்சியைக் கண்டுகளிப்பேன்** என்று நானே எனக்குள் சூளுரைத்துக் கொண்டேன்.

இளங்கன்று பயமறியாது என்பார்கள். இளமையில் ஏற்படுகிற அறிவை, கல்லா இளமை அதாவது அனுபவம் இல்லாத, முதிர்ச்சி அடையாத இளமை என்பார்கள். எனது இலட்சியக்கனவும் இப்படித்தான் வேகப்பட்டு புறப்பட்டது.

அதனால், நான் மகாகவி பாரதியை, என் முதல் மானசீகக் குருவாக ஏற்றுக் கொண்டேன். நான் அவரைவிட மேலோங்கி வந்து விடவேண்டும் என்பதாக அல்ல, அவர் கூறியது போல, புத்தகங்களை விற்றுக்காட்ட வேண்டும் என்பதாகத் தான் முடிவெடுத்துக் கொண்டேன்.

அடுத்த என் குருநாதர் வள்ளலார் இராமலிங்க அடிகள்.

அவர் ஒரு அற்புதமான கவிஞர். சொல்லாட்சியில் சூரர். சந்தங்களைப் பொழிவதில் சண்டமாருதம் போன்றவர். அழகாக கருத்துக்களை, ஆணித்தரமாக கவிதைகளில் வடிப்பதில் அவருக்கு நிகர் அவரே. அருட்பெருஞ்ஜோதி, அல்லவா அவர்.

புத்தகம் எழுதத் தொடங்கியபோது, அவரது கவிதையை ஆழ்ந்து ரசித்து, தொடர்ந்து படித்து, மனப்பாடம் செய்வதிலும் முனைப்போடு இருந்தவன் நான்.

இரவு 10 மணிக்கு தொடங்கி, விடிவதற் குள்ளாக, 2000 வரிகள் கவிதையாக எழுதி முடிக்கும் எழுத்தாற்றல், அருளாற்றல் மிக்கவர் அவர், தன் கருத்துக்கள் பற்றி எழுதியிருந்தார் இப்படி.

**கடை விரித்தேன் கொள்வாரில்லை** என்று அதாவது

அவர் கடை விரித்து, தன் கொள்கைகளை, கருத்துக்களை விற்க முடியாமல், வருத்தப்பட்டதாக எழுதியிருந்தார். **நானும் அவரைப்போல் கடைவிரிப்பேன். ஆனால், விற்பதற்கு முயற்சிகள் எடுப்பேன். விடமாட்டேன் வெற்றி பெறும் வரை** என்று எனக்குள் நானே சூளுரைத்துக் கொண்டேன்.

ஆகவே, அவரையும் என் மானசீகக் குரு நாதராக ஏற்றுக்கொண்டேன்.

இருவரையும் நான் நேரில் பார்க்கவில்லை, என்றாலும், என் நெஞ்சில் நிறைந்தவர்களாக, உணர்ச்சிகளில் கலந்தவர்களாக அவர்கள் இருந்தார்கள்.

தொடர்ந்து செயல்படுகிறபோது மட்டும் அவர்கள் என்னோடு இருக்காமல், நினைவுகளிலும் கனவுகளில் கூட இன்றும் கலந்து கொண்டிருக் கின்றனர்.

இந்த இருவரையும் நான் மானசீகமாக குருவாக ஏற்றுக்கொண்டேன். ஏனென்றால், என் முயற்சிக்கு ஒரு எல்லை வேண்டுமல்லவா!

அவர்கள் அளவு என்னால் உயர முடியாது என்று எனக்கு நன்றாகவே தெரியும். இருந்தாலும் ஒரு முயற்சி.

**எனக்கு என் புத்தகங்களை விற்றுவிட வேண்டும் என்பதுதான் பெரிய முயற்சி. பெரும் புகழ் பெறவேண்டும், எல்லோரும் என்னைப் பாராட்டவேண்டும், மரியாதை செலுத்த வேண்டும் என்றெல்லாம் நான் அன்றும் விரும்பியதில்லை. இன்றும் விரும்பியதில்லை. இனியும் நான் அதை விரும்பவும் மாட்டேன். எனக்கு விளையாட்டுத் துறை இலக்கியம் வளர்க்கும் என் இலட்சியம் தான் முக்கியம்.**

விளையாட்டுத்துறை பற்றிய கருத்துக்களை, மக்களுக்கு

தமிழில் எடுத்துக் கூறவேண்டும். அதற்கு புத்தகம் ஒரு கருவி. அவ்வளவு தான். அது தான் என் முயற்சியின் முத்தாய்ப்பாகும்.

அதற்காகத்தான், புத்தகம் எழுதும் ஆசிரியர், பதிப்பிக்கும் பதிப்பாசிரியர், அச்சிடும் அச்சகத்தார், விற்பனை செய்யும் விற்பனையாளர் என்று எல்லா பொறுப்புகளையும் நானே ஏற்றுக்கொண்டேன்.

என் புத்தகங்கள், எல்லா மாணவர்களின் கரங்களிலும், எல்லா மக்களின் கைகளிலும், எல்லாருடைய இல்லங்களிலும் இருக்க வேண்டும், என் முயற்சிகள் வெற்றிபெற வேண்டும் என்று இரவு பகலாக உழைத்தேன். உறவு, நட்பு, சொந்தம் பந்தம், என்று வாழ்க்கையின் மிக விரும்புகிறதையெல்லாம் தியாகம் செய்துவிட்டு, ஒரு லட்சியத்தோடு உழைத்தேன். கடுமையாக உழைத்தேன்.

ஆகவே, வாசகர்கள் என் முயற்சியில் நோக்கத்தைத் தான் நினைத்துக் கொள்ளவேண்டும். நான் ஏற்றுக்கொண்ட குருநாதர்களின் பெருமைக்கு எந்தவிதமான குறையும் ஏற்பட்டு விடக்கூடாது என்பதில், நான் மிகவும் விழிப்பாக இருந்து வருகிறேன்.

நான் உணர்ச்சி வசப்பட்டு, புத்தகங்களை எழுதுவேன், விற்பேன். மக்களை வாங்கச் செய்வேன், என்று எடுத்துக்கொண்ட உறுதிமொழிக்காக, நான் உழைத்த உழைப்பு இருக்கிறதே, பட்ட கஷ்டங்கள் இருக்கிறதே, விட்ட உறவுகள், விழித்திருந்த இரவுகள், வாழ்க்கையில் அடிக்கடி வந்த சரிவுகள் இருக்கின்றனவே! அவையெல்லாம் என்னை ஆட்டிப் படைத்து ஆளாக்கிய அவலங்கள். ஆமாம். அனுபவ சிகரங்கள்.

# 21. புத்தகத்தில் புத்தகங்கள்

தமிழ் பேசுகிற மக்கள் இல்லங்களில் எல்லாம், என் புத்தகங்கள் இருக்கவேண்டும், தமிழ் பேசுகிற உள்ளங்களில் எல்லாம் விளையாட்டு எண்ணங்கள் உலாவரவேண்டும்.

இந்த லட்சியத்துடன்தான், என் எழுத்துப் பயணம் ஆரம்பித்தது. அந்த எழுத்துக்களே என்னை முழுதுமாக ஆக்ரமித்துக் கொண்டபோது, அதுவே என் வாழ்க்கைப் பயணமாகவும் வடிவெடுத்துக் கொண்டது.

நான் எதை நினைத்தாலும், எதைப் பேசினாலும், எந்த காரியத்தைச் செய்தாலும், அவை எல்லாம் புத்தகம் எழுதுகிற போக்கிலே தான் போயின. புத்தகத்திற்கான கரு, விளையாட்டுக்கள் தாம் என்று ஆகிப்போனதால், விளையாட்டுக்களே எனது வாழ்வும் வழியுமாக ஆகிக்கொண்டன.

எனது புத்தகத்தை, எந்தப் பதிப்பாளரும் பதிப்பிக்கத் தயாராக இல்லை. அந்த அளவுக்குத் தைரியமும் இல்லை. தன்னம்பிக்கையும் இல்லை. கதையும் நாவலும் கொண்ட புத்தகங்களே விற்காமல், காற்றாடிக் கொண்டிருந்த காலக் கட்டத்தில், **உடற்பயிற்சி செய். உடம்பை பாது காத்துக் கொள், விளையாட்டுக்குவா, விளையாடிப்பார்** என்று வற்புறுத்துகிற புத்தகங்களை யார் வாங்குவார்?

ஆகவேதான், என்னை விளையாட்டுப் புத்தகம் எழுதாதே என்று எல்லா பதிப்பாளர்களும் அதைரியப்படுத்தினார்கள். புத்தகங்கள் போட வேண்டாம் என்று புத்திமதி கூறினார்கள். உன் வாழ்வை வீணாக்கிக் கொள்ளாதே என்று வழிமறித்துப் பார்த்தார்கள்.

இலட்சியத்தில் ஜெயிப்பதுதான் சந்தோஷம். புகழ் என்றாலும், அந்த இலட்சியத்திற்காக முயன்று தோற்பதும் ஒரு வெற்றிதான். அதுவும் ஒரு புகழ்தான் என்ற முடிவுக்கு வந்தேன்.

இப்படிப்பட்ட எண்ணத்தை, நான் விடாப்பிடியாக இறுக்கிப் பிடித்துக் கொண்டேன். வைராக்கியத்துடன் வரிந்து கட்டிக் கொண்டு, என் வேலைகளில் மும்மராக இறங்கினேன்.

**எனக்கு நானே துணை, எனக்கு இறைவனே துணை** என்ற ஓர் ஒலி, என் இதயத்துக்குள்ளே எப்பொழுதும் ஒலித்துக்கொண்டேயிருக்கும். கொஞ்சம் கூட அந்த ஒலி குறையாமல் நானும் உள்மனதிலே ஒலித்துக் கொண்டேயிருப்பேன். என்றும் உச்சரித்துக் கொண்டேயிருப்பேன்.

இப்படித்தான் என் எழுத்துப் பயணம் மழலை நடைபோட்டுப் புறப்பட்டது.

புத்தகம் எழுதுவதற்குப் புத்தி இருக்கிறதோ இல்லையோ, புத்தகத்தை விற்பதற்கு சக்தி இருக்கவேண்டும் என்று நான் எழுத ஆரம்பித்த காலத்திலேயே அறிந்து வைத்திருந்தேன்.

புத்தகத்தைக் கொண்டுபோய் விற்பதற்கு அப்பொழுது எனக்கு சைக்கிள்தான் வாகனமாக உதவியது. சைக்கிளை மிதித்துக் கொண்டு செல்ல, சக்திவேண்டாமா!

புத்தகம் எழுதுவதற்கு, நூலகங்களுக்குப் போவது,

எவ்வளவு அவசியமாக இருந்ததோ, அதுபோலவே, புத்தகங்களை விற்பதற்கு, உடற்பயிற்சி செய்வது எனக்கு கட்டாய அவசியமாக இருந்தது.

உடலைத் தயார் செய்து கொண்டால்தான், என் புத்தகங்களை விற்க முடியும். விற்கமுடியும் என்பதைவிட, விற்றாகவேண்டும் என்பது கட்டாயம். ஏனென்றால், புத்தகம் பதிப்பிக்க தொடர்ந்து பணம் வேண்டுமே!

சென்னை நகரம் முழுவதும் உள்ள பள்ளிகளுக்கு, சைக்கிளிலேயே போய் வருவது பழக்கமாகப் போய்விட்டது. இதில் அவசர சூழ்நிலையும், அடிக்கடி அதிகமாக ஏற்பட்டு விடுவதும், எனக்கு வாடிக்கையாகவே போய்விட்டது.

புத்தகம் அச்சாகப் பிரிண்டிங் பேப்பர் வேண்டும், உடனே கொண்டுவந்து கொடுத்தால்தான், அச்சாகும். இல்லையேல் அடுத்த புத்தகத்திற்கான அச்சு பாரத்தை மெஷினில் ஏற்றிவிடுவோம். பிறகு, உங்கள் புத்தகம் அச்சாக இரண்டு மூன்று நாட்கள் பிடிக்கும் என்பார் அச்சக உரிமையாளர்.

வேலை செய்கிற பள்ளியில், லீவும் எடுக்க முடியாது. மதிய உணவு இடைவேளை நேரத்திற்குள், இந்த வேலையைச் செய்தாக வேண்டும். கிடைப்பது 1 மணி நேரம்தான். அதற்குள், மைலாப்பூரிலிருந்து பாரிஸ் கார்னருக்குப் போய் அங்கு 3 அல்லது 4 ரீம்களை சைக்கிளில் கட்டிக்கொண்டு. கோடம்பாக்கம் வந்து அச்சகத்தில் போட்டுவிட்டு, மீண்டும் மைலாப்பூருக்குப் போய்விடவேண்டும்.

சைக்கிளில் செல்ல, வேகத்துடன் உடலில் சக்தியும் வேண்டுமல்லவா! இப்படி பல சோதனைகள். வேதனைகளாகத்தான் வரும். சலித்துக் கொள்ளவோ, சபித்துவிட்டு ஒதுங்கவோ முடியாதே. ஏனென்றால், இப்படிப் பட்ட சோதனைகளை, நான்தானே தூக்கி, என் தலையில்

வைத்துக் கொண்டேன். பாரத்திற்குப் பயந்தால் முடியுமா?

புத்தகச்சுமை எனக்கு ஒரு பொருட்டாகத் தெரியவில்லை. அலைச்சல், அலைச்சல், ஓயாத அலைச்சல்.

என் பள்ளியில், ஆண்டு விழா நடக்கும்போது, நான் எழுதுகிற தமிழ் நாடகத்திற்குப் பெற்றோர்களிடமிருந்து நல்ல வரவேற்பு கிடைக்கும். என் நாடகத்தில் நடிக்கும் மாணவர்களில், **ராம்குமார்** என்ற மாணவன், என்னிடம் மிகவும் அன்பாக இருப்பான்.

ராம் குமாரின் தந்தை ஒரு பேங்கில் மேனேஜராக பணியாற்றிக்,கொண்டிருந்தபோது, அவரை சந்தித்தேன். அவர் தன் மகன் மூலமாக, என்னைப் பற்றி நிறைய தெரிந்து கொண்டிருந் தாராம்.

அவர் வீட்டுக்குப் போயிருந்தேன். உங்கள் முயற்சிக்கு என் பாராட்டுக்கள். என்னிடம் எதுவும் உதவி தேவையானால் நீங்கள் தைரியமாகக் கேட்கலாம் என்றார்.

அன்பாக பிறர் பேசினாலே நான் அகம் உருகிப் போவேன். இப்படி தானே முன்வந்து உதவி செய்கிறேன் என்று அவர் பேசியதைக் கேட்டுத் திக்குமுக்காடிப் போனேன்.

என்னால் சைக்கிளில் அலைய முடியவில்லை. ஒரு மோட்டார் சைக்கிள் இருந்தால், நன்றாக இருக்கும் என்றேன்.

நீங்கள் எவ்வளவு ரூபாய் தவணை கட்ட முடியும் என்றார். எனக்கு சம்பளமே 200 ரூபாய்தான். ரூ 50 தான் முடியும் என்றேன்.

மோட்டார் சைக்கிளை வைத்துக் கொண்டு என்ன செய்வீர்கள்? ஜாலியாக சினிமா, பீச், என்று போகலாம் என்று தானே கேட்கின்றீர்கள் என்றார் அவர்.

சம்சாரத்தை பின்னால் ஏற்றி வைத்துக் கொண்டு ஜாலியாகப் போவதற்காக வாங்கவில்லை. என் இலட்சியம்பற்றி, உங்களுக்குப் புரிய நியாய மில்லை. பிரஸ்ஸுக்குப் போவது, பேப்பர் வாங்குவது, புரூப் திருத்துவது, பல இடங்களுக்கு சீக்கிர மாகப் போய் வருவது - என் இலட்சியத்திற்கு உதவத் தான் வாகனம் வேண்டுமென்று விரும்பினேனே தவிர, குடும்பத்தின் குதூகலத்திற்காக அல்ல என்றேன்.

என் கைகளைப் பிடித்துக்கொண்டு தவறாக நினைக்காதீர்கள். என் மகன் பேசியதற்கும் நீங்கள் பேசுவதற்கும் இடையிலே ஏதாவது வித்தியாசம் வருகிறதா என்று பார்த்தேன். உண்மையிலே, உங்களுக்கு உதவுவதில், எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி என்று ஆதரவாகப் பேசினார். உதவியும் செய்தார்.

**விக்கி** என்றொரு மாடல் வண்டியை வாங்கினேன். தற்போது டிவிஎஸ் சேம்ப் போல,மொப்பெட்மாடல். என் உயரத்திற்கும் உடல் பருமனுக்கும் அந்த வண்டி ஏற்றதாக இல்லைதான். சர்க்கஸில் கரடி சைக்கிள் ஓட்டுவதுபோல, நான் வண்டியில் வருகிறேன் என்று, என் மாணவர்கள் கேலி செய்து சிரிப்பார்கள்.

என்ன செய்வது? இதாவது கிடைத்ததே என்று அதை ஓட்டிக்கொண்டு பல பள்ளிகளுக்கு என் படையெடுப்பைத் தொடர்ந்தேன்.

உடற்கல்வி ஆசிரியர்களுக்கும் என்னை யாரென்று தெரியாது. தலைமை ஆசிரியர்களுக்கோ, என்னைப் பற்றி தெரிய நியாயமே இல்லை.

ஆகவே, ஒரு பள்ளிக்குச் சென்று தலைமை ஆசிரியரைப் பார்க்க, ஒரு மணி நேரமாவது, தலைமை ஆசிரியரின்

வாசலிலே நிற்பேன். கடைசியில் இப்போது பார்க்க முடியாது என்று சொல்லி, என்னைப் பார்க்காமலேயே அனுப்பி யவர்கள் ஏராளம்.

சிலர் உள்ளே வரச்செய்து, என்ன பெரிய புத்தகம் என்று என் புத்தகங்களைப் பார்க்காமலே, அனுப்பி வைத்தவர்களும் ஏராளம்.

தலைமை ஆசிரியர்களையாவது என்னால் தாக்குப் பிடிக்க முடிந்தது, என் துறையில் பணி யாற்றும் சக ஆசிரியர்களை சமாளிப்பது தான், எனக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது.

பள்ளியில் பயிலுகிற மாணவ மாணவிகளைக் குறிவைத்தே, நான் புத்தகங்களை எழுதத் தொடங் கினேன்.

விளையாட்டுத்துறையில் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்றால். உடல் பற்றிய முக்கியத்துவத்தை உண்மையாக உணர்த்த வேண்டும் என்றால், இளைய தலைமுறையிடமே போகவேண்டும் என்று, ஆரம்ப காலத்திலேயே நான் உணர்ந்து கொண்டிருந்தேன்.

Positive thinking என்பார்களே ! அதாவது முடியும் என்று முடிவு கொள்கிற நம்பிக்கை உணர்ச்சியைப் பற்றியே, நான் அதிகம் எழுதினேன். ஏனென்றால், இளைஞர்கள் முன்னேற இந்த நம்பிக்கை உணர்வுதான் கட்டாயத் தேவையாக இருந்தது, இருக்கிறது.

என்னுடைய எழுத்துக்களில் காதல், அரசியல், சினிமா போன்ற பகுதிகளுக்கு இடமே இல்லாது போயிற்று.

ஓடுகிற தண்ணீரை, கையால் தள்ளி விட்டுக் கொண்டே நான்தான் தண்ணீரை ஓட வைக்கிறேன் என்று, தலைக்கணமாய் பேசுகின்றவர் களைப்போல, இயற்கையான உணர்வுகளான செக்ஸ் உணர்வுகளைத் தூண்டி விடுகிற எழுத்துக்களை

எழுதிவிட்டு, நாங்கள் தான் தமிழ் இலக்கியத்தின் தலைவர்கள், தளபதிகள், தந்தைமார்கள் என்றெல்லாம் பேசியவர்களின் மத்தியிலேதான், என் எழுத்தும் இடம் பெற்றுக் கொண்டிருந்தது.

ஓராயிரம் பேர் என் புத்தகங்களைப் படித்தாலும், ஓரமாக அவற்றைத் தூக்கி யெறிந்துவிடக் கூடாது. புத்தகத்தை தெரியாமல் படிக்கின்ற புத்தகமாகவும் இருக்கக்கூடாது. புத்தகத்தைப் படித்தபிறகு, அது பிற்காலத்திலும் பயன்படும் என்று பத்திரமாகப் பாதுகாத்து வைக்கின்ற புத்தகமாக இருக்கவேண்டும் என்ற நோக்கத்தில்தான், என் எழுத்து அமைந்திருந்தது.

இந்த முயற்சி எதிர்நீச்சல் முயற்சியே என்பது எனக்குத் தெரிந்துதான் இருந்தது. அவ்வளவு சீக்கிரம் புத்தகங்களை விற்கவும் முடியாது. கையிலே காசும் கிடைக்காது. கஷ்ட ஜீவனம் தான் செய்ய வேண்டும் என்பதும் எனக்குத் தெரியும். இருந்தாலும், நான் கவலைப்படவில்லை.

இப்படியெல்லாம் சிந்தித்து சிந்தித்து, சிந்தனையை, காசுக்காக எழுதி சிதறவிடாமல் கட்டிக்காத்து சிரமப்பட்டு, புத்தகங்கயையும் தயாரித்துக் கொண்டேன்.

ஒரு நாள் ஒரு பள்ளிக்குச் சென்றேன். அந்தப் பள்ளியின் உடற் கல்வி ஆசிரியராய் பணியாற்றிய ஒருவரை சந்தித்தேன்.

நான் எழுதிய புத்தகம் இது என்று ஒரு புத்தகத்தை அவரிடம் காட்டினேன். அதைத் திருப்பித் திருப்பி முன்னும் பின்னும் பார்த்தார். என்னைப் பார்த்தார்.

அவர் முகத்தில் ஒருவித ஆச்சரியம். கொஞ்சம் மாறி ஒருவித மாச்சரியம் (பொறாமை) ஒருவிதமான ஆட்சேபம். ஒருவிதமான கேலியும் கிண்டலும்.

நான் என் புத்தகத்தைப் பற்றி அவர் ஏதாவது பேசுவார். கொஞ்சம் தவறுகளை சுட்டிக் காட்டினாலும், சமாளித்துக் கொள்ளலாம் அல்லது பாராட்டியாவது பேசமாட்டாரா என்றெல்லாம் என் மனதிலே ரயில்வேக எண்ணங்கள் ஓடிக் கொண்டிருந்தன.

மேஜையின் ஒரு பக்கம் அவர், மறுபக்கம் நான் என்று எதிர் எதிர்த்திசையில் உட்கார்ந்திருந்தோம்.

கைப்பந்தாட்டம் பற்றிய புத்தகமா... என்று பேசியபடி, அந்தப் புத்தகத்தை மேஜைமேல் தூக்கிப்போட்டார்.

அவர் போட்ட வேகம், சர்ரென்று பாய்ந்து வந்த புத்தகமானது, என் பக்கமாக வந்து, என் நெஞ்சின்மீது மோதியபடி நின்றது.

அவர் இதை எதிர்பார்க்கவில்லை நானும் எதிர்பார்க்க வில்லை. அவரின் சங்கடம் எனக்குப் புரிந்தது. எனக்கோ நெஞ்சம் குமுறிக் கொண்டிருந்தது.

(குறிப்பு - இந்த நிகழ்ச்சிதான், எனக்கு பல சூழ்நிலைகளில் பொறுமையைக் காட்டுகின்ற பக்குவத்தைக் கொடுத்தது என்பதால், அந்த ஆசிரிய நண்பரை, இன்றும் நான் பாராட்டி மகிழ்கிறேன். அவர் முகம்தான் எனக்கு நினைவுக்கு வருகிறதே தவிர, பெயரோ, நினைவுக்கு வரமாட்டேன் என்கிறது. என்றாலும், அந்த நிகழ்ச்சியை 20 ஆண்டு காலங்கள் ஆகியும், மறக்காமலே இருக்கிறேன் என்பதுதான் உண்மை.)

# 22. திறமையான பொறுமை!

சென்ற பகுதியில் புத்தகமும் புத்தகமும் என்று, ஒரு தலைப்பைத் தந்திருந்தேன். அது என்ன புத்தகம், புத்தகம் என்று இரண்டு முறை வருவதுபோல் எழுதியிருந்தீர்கள். தவறாக வந்து விட்டதா என்ற உங்கள் கேள்வி புரிகிறது.

புது+ஆண்டு என்பது புத்தாண்டு என வரும். புது + ஆடை = புத்தாடை என்று அழைக்கப்படும். அதுபோலவே, புது + அகம் என்பது புத்தகம் ஆயிற்று.

புத்தகங்கள் விற்கப் போய், பல புதிய புதிய அனுபவங்களை ஏற்றுக்கொண்டு, சிரமப்பட்டு, முயன்றும் ஜீரணிக்க முடியாமல் ஜீரணித்துக் கொண்டு வந்ததால், எனது அகம் புது அகமாக மாறிக் கொண்டது என்பதைக் குறிக்கவே புது + அகம் = புத்தகம் என்பதாக மாறியது என்று நான் எழுதினேன்.

ஒரு பள்ளியில் புத்தகம் விற்கப்போய், அந்த உடற்கல்வித் துறை நண்பர், அந்தப் புத்தகங்களை மேஜை மீது வீசிப்போட, அது மிக வேகமாக விரைந்து வந்து என் நெஞ்சின் மீது மோதி நின்றதுடன், என சென்ற இதழில் எழுதியிருந்தேன்.

அந்தப் புத்தகம் என் நெஞ்சின் மீது மோதியவுடன், நான் ஒரு கணம் அப்படியே திகைத்துப்போய் அமர்ந்திருந்தேன். என் இலட்சிய வேகத்திற்குக் கிடைத்த முதல் அவமான அடி அது.

என் முகமாற்றத்தைக் கண்டு, எதிரே இருந்தவர் கொஞ்சம் கதிகலங்கியபடி உட்கார்ந்திருந்தார். நானோ சமாளித்துக் கொண்டு, முகத்தில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டேன். அந்த ஐந்து நொடிகளுக்குள்ளே, ஆயிரமாயிரம் எண்ணங்கள் எழுந்து ஓங்கி அமிழ்ந்துபோயின என்பது அவர் அறியாததுதான்.

ஆத்திரப்படாதே! அது அறிவுக்குச் சத்துரு. கோபம் உன் கொள்கைகளைத் தோற்கடித்துவிடும். வீணான சண்டை, உன் லட்சியவேகத்தின் விலா எலும்புகளை உடைத்துவிடும். கோபப்படாதவன் கோழை என்பது உண்மைதான். ஆனால் கோபப்படுகிறவன் ஏமாந்துபோகிறான். எதிர் பார்க்கிற பலன்களை இழந்துவிடுகிறான். ஆத்திரப்படுகிறவன் தனது வீழ்ச்சிக்கு அவனே காரணமாகிவிடுகிறான், என்றெல்லாம் என் உள் மனம் உணர்த்தியதன் விளைவு, நான் சாந்தமாகிவிட்டேன்.

எதிரே இருந்த ஆசிரிய நண்பரைப் பார்த்து, நான் பேச ஆரம்பித்தேன். நீங்கள் இப்போது தூக்கி எறிந்தீர்களே! இது நான் எழுதிய புத்தகம்தான். இந்தப் புத்தகமானது கைப் பந்தாட்டம் பற்றியது. கைப்பந்தாட்டம் பற்றி உங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது? இந்த 120 பக்கத்தில் உள்ள எல்லா விஷயங்களும், உங்களுக்கு நன்றாகத் தெரியும். இவ்வளவும் உங்களுக்குத் தெரியும் என்று, மற்றவர்களுக்கு எப்படித் தெரியும்? இந்தப் புத்தகத்தை, மற்ற ஆசிரியர்களும், மாணவர்களும், பொதுமக்களும் படிக்கும் போதுதானே, உங்கள் பெருமை வெளியாகும், அதற்குத்தான் நான் இப்படி ஒரு புத்தகத்தை எழுதினேனே தவிர, என் அறிவைக் காண்பிப்பதற்காக அல்ல என்றேன்.

அவருடைய அறிவு பிறருக்குத் தெரியும் என்ற ஒரு வார்த்தை, அவருடைய (அகம்பாவ) மனதை மாற்றிவிட்டது.

நீங்கள் நல்ல காரியம் செய்திருக்கின்றீர்கள். நமது துறைக்கு இப்படி பல புத்தகங்கள் கட்டாயம் வேண்டியதுதான் என்று, எழுந்து வந்து கை குலுக்கினார்.

ஒரு செட் புத்தகம் என்ன, 5 செட் புத்தகங்கள் எங்களுக்குத் தாருங்கள் என்று ஆர்டர் செய்தார்.

அவருடைய பெருமைக்குத் தீனிபோட்டு விட்டு, என்னுடைய லட்சியத்திற்கு ஒரு வழியைக் கண்டுபிடித்துக் கொண்டேன். இந்த வழிதான், என்னுடைய புத்தகங்களை சிரமப்பட்டாலும், கொஞ்சம் வேகமாக விற்பனை செய்ய உதவியது. அந்த வழி என்ன என்று நினைக்கின்றீர்கள்?

நான் எழுதி வெளியிடுகிற புத்தகங்கள் பற்றி, யார் என்ன விமர்சனம் செய்தாலும், அதை பெரிதாக எடுத்துக்கொள்ளக்கூடாது. மனதை வருத்திக் கொள்ளக்கூடாது. எதிர்மாறாக பேசுகிறவர்களுக்கும் பெருமை தந்து ஒதுங்கிக் கொள்ள வேண்டும் என்பதாக முடிவு செய்துகொண்டேன்.

இதை எப்படி நிறைவேற்றினேன் என்று உங்களுக்கு இரண்டு நிகழ்ச்சிகள் பற்றி இங்கே குறிப்பிடுகிறேன்.

ஒருமுறை, நான் விழுப்புரம் வரைபோக நேர்ந்தது. ஒரு கூட்டத்தில் கலந்துகொள்ள சென்னையிலிருந்து பஸ் ஒன்றில் புறப்பட்டேன். செங்கல்பட்டு வந்ததும், இரண்டு பேர் பஸ்ஸில் ஏறி, என் பக்கத்தில் வந்து அமர்ந்தார்கள் மூன்று பேர்கள் அமரும் இருக்கை அது.

அவர்கள் இருவரும் நண்பர்கள், பல விஷயங்கள் பற்றிப் பேசினார்கள். சர்ச்சையில் இறங்கினார்கள். இடையிடையே சில கெட்ட வார்த்தைகளையும் போட்டு பேசிக்கொண்டே வந்தபோது, விளையாட்டு பற்றிய பேச்சு வந்தது.

அடுத்து விளையாட்டு பற்றிய புஸ்தகங்கள் பற்றிய பேச்சு

வந்தது. அதில் என் பெயரும் இடம் பெற்றுக்கொண்டது. ஒருவர் என் புத்தகத்தைப் பற்றி, பெருமையாகப் பேசினார். மற்றவர், என்னடா அவன் கிழித்துவிட்டான் என்று ஏக வசனத்தில் என்னை, விமர்சிக்க ஆரம்பித்தார்.

சிறிது நேரம் சங்கடத்தால் நெளிந்த நான், சுதாரித்துக்கொண்டேன். என்னைத் திட்டிப் பேசியவர் கட்சியில் சேர்ந்துகொண்டேன். நாங்கள் இருவரும் நவராஜ் செல்லையாவைப் பற்றிப் பேசப் பேச, எதிர்த்த நண்பர் என் எழுத்துக்களை மிக அழகாக எடுத்துக் கூறி சமாளித்தார்.

மூவரும் விளையாட்டு இலக்கியம் பற்றிப் பேசிக்கொண்டே, அவரும் ஏசிக்கொண்டே வர வர, விழுப்புரம் வந்து சேர்ந்தோம். நான் இறங்கவேண்டிய இடம் வந்துவிட்டதே.

என்னை ஏசிக்கொண்டே வந்த அந்த நபரைப் பார்த்து, எழுத்தாளர் நவராஜ செல்லையாவைப் பற்றி இவ்வளவு அழகாக, தெளிவாக, ஏக வசனத்தில், கொஞ்சம் மரியாதை கலந்த தமிழில் பேசினீர்களே! அவரை நீங்கள் நேரில் பார்த்திருக்கின்றீர்களா என்றேன்.

இல்லை என்பதாகத் தலையசைத்தார்.

நீங்கள் நிர்தாட்சண்யமாக விமர்சித்த ஆள், நான்தான். நான்தான் நவராஜ் செல்லையா என்று அவரிடம் கூறிவிட்டு, இறங்கி புறப்பட்டேன். இரண்டு நண்பர்களும் என்னைப் பார்த்த அந்த பார்வை இன்னும் என் மனதில் பசுமையாக இருக்கிறது.

என்னைத் திட்டினாலும், பாராட்டிப் பேசினாலும் இயல்பாக எடுத்துக்கொள்கிற இந்த மனப்பக்குவம்தான், என்னை திறமையான ஒரு வியாபாரியாக மாற்றி வைத்தது.

ஏறத்தாழ இரண்டு மணி நேரம் பொறுமை காட்டிப் பேசினேன் பாருங்கள்! அந்தப் பொறுமை தான் என் வெற்றிக்கு அடிப்படையாக அமைந்திருந்தது.

காஞ்சிபுரத்திலே மாநிலப் பொங்கல் விளையாட்டு விழா நடைபெற்றுக் கொண்டிருந்தது. அங்கு நான் பார்வையாளராகப் போயிருந்த போதுதான், இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்தது. (1976)

மத்தியானம் சாப்பிடுவதற்காக ஓட்டலை நோக்கி நான் தனியே சென்றுகொண்டிருந்தபோது, என் எதிரே, பதினைந்து இருபது பேர்களுடன், ஒருவர் வந்துகொண்டிருந்தார் அவர் அந்த குழுவிற்கு ஒரு பயிற்சியாளர் என்பதை பார்த்தவுடன் நான் தெரிந்துகொண்டேன்.

என்னைப் பார்த்ததும், அவர் எனக்கு வணக்கம் தெரிவித்தார். நானும் வணக்கம் செய்தேன். தன்னுடன் வந்தவர்களிடம் என் பெயரைச் சொல்லி, அறிமுகம் செய்து வைத்தார். நானும் பதில் வணக்கம் செய்துவிட்டு பிறகு பார்க்கிறேன் என்று அவரிடம் கூறியபடி புறப்பட்டேன்.

ஒரு நிமிடம் என்றார். திரும்பிப் பார்த்தேன்.

கூடைப் பந்தாட்டம் பற்றி, நீங்கள் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறீர்கள் அல்லவா! என்றார்.

ஆமாம் என்றேன்.

அந்தப் புத்தகத்தை நானும் படித்துப் பார்த்தேன். அதில் நிறைய தவறுகள் இருக்கின்றன. கொஞ்சம் கவனமாகப் பார்த்து எழுதுங்கள் என்றார்.

நான் அவரை ஏறிட்டு நோக்கினேன். அவர், இவ்வாறு பேசியபடி தன்னுடன் கூட வந்தவர்களை யெல்லாம் ஒருமுறை பெருமையாகப் பார்த்து புன்னகை செய்தார்.

அந்தப் பார்வையின் அர்த்தமானது. என் புத்தகம் தவறுகள் நிறைந்த புத்தகம். அதை எழுதிய எனக்கு, அவ்வளவு ஞானம் போதாது. அது மட்டுமல்ல, புத்தக ஆசிரியரைவிட நான் எவ்வளவு புத்திசாலி என்பதை தன்னுடன் வந்தவர்களுக்கு உணர்த்துவதுடன், ஒரே நிமிடத்தில், தன்னை அதிமேதாவி என்று காட்டிக் கொள்ளவும் கூடிய யுக்தியை அவர் கையாண்டது எனக்கு வியப்பை மட்டுமல்ல. வேதனையையும் அளித்தது.

என்னைப் பற்றி, அந்த விளையாட்டுக் குழுவினர் எப்படியெல்லாம் நினைப்பார்கள்? அவர்கள் மனதை எப்படி மாற்றுவது? அதே சமயத்தில், கோபம் கொள்ளாமல், அந்த மனிதரை எப்படி மட்டந்தட்டுவது என்று நான் யோசிப்பதற்குள், அந்த மகா புத்திசாலி, தன் சகாக்களுடன், நான்கு தப்படிகள் நடந்துவிட்டார்.

நான் திரும்ப அவர்கள் முன்புறமாக ஓடிப்போய், பயிற்சியாளரின் கைகளை கெட்டியாகப் பிடித்துக்கொண்டேன். அவர் திகைத்துபோய், என்ன சார் என்று கேட்டார்.

இந்த இருப்து பேர்கள் முன்னால், என் புத்தகத்தில் நிறைய தவறுகள் இருக்கின்றன என்று சொல்லிவிட்டீர்கள். உங்கள் அறிவுரைக்கு மிகவும் நன்றி. விளையாட்டு ஸ்டேடிய அறையில்தான் நான் தங்கியிருக்கிறேன். இங்கிருந்து சுமார் 50 கெஜம்தான் இருக்கிறது. நீங்கள் கூறிய அந்த கூடைப் பந்தாட்டப் புத்தகமும் என்னிடம் இப்போது இருக்கிறது.

நீங்கள் தயவு செய்து, இவர்களுடன் என்கூடவே வந்து, உங்களுக்குத் தெரிந்த, நீங்கள் கூறிய தவறுகளை படித்துக்காட்டிவிட்டால், மறுபதிப்பில், உங்கள் பெயரையும் போட்டு, தவறுகளைத் திருத்திக்கொண்டு வெளியிடுகிறேன் என்று கூறினேன்.

இப்போது நேரமில்லை, இன்னொருமுறை பார்க்கலாம் என்று அவர் நழுவப் பார்த்தார். இத்தனை பேர்களுக்கு முன்னால் நீங்கள் குற்றம் கூறிவிட்டீர்கள். அவர்கள் முன்னால் தவறுகளைக் காட்டினால்தானே நல்லது. அவர் களுக்கும் உங்கள்மேல் ஒரு மரியாதை வளர உதவும். வாருங்கள் என்று கையை பிடித்து இழுக்க ஆரம்பித்தேன்.

சார் சொல்வது சரிதான். வாருங்கள் போகலாம் என்று கூட இருந்தவர்களும் வற்புறுத்தவே, அவர் தர்ம சங்கடமான நிலைக்கு ஆளானார். நான் உங்கள் புத்தகத்தை பார்த்திருக்கிறேன். ஆனால் படிக்கவில்லை என்று சமாளித்துவிட்டு, உண்மையை ஒத்துக்கொண்டார்.

இதைக்கேட்டபிறகு நான் மௌனமாகி விட்டேன். ஆனால் மற்றவர்கள் அவரை ஒரு மாதிரியாகப்பேசி, கிழி கிழி என்று கிழித்து விட்டார்கள். அதாவது நான் எதைப் பேசவேண்டும் என்று நினைத்தேனோ, அவற்றையெல்லாம் அவர்கள் பேசினார்கள்.

இந்த நிகழ்ச்சிகளை ஏன் இங்கே எழுதினேன் என்றால், என்னை அவமானப்படுத்திவிட்டு, பெருமை தேடிக்கொள்ள மேற்கொண்ட முயற்சி. இது ஒரு ஆரம்பம்தான். ஆயிரமாயிரம் நிகழ்ச்சிகள் இப்படி நடந்தேறியிருக்கின்றன.

இதிலே எனக்கு என்ன நன்மை ஏற்பட்டது என்றால், ஒவ்வொருமுறை ஒவ்வொருவரிடமும் நான் அவமானப்படு கிறபோதெல்லாம், அதை ஈடுகட்ட கடுவேகத்துடன் எழுதத் தொடங்கினேன்.

வாழ்க்கையோ வியாபாரியாய் விரட்டியது. வாழ்க்கை அமைப்போ, பயங்கரமான அவமானத்திற்குள்ளே அழுத்தியது. எனக்கு ஏற்பட்ட அவமானங்களை என் வளர்ச்சிக்காக ஆக்கிக் கொண்டேன். அதுதான் என்னை அழியாமல் காத்தது.

# 23. அவமானமும் ஆக்ரோஷமும்

ஏதாவது ஒரு வேலையில் இருந்து கொண்டே, இலக்கியப் பணியைச் செய்யலாமே என்றால், அது முடியும். ஆனால் முழுமையாக ஈடுபடமுடியாது. வெற்றி பெறவும் முடியாது.

நான் டி.வி.எஸ் குரூப் கம்பெனிகளின் விளையாட்டு அலுவலராகப் பணியாற்றியபோது, காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரை என்பதாக என் அலுவல் பணிகள் இருந்தன.

எல்லா வசதிகளும் இருந்தன. ஒரு ரூபாய்க்குள்ளே காலை சிற்றுண்டி, மதிய சாப்பாடு, மாலை சிற்றுண்டி, தேவைபட்டால் இரவு சாப்பாடு என்பதாக வசதி, கை நிறைய சம்பளம், மிகவும் மரியாதைக்குரிய பதவி, எல்லாம் இருந்தும், எனக்கு மனதில் ஒருவித நிறைவோ முழுமையோ ஏற்படவில்லை.

காரணம்? புத்தகங்கள் நிறைய எழுத வேண்டுமே என்ற நினைப்பும் குறுகுறுப்பும், சதா என்னை நெருக்கிகொண்டே இருந்தது தான். அங்கே இருந்த ஐந்து ஆண்டுகளில், 30க்கு மேற்பட்ட நூல்களை எழுதினேன் என்றால், அது இரவு முழுவதும் உட்கார்ந்து எழுதியதால்தான் என்ற நிலை.

பகல் முழுதும் அலுவலகப் பணி, இரவில் எழுத்துப் பணி. இரண்டும், பணவருவாயைக் கொடுத்தன எல் லும் உடலை

உருக்குகின்ற ஓயா நிலையை அல்லவா உண்டாக்கின.

ஒரு மெழுகுவர்த்தி ஒருபுறமாக எரிந்து கொண்டு வந்தால்தான், நீண்ட நேரம் எரியும். இரண்டு பக்கங்களிலுமாக எறிந்தால், சீக்கிரம் உருகி முடிந்துபோகும்.

இந்த உதாரணத்தை நான், பேசியவர்களிட மெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தேன். பணம் தருகின்ற பதவி, மனம் மகிழ்கின்ற எழுத்து இந்த இரண்டில் ஒன்றைத்தான் நான் ஏற்றாகவேண்டும்.

பலநாள் யோசனைகளுக்குப் பிறகு, பலத்த மனப் போராட்டத்திற்கு இடையில் நான் டி.வி.எஸ். வேலையை ராஜினாமா செய்தேன்.

எப்படியும் எழுதியே ஆக வேண்டும், எடுத்துக்கொண்ட இலட்சியத்தை முடித்தே ஆக வேண்டும் என்ற வெறிதான், என்னை வேலையில் இருந்து விடுவிடுத்துவிட்டது.

வேலையைவிட்டு, விடுதலை பெற்று வெளியே வந்தது, மனதுக்கு சந்தோஷமாக இருந்தது. ஆனால் வீட்டு நிலவரப்படி, சந்தோஷமாக இல்லை. சங்கடமாகவே இருந்தது.

வேலையில் இருந்தபோது குடும்ப வாழ்க்கை, தடைகள் இல்லாமல் ஓடிக்கொண்டிருந்தது. மாத வருமானம் இல்லை என்றதும் பிரச்சினைகள் வந்து மடக்கவே, திக்கித் திணற வேண்டியதாயிற்று.

என்மனதில், நாவலாசிரியர் திரு அகிலன் அவர்கள் என்னிடம் கூறியிருந்த கருத்து, அடிக்கடி மின்னல் வேகத்தில் வந்து வந்து தோன்றித் தோன்றி மறைந்தது.

திரு அகிலனும் நானும் ஒரு கல்யாண வைபவத்தில் கலந்துகொண்டபோதுதான், இந்த உரையாடல் வந்தது. சாப்பிட்ட பிறகு சிறிது நேரம், நானும், திரு அகிலனும், தொலைக் காட்சியில் உதவி இயக்குநராகப் பணியாற்றிய திரு

நல்லதம்பி, மூவரும் பேசிக் கொண்டிருந்தோம்.

அவரை அழைத்துப்போக கார் வரவில்லை. நானும் புறப்பட்டேன். என்னைக் கொண்டுபோய், என் வீட்டில் விட்டுவிடுவீர்களா என்று திரு அகிலன் கேட்டார்.

என்னுடைய ராஜ்தூத் மோட்டார் சைக்கிளில் ஏறிக்கொண்டு, வருவதற்கு நீங்கள் சரி என்றால், நானும் தயார் என்றேன். அவரும் ஏற்றுக் கொண்டு மோட்டார் சைக்கிளில் ஏறிக்கொண்டார். சென்னை ஸ்டெல்லா மேரிஸ் கல்லூரிக்கு முன்னால் போகிறபோது அவர் பேசிக்கொண்டு வந்ததுதான் இன்றும் எனது நினைவில் பசுமையாக இருக்கிறது.

**''தமிழ்நாட்டில் எழுத்தாளர்களுக்கு போதிய மதிப்பும் இல்லை. தேவையான வருமானமும் இல்லை. ஒரு தமிழ் எழுத்தாளனால் தமிழ்நாட்டில், வசதியாக வாழவே முடியாது. அதனால்தான் நான் இவ்வளவு புகழ்பெற்றிருந்தும் அகில இந்திய வானொலியில் போய் பணியாற்றிக் கொண்டிருக் கிறேன்''** என்றார் திரு அகிலன்.

நான் எனது டி.வி.எஸ் வேலையை விட்டு விட்டு, முழுநேர விளையாட்டுத் துறை எழுத்தாளனாக ஆகப்போகிறேன் என்றதற்கு **'அதுபோல விஷப் பரிட்சையில் இறங்கவேண்டாம்.** குறிப்பாக தமிழ் எழுத்தாளர்களால் தன்னிறைவுடன் வாழவே முடியவில்லை. நீங்களோ விளையாட்டுத் துறையில் இருக்கிறீர்கள். கொஞ்சம் யோசித்துச் செய்யுங்கள் என்றார்.

ஏற்கனவே நான் முடிவு செய்திருந்ததால், ராஜினாமா செய்துவிட்டேன். தமிழ் எழுத்தாளர்களால், தன்னிறைவுடன் வாழமுடியவில்லை என்றால், ஏன் முடியவில்லை என்ற கேள்வியை எனக்குள்ளே கேட்டுக் கொண்டேன்.

'எழுத்தாளர்களுக்கு போதிய வருமானம் இல்லை'

ஏன் வரவில்லை? எழுத்தாளர்கள் தங்களை உருக்கிக் கொண்டு எழுதித் தள்ளுகிறார்கள். உழைப்புக்கேற்ற ஊதியம் வரவில்லை. ஏனென்றால், அவர்கள் எழுதிக் கொண்டு போய், புத்தகப் பதிப்பாளர்களிடம் விற்றுவிடுகின்றார்கள். உதாரணத்திற்காக எழுதுகிறேன். ஒரு எழுத்தாளர், ஒரு புத்தகத்தை எழுத, 500 ரூபாய்வரை செலவாகிறது என்றால், அந்தப் புத்தகத்திற்கு கிடைக்கும் வருமானம் 1000 ரூபாய்தான் இருக்கும். அப்படியென்றால்,எழுத்தாளரின் வாழ்க்கையில் என்ன வருமானம் கிடைக்கும்? எப்படி முன்னேற்றம் நடக்கும்?

ஆகவே, எழுத்தாளர்கள் எல்லோரும் வாழ்க்கையில் ஏற்றம் பெற வேண்டும் என்றால், புத்தகத்தைப் பதிப்பிக்கின்ற வேலையிலும் ஈடுபடவேண்டும். புத்தகம் தயாரிக்கப் பணம் வேண்டுமே!

வெறுங்கையால் முழம் போடமுடியுமா? இதனால்தான், எழுத்தாளர்கள் எல்லோரும் எழுத்தாளர்களாகவே இருந்து போனார்கள். கவிதையையும், காதலையும் எழுதிய எழுத்தாளர்களுக்கே இந்தக்கதி என்றால், விளையாட்டைப் பற்றி எழுத வந்த என் கதி என்ன ஆகும்?

அதனால்தான், என் மீது அன்பு கொண்ட அன்பர்களும் நண்பர்களும், 'வேலையை விட்டு விடுவதுபோல முட்டாள் தனமான காரியம் எதுவுமில்லை' என்று எனக்கு போதித்தார்கள், வாதித்தார்கள், என்றாலும் நான் அதில் ஜெயித்தேன். எப்படி? விதி என்னை விடவில்லையே? வேதனைப் படவேண்டும் என்பது தானே விதியின் விருப்பம்!

1975ம் ஆண்டு, கிட்டதட்ட 3000 ரூபாய் பெறுகின்ற வேலையிலிருந்து விலகி வந்து, முழுநேர எழுத்தாளனாகி விட்டேன். மாதம் முடிந்தால் கவரில் சம்பளம் கிடைக்கும் என்ற நிலை மாறிப்போனது. வாழ்வும் தடுமாறிப் போனது.

எப்பொழுது கைக்கு பணம் கிடைக்கும்? எப்படி

கிடைக்கும்? யார் கொடுப்பார்? யார் நமக்கு எஜமானன்? என்னுடைய வேலை நேரம் என்ன? நான் வேலை செய்யும் இடம் தான் எங்கே? இப்படிப்பட்ட கேள்விகள், துப்பாக்கியிலிருந்து வெளிவந்த குண்டுகளாக என்னை விரட்டின. மிரட்டின, துரத்தின, துளைத்தன.

விளையாட்டுப் புத்தகங்களை யார் வெளியிடுவார்கள்? புத்தகத்தைப் பார்த்துவிட்டு பயந்தவர்கள்தான் அதிகம், புத்திமதி தந்தவர்களோ ஏராளம். ''வேண்டாம் இந்த விபரீத முயற்சி, உன் வாழ்க்கையும் வீணாகிவிடும். உன் குடும்பமும் ஒன்றுமில்லாமல், உருப்படாமல் போய்விடும் என்று தந்த எச்சரிக்கைகள் ஏரா்ளம் ஏராளம்.

எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டேன். என் மனைவியிடம் இது பற்றி பேசிப்பார்த்தேன். டிவிஎஸ் வேலையை விட்டுவிடப்போகிறேன். சம்பளம் வராது. புத்தகம் விற்றால்தான் பிழைப்பு. கஷ்டம் தான், காசு வரும்வரை. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? என்று என் குழந்தைகளிடமும் கேட்டேன். அவர்கள் கூறிய பதில், என்னை திக்குமுக்காட வைத்து விட்டது.

'உங்களுக்கு சம்மதம் என்றால், நாங்கள் ஆலமரத்தடியின் கீழிருந்து பொங்கி சாப்பிட்டு விட்டு, தங்கிக் காலத்தைக் கழிக்கத் தயார்' என்ற பதில் தான் என்னை, உணர்ச்சி மயமாக்கிவிட்டது.

என் இலட்சியப் பயணத்திற்கு, என் குடும்பம் அஸ்திவாரமாக இருந்து, தந்த ஆதரவு தான், என்னால் 100 புத்தகங்களுக்குமேல் எழுத வைத்தது என்பதை இன்று நினைத்துப் பார்க்கிறேன். மகிழ்கிறேன்.

'Think the worst and do the best' என்பது ஆங்கிலப் பழமொழி, **மோசமான முடிவுகளை சந்திக்கத் தயாராக இரு. ஆனால் உன்னால் சிறந்தது எதுவோ அதைச் செய்ய முனைந்திரு** என்ற பழமொழியின்படி, நான் வாழத்

தொடங்கினேன்.

விளையாட்டுப் புத்தகங்கள் எழுதி, வாழ்க்கையில் தேற முடியுமா, உருப்பட முடியுமா என்று நான் தயங்கவில்லை. ஓடுகிற வெள்ளத்தில் குதித்தாகிவிட்டது. நீந்தித்தான் ஆகவேண்டும். எதிர் நீச்சல் போட்டுத்தான் ஆக வேண்டும். தண்ணீரைக் குடித்துத்தான் ஆகவேண்டும். தவித்துத் தத்தளித்து கரையேறத்தான் வேண்டும். இப்படித்தான் ஆயிற்று என் வாழ்க்கை.

எழுதிக் கொண்டே இருப்பது, சிந்தித்துக் கொண்டே இருப்பது, புத்தகங்களைப் படித்துக் கொண்டேஇருப்பது , என்பதுதான் என் முழு வாழ்க்கையாக அமைந்தது.

ஒரு விளையாட்டுப் புத்தகம் என்பது, கற்பனையில், அழகாக வார்த்தை ஜாலமிட்டு எழுதுகிற புத்தகம் அல்ல. அது, எல்லாம் உலகம் ஒத்துக் கொண்டிருக்கும் விதிமுறைகள், நுண்முறைகள், ஒழுங்கு முறைகள் கொஞ்சமும் வழுவாது, நழுவாது, தவறாது, குறையாது உள்ளது உள்ளபடியே எழுதப்பட வேண்டிய புத்தகம்.

அதனால், என் பொறுப்பு இரட்டிப்பாகப் போனது. **காய்ந்த வைக்கோலைத் தின்று விட்டு, சுவையான பாலைக் கொடுக்கிற பசு மாட்டைப்போல, கடுமையான விதிமுறைகள் கொண்ட விளையாட்டைப்பற்றி படிப்பதற்கு சுவையாக எழுதுகின்றன பொறுப்பு எனக்கு ஏற்பட்டது.**

அதை நான் எனக்குள் கஷ்டமாகக் கருத வில்லை. இரவும் பகலும் சிந்தித்து சிறப்பாக படைக்க வேண்டும் என்ற சிரத்தையில் தான், இந்த எழுத்துத் தொழிலை ஏற்றுக் கொண்டேன். அதற்குமேல், நானே புத்தகங்களைப் பதிப்பிக்க முயன்ற போது தான், நான் நிறைய அவமானங்களை யெல்லாம் சந்திக்க வேண்டியிருந்தது. அந்த அவமானமும், ஆக்ரோஷமும்தான் என் எழுத்து வேகத்தை விரைவுபடுத்தின.

# 24. ஆவேசம்

விளையாட்டுத் துறையில், நிறைய புத்தகங்களை எழுத வேண்டும், எழுதியே ஆக வேண்டும், எழுதித்தான் தீரவேண்டும் என்ற என் இலட்சிய நினைவுகளுக்கு, செயல்களுக்கு, நடந்து போக, ராஜபாதையா கிடைத்தது? நெரிஞ்சல் முட்கள் நிறைந்த காடுமலைப் பாதை.

சோதனைகளும், வேதனைகளும் உடன் தோன்றிய பிறப்புக்களாகத் தொடர்ந்தன. காரணம்-விளையாட்டுத்துறை பற்றி மக்கள் அதிகம் அறிந்து கொள்ளாததுதான், அவர்களால் போதிய ஆதரவுதனைக் காட்ட முடியவில்லை. அவ்வளவு தான்.

என் எழுத்துக்கள் இல்லாம் இளைஞர்களைச் சென்றடைய வேண்டும் என்பாதகவே இருந்ததால், இளைஞர்கள் என்றால், பள்ளிகள், கல்லூரிகள் பக்கம் தானே போக வேண்டும்.

பாமர மக்களையாவது கொஞ்சம் முயற்சி செய்தால், பக்குவப் படுத்திவிடலாம், படித்த மக்களை எப்படி மாற்ற முடியும்? மயக்க முடியும்?

படித்த மக்கள் யார் என்றால், தங்களையும் குழப்பிக் கொண்டு, பக்கத்தில் வருபவர்களையும் குழப்புவர்கள் என்று பாரதி முதல் இன்றைய எழுச்சிக் கவிஞர்கள்

வரை பாடுகின்றார்களே!

**'படித்தவன் சூதும் பாவம் பண்ணினால் ஐயோன்னு போவான்'** என்று பாரதி நொந்து பாடிய வரிகளைப் படியுங்கள்.

நான் எழுதி, புத்தமாக்கி, எடுத்துக் கொண்டு என் துறையில் படித்தவர்களிடம் போனால், அங்கே நடைபெற்ற நிகழ்ச்சிகள் தான், எனக்குஅவமானங்களாகஏற்பட்டன. எதிர்ப்பட்டன.

அவமானங்கள் என்றால், அவர்கள் செய்த காரியங்கள், அவர்களுக்கு அவை சரியானதுதான். எனக்கோ எதிர்மாறாக இருந்தன என்பதுதான் உண்மை.

எனது புத்தகத்தை ஏற்றுக்கொள்ள அவர்கள் தயாரில்லை. என்னை ஒரு எழுத்தாளன் என்று ஒத்துக்கொள்ளவும் அவர்கள் மனம் சம்மதிக்க வில்லை. என் புத்தகம் என்ன பெரிய புத்தகம்? இந்தத் துறைக்குத் தேவையில்லை என்று அவர்கள் எண்ணியது எல்லாம், அவர்களைப் பொறுத்தவரை சரியானதுதான். படிப்பு வேண்டாம் என்பவர்களை பண்படுத்தப் போனால் பாதிப்பு முயற்சிப்பவருக்குத்தானே!

ஆனால் எனது நிலை என்ன என்பதுதான் அன்றைய நாளில் நான் நினைத்துக் துடித்த நிலைமையாகும்.

விளையாட்டுத் துறையில் மற்றவர்களை விட நான் அதிகமாகப் படித்துப் பட்டம் பெற்று, சென்னைப் பல்கலைக் கழகத்தில் (Distinction) என்று சிறப்புத் தகுதிபெற்று, பாஸ் செய்து, கல்லூரியிலும் பணியாற்றியவன்.

பொதுவாகவே, இப்படிப்பட்ட தகுதிகளுக்கு, மற்றவர்கள் மரியாதை தருவது சகஜமாக நடப்பதுதான். ஆனால், நான் மற்ற உடற்கல்வித் துறையினரைவிட, சிறப்புத்

தகுதிகள் பெற்றிருந்தும், நான் எதிர்பார்த்த வரவேற்பும், கொஞ்சமான மரியாதையுங்கூட எனக்குக் கிடைக்கவில்லை என்றால், அதற்கு ஒரே ஒரு காரணம்தான் இருந்தது.

நான் விளையாட்டுத் துறையில் புத்தகம் எழுதியதுதான் அந்தக் காரணம். அவர்களிடம் நான் போய் நின்று, வியாபாரியாகப் பேசியது தான். அவர்கள் விவரம் புரியாமல் நடந்து கொள்ள ஏதுவாயிற்று.

இங்கு ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறேன். நான் எப்படிப்பட்ட அவமானங்களைத் தின்று ஜீரணத்திருக்கிறேன் என்பது புரியும்.

சிவகாசியில், உடற்கல்வி ஆசிரியர்கள் மகாநாடு நடைபெற்றது. அந்த மாநாட்டுக்குப் பொறுப்பேற்று நடத்திய ஒருவர், எனக்கு ஒரு கடிதம் எழுதினார், மாநாட்டுக்கு நீங்கள் வரவேண்டும். உங்களையும் உங்கள் புத்தகங்களையும பார்க்க, எங்கள் பகுதி ஆசிரியர்கள் ஆசைப்படுகின்றார்கள்! என்று இதுபோல மூன்று நான்கு கடிதம் எழுதிவிட்டார்.

என்னால் பதில் எழுதி ஒப்புதல் அளிக்க முடியாத சூழ்நிலை. கடைசியில் மாநாட்டுக்கு நானும் புறப்பட்டு விட்டேன். சிவகாசியில், ரயிலை விட்டு இறங்கும்போது இரவு 11 மணி.

ரயில் நிலையத்தில் மண்டல உடற்கல்வி ஆய்வாளர்கள் (R.I.P.E.) நான்கு பேர்களைப் பார்த்தேன். அவர்களுடன், மாநாடு நடக்கிற பள்ளிக்குப் போய்ச் சேர்ந்தபோது இரவு 12 மணி.

மாநாட்டுக்குப் பொறுப்பேற்றிருந்த திரு கார்மேகம் (R.I.P.E.) எங்களையெல்லாம் வரவேற்றார். மண்டல உடற்கல்வி ஆய்வாளர்களுக்கு, தங்க ரூம்கள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன ஒரு லாட்ஜில்.

திரு. நவராஜ் செல்லையாவும் வந்திருக்கிறார். அவருக்கும் ஒரு ரூம் போட்டுக் கொடுங்கள் என்று, பக்கத்தில் இருந்த ஒரு ஆசிரியரைப் பார்த்து கார்மேகம் கூறினார்.

அவர் கூறிய பதில். எல்லோரையும் ஆச்சரியத்தில் மட்டுமல்ல, அதிர்ச்சியையும் அளித்தது.

சார், அவர் புத்தகம் விற்க வந்திருக்கார் நாம ஏன் ரூம் போட்டுத் தரனும். அது நம்மளோட பொறுப்பில்லே என்று அவர் பேசியது, எனக்கு அவமானமாகப் போய் விட்டது.

அப்படி பேசியவர் வேறு யாருமில்லை. எனக்கு பல கடிதங்கள் எழுதி வருந்தி வருந்தி அழைப்பு விடுத்தவர்தான்.

''சார், நான் புத்தகம் விற்க வந்த புத்தக வியாபாரிதான். ஆனா, நீங்க போட்ட கடிதத்துக்கு மதிப்பு கொடுத்துதான் இங்கே வந்தேன். இப்ப, உங்ககிட்ட எந்த தயவையும் நான் எதிர்பார்க்கவில்லை. நான் ஊருக்கு புதுசு. ராத்திரி நேரம். லாட்ஜ் எந்தப்பக்கம் இருக்குன்னு சொன்னா போதும். நான் போய் தங்கிக்கிறேன்.''

நான் யாரோட தயவையும் எதிர்பார்த்து வரலே, என்று நான் கோபமாகப் பேசியதைக் கேட்ட கார்மேகம், என்னை சாமாதானப்படுத்தத் தொடங்கினார்.

இந்த நிகழ்ச்சி என்னை மிகவும் பாதித்துவிட்டது. புத்தக ஆசிரியர் என்ற மரியாதை வேண்டாம். இந்தத் துறையில் உள்ளவன் என்பதற்காகவாவது. என்னை ஒரு மனிதனாக அவர் மதித்திருக்கலாம்.

அப்போதே ஒரு முடிவுக்கு வந்தேன். ''**எந்தத் துறையில் புத்தகம் எழுதியதால், என்னை கேவலமாக நினைத்தார்களோ, அந்தத் துறையிலேயே நிறைய புத்தகங்களை எழுதி, மற்றவர்கள் மதிக்கின்ற அளவுக்கு**

**முன்னேறியாக வேண்டும். எங்கு சென்றாலும் மற்றவர்கள் தேடிவந்து வரவேற்பு தருகின்ற தகுதியைப் பெற்றாகவேண்டும்** என்று, அந்த இரவு முழுவதும், அதே சிந்தனையுடன், படுக்கையில் தூங்காமல் புரண்டபடியிருந்தேன்.

அந்த மாநாட்டில், எனக்கு மாலையிட்டு பொன்னாடை போர்த்திக் கௌரவிக்க, மாநாட்டு அமைப்பாளர்கள் விடுத்த வேண்டுகோளை, நான் கடைசி வரையில் ஏற்றுக் கொள்ளவே இல்லை. நான் ஒரு எழுத்தாளன் அவ்வளவுதான். இதற்குப்போய் எதற்கு மரியாதை என்று நான் ஒதுங்கிக்கொண்டேன்.

ஆம்பூரிலே நடந்த இன்னொரு நிகழ்ச்சி என்னை மிகவும் வேகப்படுத்திவிட்டது. ஆமாம், முழுநேர எழுத்தாளனாக மட்டுமல்ல- முழுவேக எழுத்தாளனாகவே மாற்றிவிட்டது.

ஆம்பூரில் வடாற்காடு மாவட்ட உடற்கல்வி ஆசிரியர்கள் பயிற்சி மாநாடு ஒன்று நடந்தது. ஆம்பூர் விஸ்வநாதன் என்பவர் மாநாட்டுப் பொறுப்பாளராக இருந்தார். சென்னையில், மாநாட்டுக்குத் தேவையான காரியங்கள் சிலவற்றை, நான்கூட இருந்து செய்து கொடுத்து உதவினேன் என்பதற்காக, மாநாட்டுக்கு வரச்சொல்லி அழைப்பு விடுத்திருந்தார். நானும் முதல் நாளே சென்றுவிட்டேன்.

மறுநாள் காலையில் உடற்கல்வி ஆசிரியர்கள் எல்லாம், ஒவ்வொருவராக வந்துகொண்டிருந் தார்கள். விஸ்வநாதன் அவர்கள். வந்தவர்களை யெல்லாம் வரவேற்றுக் கொண்டிருந்தார். அவர் அருகில் நான் நின்றுகொண்டிருந்தேன்.

இரண்டு ஆசிரியர்கள் வரும்போதே பேசிக் கொண்டே வந்தார்கள். அதோ அங்கே நிற்கிறாரே அவர்தான் நவராஜ் செல்லையா என்று சொல்ல, ''அதுதானே பார்த்தேன்.

புஸ்தகத்தை விற்க வந்துவிடுவாரே'', என்று கிண்டலாகப் பேசியவாறு, என்னைப் பார்த்து கேலியாக ஒரு புன்னகையை உதிர்த்துவிட்டு போய்விட்டனர்.

என் முகம் மாறியதைப் பார்த்த விஸ்வநாதன், 'நீங்கள் சொல்லியது சரியாபோச்சு. நீங்கள் ஏன் மாநாட்டுக்கு வர மறுத்தீங்கங்கறதை, நானும் இப்ப தெரிஞ்சுகிட்டேன். நம்ம துறையிலே புஸ்தகம் எழுதுறதையே கேவலமா நினைக்கிறாங்க... என்றார். அவங்களை என்ன சார் செய்யறது?

நான் இங்கே புஸ்தகம் விற்க வரலியே... நீங்கள் அழைத்த அழைப்பாளராகத்தானே வந்திருக்கேன். நான் மத்தவங்களை கஷ்டப்படுத்தி புத்தகம் விற்கிறேன்னு தானே குற்றச் சாட்டு என்றேன்.

இப்படி நான் எங்கே போனாலும், உடற்கல்வித் துறையில் ஓர் அங்கம் என்று யாரும் பேசுவதில்லை. விளையாட்டுப் புத்தகங்கள் விற்கிற வியாபாரி என்று தான் நினைத்தார்கள். மதித்தார்கள். அப்படியே நடந்து கொண்டார்கள்.

இந்த இரண்டு நிகழ்ச்சிகளுக்குப் பிறகு, நான் எந்த மாநாட்டிலும் கலந்துகொள்வதில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டேன்.

நான் புத்தகம் எழுத விரும்பியதற்குக் காரணம். நான் சார்ந்திருக்கிற விளையாட்டுத் துறைக்கு ஒரு மதிப்பையும், விளையாட்டுத்துறை ஆசிரியர்களுக்கு ஒரு மரியாதையையும், சமுதாயத்தில் ஒரு கௌரவத்தையும் உண்டாக்க வேண்டும் என்ற ஆசையில் தான்.

இதிலே என்ன குறிப்பிடத் தக்க அம்சம் என்றால், நான் எந்தத் துறையினருக்காக, புத்தகங்களை எழுதிக் குவித்தேனோ, அந்தத் துறையினர் என்னை அங்கீகரிக்கவே இல்லை. ஒரு சாதாரண எழுத்தாளன் என்று கூட ஒத்துக்

கொள்ளவில்லை.

தமிழ் கூறும் நல்லுலகம் என்னை ஏற்றுக் கொண்டது. எனது புத்தகங்களை பொது நூலகங்கள் வாங்கிக் கொண்டன. இந்த ஆறுதலால்தான் நான் அதிகமாகவும் எழுதினேன்.

என்னால் இவ்வளவு வேகமாக எழுதமுடிந்தது என்றால் அந்த சூட்சமம் தான் என்னை சூத்ரதாரியாக்கி செயல்படச் செய்தது.

நான் எங்கேயாவது போய் மனதுக்குப் பிடிக்காத காரியம் நடந்து, அவமானம் என்கிற அநியாய சூழ்நிலை என்று நடந்துவிட்டால், உடனே வீட்டுக்கு வந்துவிடுவேன். கவலைப் படுகிற மனதை, நான் மாற்றுவதற்காக, உடனே எழுதத் தொடங்கி விடுவேன். கை வலிக்கிற வரை, உடல் சோர்ந்துபோகிறவரை, எழுதிக் கொண்டே யிருப்பேன். அதற்குப் பிறகு அப்படியே படுத்துத் தூங்கிவிடுவேன்.

அவமானங்களும் சோதனைகளும் நேர்கிற பொழுதெல்லாம், நான் எழுதத் தொடங்கி விடுவேன். நான் நிறைய எழுதியது எல்லாம் அவமானப் படுத்தப்பட்ட சந்தர்ப்பங்களில்தான்.

நான் கடுமையாக, பல மணி நேரங்கள் தொடர்ந்து (அது இரவோ பகலோ எந்த நேரமாக இருந்தாலும்) எழுதிக்கொண்டே இருக்கிறேன் என்றால், எனக்கு எதுவோ நடந்திருக்கிறது என்பதை மட்டும் என் மனைவி தெரிந்து கொள்வாள்.

விடாமல் தொடர்ந்து எழுதுகிறபோது, என் மனத்தின் அழுத்தம் குறைந்துவிடும், தூங்கி எழுந்தவுடன், மீண்டும் புத்துணர்ச்சியுடன் மற்ற வேலைகளை ஆரம்பித்துவிடுவேன்.

சில சமயங்களில் வெளியுலகத்தைப் பார்க்க

எரிச்சலாகிவிடும், அப்போதெல்லாம் என் அறைக் கதவை, உள் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு நாள் முழுவதும் எழுத்துப் பணியில் ஆழ்ந்து போய்விடுவேன்.

மற்றவர்கள் வந்து அழைத்துப்போகிற நிலைமையை புரிந்துகொண்டால், உடம்பில் தேங்காயெண்ணையை பூசிக்கொண்டு எழுதிக் கொண்டிருப்பேன். இப்போது வர இயலாது என்பதாகக் கூறி தப்பித்துக்கொள்வேன்.

இப்படி என் எழுத்துப் பணி, அவமானங் களுக்குப் பிறகு ஏற்பட்ட ஆவேசங்களால் தான் விரைவு பெற்றது. எப்போதும் 5 அல்லது 6 தலைப்புகளில் புத்தகங்களைத் தொடங்கி வைத்திருப்பேன். எந்த தலைப்பு பிடிக்கும் என்று எனக்கே தெரியாது. எந்தத் தலைப்புப் பிடிக்கிறதோ, அந்தத் தலைப்பை தொடர்ந்து எழுதுவேன்.

எனது வேட்கைக்கு ஏற்ப விளையாட்டுத்துறை பற்றி புத்தகம் எழுதினேன். எனது வாழ்க்கைக்கு என்று எதுவும் செய்து கொள்ளவில்லையே என்று நான் எண்ணுவதற்குள், பக்கத்துவீட்டு நண்பர் ஒருவர் கொடுத்த அவமானச்சூடுதான், என்னை வாழ்க்கையிலும் முன்னேறுகின்ற ஆவேசத்தை அளித்தது.

# 25. ஒரு சவாலை சந்திக்க

*16.* நல்ல கதைகள் (சிறுவர்களுக்கான கதைத் தொகுப்பு)

*17.* நல்ல நாடகங்கள்

*18.* கைப்பந்தாட்டம்

1975 ம் ஆண்டு முன்னதாக, மேற்காணும் நூல்களை யெல்லாம், எழுதி, பதிப்பித்து, விற்பதற்கு ஊர் ஊராக அலைந்து வந்தேன்.

எழுதுவதற்குத்தான் குறிப்பிட்ட ஒரு இடம் இல்லாமல் இருந்ததுபோலவே, குடியிருக்கவும் ஒரு சொந்த வீடு இல்லாமல் வாடகை வீட்டில்தான் வசித்து வந்தேன்.

எழுதுவதற்கு ஓர் இடம் இல்லை என்று ஏன் குறிப்பிட்டேன் என்றால், நான் எழுத்தைக் கைப்பிடித்து, என்னுள்ளே மணம் புரிந்து கொண்ட பிறகு, ஏழை எழுத்தாளனுக்கு ஓய்வாக இருக்க, அமைதியாக சிந்திக்க இடம் கிடைக்காது என்பது எனக்கு நன்றாகத் தெரியும்.

வீட்டில் இருந்தாலும் சத்தம் பேச்சு, ரேடியோ அலறல், வெளியில் வந்தாலும் இதே கூச்சல் கும்மாள நிலைதானே. இந்த சத்தமான சூழ்நிலையில், என் மனதை அமைதிப் படுத்திடவேண்டும் என்று, நான் எழுத ஆரம்பித்த நாளிலிருந்தே, மனதைக் கட்டுக்குள் கொண்டு வர, பழகிக்கொள்ளத் தொடங்கினேன்.

வித்யா மந்திர் பள்ளியில் நான் பணியாற்றியபோது, இந்த சோதனை முறையை பழக்கம் செய்து கொண்டேன். எப்படி தெரியுமா?

வித்யா மந்திரில் பணியாற்றியபோது, 1 முதல் 5 வரையில் படிக்கும் குழந்தைகளுக்கான ஒரு கட்டிடம், உயர் வகுப்புகளுக்கு ஓரிடம் என்பதாக இருந்தது. மத்தியானம் உணவு நேரம் என்றால், ஒரே கூச்சலும் கும்மாளமும்

குழந்தைகள் பிரிவில் இருக்கும். அவர்கள் முழுத் தெம்புடன் சத்தம் போட்டுக்கொண்டு மெய்மறந்து விளையாடிக் கொண்டிருப்பார்கள்.

அவர்கள் மத்தியிலே ஒரு நாற்காலியைப் போட்டு அமர்ந்துகொள்வேன். ஏறத்தாழ 500 குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கும் அந்த மத்தியான வேளையில், உச்சி வெயில் உக்கிரமமாக அடித்துக் கொண்டிருக்கும் அந்த இனிய நேரத்தில், அவர்கள் சத்தத்தையெல்லாம் கடந்து, நான் அமைதியாக எழுதிக் கொண்டிருப்பேன்.

எதிரிலே அவர்கள் ஓடி ஆடுகிற சத்தமும், வந்து மேலே விழுகின்ற மோதலும், என்னை எழுத்துச் சிந்தனை யிலிருந்து மாற்றமுடியாத அளவுக்கு, நான் என் உணர்வுகளுடன் நினைவுகளுடன், ஒன்றிப்போய் விடுவேன்.

உணவு வேளை முடிந்து, பிள்ளைகள் வகுப்புக்குப் போன பிறகு, யாராவது வந்து அழைக்கும்போதுதான், எழுதுவதை நிறுத்துவேன்.

இப்படி நான் எழுதப் பழகிக்கொண்டது தான். எனது எழுத்துலக முன்னேற்றத்திற்குப் பெரும் உதவியாக இருந்தது.

இன்றும் கூட, பஸ் ஸ்டாண்டு, ரயில்வே நிலையம், மற்றும் பொது இடங்களில், நான் ஏதாவது ஒரு காரியத்திற்காகப் போய், காத்துக்கொண்டிருக்க நேர்ந்தால், அந்த ஆரவாரத்திற்கு இடையிலும், நான் அமைதியாக உட்கார்ந்து கொண்டு, எழுதத் தொடங்கி விடுவேன்.

வீட்டில்கூட நான் எழுதுகிறபோது, வானொலிப் பெட்டியில் இருந்து, சத்தமாகப் பாட்டு கேட்பதுபோல வைத்துக்கொள்வேன். எதிரே தொலைக்காட்சிப் பெட்டி யிலும் நிகழ்ச்சிகளைப் பார்த்தபடியே எழுதுவேன்.

இப்படி என்னை ஆரவார சூழ்நிலையில் எழுதப் பழக்கிவைத்துக்கொண்ட காரணத்தால், நான் அதிகமாக எழுதவேண்டுமானால் இப்படிப்பட்ட சூழ்நிலை அமையப் பெற்றிருக்கும் ஒரு வீடு எனக்குத் தேவைப் பட்டது.

அப்படி நான் தேடிக்கொண்டிருக்கும் போதுதான் 1975ம் ஆண்டு, தி.நகரில் உள்ள ரெங்கனாதன் தெருவில், ஒரு வீடு கிடைத்தது அலிமா கோல்டு கவரிங் என்ற கடைக்காரரின் வீடு அது.

ஒரு நாளைக்கு குறைந்தது பத்தாயிரம் பேர்களுக்கு மேலே வந்து போகிற தெரு அது.

ஒரு 100 மீட்டர் தூரத்தைக் கடக்க, குறைந்தது 30 நிமிடங்களாவது ஆகும். அதாவது சராசரியாக நீங்கள் ஒரு 1000 பேர்களையாவது இடித்துக் கொண்டுதான் முன்னேறிப் போக வேண்டும்.

மாம்பலம் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிராக இருக்கும் ரோடு அது. அந்தத் தெருவில் முன் பகுதியெல்லாம் கடைகளாக இருக்கும் பின் பகுதியில்தான் குடியிருக்கும் வீடுகள் இருக்கும்.

ஒவ்வொரு குடியிருப்பு வீட்டிற்கும் போக ஒரு சிறு சந்தாவது வைத்திருப்பார்கள். நான் குடியிருந்த வீட்டிற்குள் போக, வழியும் கிடையாது. ஒரு சிறு சந்து போன்ற வழியும் கிடையாது.

ஏனென்றால் வீட்டுக்குப் போகின்ற வழியில், ஒரு செருப்புக் கடை வைக்கப்பட்டிருந்தது. நாமும் ஒரு கஸ்டமர் போலத்தான் கடைக்குள் நுழைந்து, வீட்டிற்குள் போகவேண்டும்.

கடையை ஒட்டியே என் வீடு இருந்ததால் செருப்புக்

கடைக்கு வருகிறவர்கள் சத்தம் எப்போதும, ஜாம் ஜாம் என்றிருக்கும். சில சமயங்களில் செருப்புச் சண்டை சூடுபிடித்துக் கொள்ளும்.

அந்த அலிமா கோல்டு கவரிங் கடைகளில் 40க்கும் மேற்பட்ட ஆட்கள் வேலை செய்தார்கள். அவர்கள் பகலிலும் இரவிலும் பேசுகிற பேச்சும், பாடுகிற பாட்டும், திட்டும், கேட்கச் சகிக்காது. என்றாலும், இந்தச் சூழ்நிலை எனக்கு எழுத்துக்கு மட்டும் ஏற்றதாக இல்லாமல், எனது புத்தக வியாபாரத்திற்கும் பெரிய உதவியாக இருந்தது.

ரெங்கநாதன் தெருவில் குடியிருக்கிறேன் என்பதே எனது எழுத்துத் தொழிலுக்கு ஒரு ப்ளஸ் பாயிண்டாக இருந்தது.

வீட்டிற்குள் விருப்பம்போல் போகமுடியாது. செருப்புக் கடையில் இருக்கும் கூட்டத்தைப் பொறுத்தே அது அமையும். எனது ராஜ்தூத் மோட்டார் சைக்கிள், அந்தக் கடை இரவு மூடுகிற வரைக்கும், வெளியிலேதான் நிற்கும். அதாவது உஸ்மான் ரோட்டு, சாலையிலே, அநாதையாக நிற்கும், இரவு 11 மணிக்குமேலேதான், மோட்டார் சைக்கிளை வீட்டிற்குள் கொண்டுசெல்ல முடியும்.

இதற்காக, இந்த நேரம் வரை விழித்துக் கொண்டு காத்திருப்பதும், எனக்குப் பழக்கமாகிவிட்டது.

இந்த நேரத்தை எப்படி போக்குவது! என்பதாக நினைத்து நான் எழுதத்தொடங்கி விடுவேன். எனக்குத்தான் எழுதவேண்டிய தலைப்புகள், ஏராளமாக இருந்தனவே!

இப்படி எல்லாவிதமான கஷ்டமான சூழ் நிலைகளே, என்னைக் கட்டியங்கூறி வரவேற்ற காலத்தில்தான். எனது எழுத்துவேகம் கரைபுரண்டு ஓடியது.

டி.வி.எஸ் கம்பெனியில், செய்துகொண்டிருந்த

உத்யோகத்தையும் உதறித் தள்ளிவிட்டு, முழுநேர எழுத்தாளனாக, மும்முரமான முயற்சிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்த காலக்கட்டம் அது.

எனது புத்தகங்களையெல்லாம், பத்திரிக்கைகள், மிக அழகாகவும் தெளிவாகவும் விமர்சனம் செய்து வந்தன. அதனால், எனது புத்தகங்களை வாங்க, வாசக அன்பர்கள், ரெங்கநாதன் தெருவரை வந்துவிடுவார்கள், வீடு எங்கே என்று தேடப்போய், மணிக் கணக்காக அலைந்து கண்டுபிடித்தவர்களும் உண்டு.

திக்குத் தெரியாக காட்டில், தேடித்தேடி இளைத்தேனே என்று பாடியதுபோல, வீட்டைக் கண்டுபிடிக்க முடியாமல், கனத்த மனதுடன் சென்றவர்கள் நிறைய பேர்கள்!

இதனால் எனக்கு ஒரு யோசனை வந்தது ராஜ்மோகன் பதிப்பகம் என்று 2 அடி நீளம் 6 அங்குல அகலத்தில், ஒரு அட்டையில் எழுதி, என் வீட்டின் முன்னே உள்ள கடைக்கு முன்புறமாக நின்றிருந்த, கவர்மென்ட் தந்திக் கம்பத்தில் கட்டிவிட்டிருந்தேன்.

இரவில் கட்டிவிட்டு, இனி கவலையில்லை என்று எண்ணிக்கொண்டு, உறங்கப்போய், காலையில் கண்விழித்து, அந்த அட்டையைப் பார்க்க வந்தால், அட்டை தந்திக் கம்பத்தில் இல்லை. செருப்புக் கடைப்பையன் ஒருவன் கையில் இருந்தது.

அவர்கள் அதிகாலையிலேயே கடையைத் திறந்துவிடுவார்கள், வந்ததும், அந்த விளம்பர அட்டையைப் பார்த்ததும், வயிற்றெரிச்சல். கண்ணை மறைக்கும் கோபம். அறுத்து விட்டார்கள்.

நான் போய் காரணம் கேடடேன், எங்கள் கடை முன்னே இது இருக்கக்கூடாது. நீங்கள் போர்டுபோட

அனுமதிக்கமாட்டோம் என்று அடாவடித்தனமாகக் கூறிவிட்டார்கள்.

என் வீட்டு வாசலில் தானே மாட்டினேன் என்றேன். உங்களுக்கு வீடு உண்டு. வாசல் கிடையாது என்று சொன்னார்கள்.

வாசல் இல்லையென்றால், அட்ரஸ் இல்லாத ஆளா என்று நான் சண்டைபிடித்தேன்.

உங்களுக்கு அவ்வளவு ரோஷமிருந்தால், தந்திக் கம்பத்தில் என்ன விளம்பரம்? ரெங்கநாதன் தெருவில் ஒரு கடையை வாங்கி, அதிலே விளம்பரப் பலகையை மாட்ட வேண்டியது தானே என்று ஏன் [illegible]மக்கு சவால் விடுவது போல, பேசினார் கடைக்கார அன்பர்.

அவர் என்னை அவமானப்படுத்தவேண்டும் என்றுதான் பேசினார். அவர்மேல் எனக்கு அப்போது இருந்த கோபம், எனக்கு ஆற்றல் இருந்திருந்தால், பார்வையிலேயே எரித்திருப்பேன். ஆனால், வாயாரத் திட்டக்கூடமுடியாத வாழ்க்கை நிலைதானே எனக்கு இருந்தது அப்போது.

சண்டைக்கிடையே ஒன்றை மட்டும் சத்தம் போட்டுச் சொன்னேன். சவாலாகவே சொன்னேன்.

நீங்கள் சொல்கிற அந்த சங்கதியை சவாலாகவே ஏற்றுக்கொள்கிறேன். உங்கள் கடை முன்னதாகவே, ஒரு கடையை வாடகைக்கோ அல்லது விலைக்கோ வாங்கி, அதில் பலப்பல அளவுகளில், அழகான வண்ணங்களில், எனது போர்டுகளை மாட்டி, தினம் நீங்கள் பார்த்துப் பார்த்து புழுங்குவதுபோல செய்கிறேன். இது சத்தியம் என்று பேசிவிட்டு வீட்டுக்குள் போனேன்.

என்னங்க இது! இருந்த வேலையையும் விட்டுட்டிங்க!

புத்தகம் வித்து பணம் வந்தாதான் வீட்டுல சாப்பாடு நடக்கும். முன்ன மாதிரி என்ன டி.வி.எஸ் கம்பெனி சம்பளமா வருது! நமக்கு எதுக்குங்க இந்த வம்பு என்று மனைவி, மிக சாதுர்யமாக, சத்தம் போடாமல், எனது வாழ்க்கை நிலையை விமர்சனம் செய்துவிட்டு, அடுப்படிக்குப்போய் விட்டாள்.

நினைத்துப் பார்த்தேன் நான், நான் போட்டிருக்கிற சவால், இந்தப் பிறவியில் நடக்கக்கூடிய காரியமா? நடைபெறும் சாத்தியமா?

ரெங்கநாதன் தெருவில், வீதியிலே போடுகிற கடைக்குக்கூட, ஆயிரமாயிரமாக ரூபாய் கொடுத்தால்தான் இடமே கிடைக்கும், தெருவில் உள்ள கடைக்கே 3 அடிக்கு 3 அடி என்றால், ஆயிரக்கணக்கில், பகடியாக பணம் கொடுக்க வேண்டும். ஒரிஜினலாக கடை எடுக்கவேண்டுமென்றால் நான் என்ன செய்வேன்? பணத்திற்கு எங்கே போவேன்! மனம் குழம்பியது!

ஒரு பக்கம் தலைவலி என்பதுபோய் இரண்டு பக்கமும் தலைவலி திருகுவலியாக வந்தது போல, நான் மாட்டிக்கொண்டேன். வேறு வழி?

# 26. வார்த்தையே வாழ்க்கை

வம்பு தனியாக வராது. கொம்பிலே கோர்த்துக் கொண்டு வரும் என்பது பழமொழி. நானுண்டு என் எழுத்துண்டு என்று இருந்த என்னை, பக்கத்து கடைக்காரர் ஒருவர் ஏற்படுத்திவிட்ட பதைபதைப்பால், அடக்க முடியாத கோபத்தால், சவால் விட்டு வந்ததை. நினைத்து நினைத்து பொருமிக் கொண்டே இருந்தேன்.

வாடகை வீட்டில் குடியிருப்பு. வாசலும் வழியும் இல்லாமல் கடை வழியே வந்துபோகும் தவிப்பு. இதற்கிடையே வாய் சவடால் என்ன என்று நானே என்னை நொந்து கொண்டேன்.

நான் படித்தும், அனுபவித்தும் பெற்ற அறிவு ஒன்றுதான். இந்தியத் திருநாட்டில் படித்தவர்களைவிட, படிக்காத உழைப்பாளிகளும், வியாபாரிகளும்தான் நிறைய சம்பாதித்து வாழ்க்கையை அனுபவித்து வாழ்கின்றார்கள். படிப்புக்கு அவ்வளவு தான் மரியாதை படிப்பாளிக்கு அவ்வளவு தான் கௌரவம்.

படித்து நிறைய பட்டம் பெற்று, பிறகு படித்துக் கொண்டே இருக்கும் ஒருவன், பணக்காரன் ஆகிவிட முடியுமா? இந்தக் கேள்விக்கு, இந்தியாவில் கிடைக்கும் பதில் ஒருக்காலும்

முடியாது என்பது தான்.

இந்த இந்தியச்சமுதாயம், படிப்பைவிட, பணத்துக்குதான் அதிகம் மதிப்பளிக்கிறது. மரியாதை கொடுக்கிறது. படித்தவன், அறிவுள்ள ஏழையாகத்தான் வாழ முடிகிறது. இந்த சமுதாயத்தில் இதுதான் நடைமுறை என்பதை நான் அறிந்துதான் வைத்திருந்தேன்.

2000 ரூபாய் மாத சம்பளம் வாங்கும் ஒரு அலுவலரிடம் போய், ஒரு பட்ஜெட் போடு என்றால், அவர் தனக்குள்ளே இருக்கின்ற ஆசைகளையெல்லாம் அடக்கிக் கொண்டு, 1999 ரூபாய்க்குத்தான் போடுவார். மீதி 1 ரூபாயாவது கைவசம் இருக்கட்டும் என்பதற்காக.

அவரது எண்ணமெல்லாம் ஒரு இன்கிரிமெண்ட், அலவன்ஸ் எப்போது வரும் என்பதில் தான். அதற்கும் மேலே சிந்திக்க, வருவாயை சந்திக்க வாய்ப்பே இல்லை. வருமானமும் வருகிற சூழ்நிலையும் இல்லை.

அதே சமயத்தில் மாதம் 2000 ரூபாய் சம்பாதிக்கிற ஒரு வியாபாரியிடம் பட்ஜெட் போடு என்றால், அவன் விருப்பப்படி லட்சக்கணக்காகப் போடும் நிலைமை உண்டு. இன்றில்லை, நாளைக்காவது நம்மால் நிறைய சம்பாதிக்க முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு உண்டு.

இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்துத்தான், படித்து, அதன் பயனாகக் கிடைத்த ஆபீஸ் வேலைகளை விட்டு விட்டு, வியாபாரத்தை மேற்கொள்ள முடிவு செய்தேன். வாழவும் முயன்றேன்.

வியாபாரத்திற்குப் போகாதே! நஷ்டம் வரும். கஷ்டம் வரும் அதிலிருந்து மீள்வது என்பது ஆபத்தைப் போன்றது என்று என்னை தடுத்தவர்களும் உண்டு.

வியாபாரம் என்பது வியாபித்திருக்கின்ற பெரியபாரம் - சுமை என்று எனக்கும் தெரிந்ததுதான், அதனால்தான் புத்தக வியாபாரத்தில் வெகு ஆர்வமாக ஈடுபட்டேன். வியாபாரி எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு ஒரு கதை உண்டு.

ஒரு வயதான வியாபாரி, மரணப்படுக்கையில் கிடக்கிறார். அவர் படுத்திருந்த கட்டிலைச் சுற்றி அவரது மனைவி அவரது 6 மகன்கள் அழுதபடி நிற்கின்றனர். கடைசி மூச்சுக்காக கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த அந்தக் கிழவர், கண்விழித்துப் பார்க்கிறார். அவரது மகன்களைப் பார்க்கிறார். அவரது விழிகள் என்ன சொல்கின்றன என்று புரிந்து கொண்ட அவரது மனைவி, நம்ம பசங்க எல்லாமே வந்துட்டாங்க என்று அவருக்கு ஆறுதல் வரும்படி பேசுகிறார்.

அந்தக் கிழவியாபாரி, தன் கடைசிப் பேச்சாக, என்ன பேசினார் தெரியுமா? எல்லாரும் இங்கே வந்துட்டீங்களே கடைய யாருப்பா பாத்துக்குவாங்க என்றாராம்.

தன் மரண நேரத்திலும், தன் கடையையும் வியாபாரத்தையும் தான் நினைத்துக் கொண்டிருந்த கிழவரை, மனைவியும் மக்களும் ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள் என்பது ஒரு கதை.

வியாபாரம் செய்கிற யாருமே, அதில் முன்னேறிய எவருமே, இப்படித்தான் வாழ்நாட்களைக் கழித்திருக்கிறாகள். உண்ணும் போதும், உறங்கும் போதும், கனவிலும் நினைப்பிலும், உறவிலும், பகையிலும் கூட, தங்கள் வியாபாரத்தைத் தான் நினைத்து, உழைத்திருக்கிறார்கள்.

இப்படி இல்லாத ஆட்கள்தான், கஷ்டத்திலும், நஷ்டத்திலும் உழன்று காலாவதியாகியிருக்கின்றனர்.

அதனால்தான், நிறைய படித்தவர்களும், கொஞ்சம் உழைக்கப் பயந்தவர்களும், உல்லாசமாய் வாழ்க்கையை ஓட்ட

விரும்புகின்றவர்களும், வியாபாரம் என்றால் வெறுத்துப் பேசுகிறார்கள். அந்தப் பக்கம் வரவே அருவெறுப்பு அடைகிறார்கள். அஞ்சி மறைகின்றார்கள்.

நான் புத்தக வியாபாரம் செய்கிறேன் என்றதும், படித்திருக்கும் எனது விளையாட்டுத் துறை ஆட்கள், என்னை அலட்சியம் செய்தது இந்த ஒரு காரணத்தினால் தான். நான் படித்தவர்களின் மனோநிலையை புரிந்து வைத்துக் கொண்டிருந்ததால் பதட்டமடையவோ, குறுகிப்போகவோ இல்லை.

உன் கடைக்கு எதிரிலேயே ஒரு கடையை வாங்கிக் காட்டுகிறேன் என்று வாய்ச்சவடால் அடித்த நிலையில் அப்படிப்பேசிய என் வார்த்தையே என் வாழ்க்கை முறையாக அமைந்துவிட்டது.

ரெங்கநாதன் தெரு முழுவதும் கடைகள் உள்ளன. அவற்றில் ஒரு சில கடைகள் இரவு 11 மணி வரை இருக்கும். அதிகாலை 6 மணிக்கே மீண்டும் திறந்து விடும். அந்தத் தொழிலாளர்கள், 6 ணி நேரம் கூட ஓய்வெடுப்பதில்லை 18 மணி நேரம் பணியாற்றுவதைப் பார்த்த பிறகு, எனக்கு அந்தக் காட்சி ஒரு உள் ஊக்கத்தை (இன்ஸ்பிரேஷன்) ஏற்படுத்திவிட்டது.

நானும் உழைக்கத் தயாரானேன். ஊர் சுற்றிப் புத்தக வியாபாரம் செய்கிற பொறுப்பை ஏற்றுக் கொண்டதால், வீட்டில் இருக்கும் நேரம், படிக்கவும் எழுதுகிற நேரம் வெளியில் என்றால் வியாபாரம் வேலை என்று வாழ்வை அமைத்துக் கொண்டேன்.

இப்படி இருக்கும் வேளையில்தான் ஒரு நாள் ஒரு ஆசிரியர் தஞ்சாவூரிலிருந்து என்னைப் பார்க்க வந்தார். கொஞ்ச நாள் சென்னையில் தங்கப் போகிறேன் என்று அறிமுகம் செய்து கொண்டார். அவர் என் புத்தகங்களைப் படித்துவிட்டு என்மேல்

மரியாதை நிமித்தம் பார்க்க வந்தவர்.

நான் தங்கியிருந்த வீட்டுக்கு எதிர்ப்புறத்தில், சித்ரா போட்டோ ஸ்டுடியோ இருக்கிறது. அதன் பொறுப் பாளராக இருக்கப் போறேன் என்று சொல்லி விட்டுப் போனார்.

அவரும் அடிக்கடி வீட்டுக்கு வர, நானும் ஓய்வு நேரத்தில் ஸ்டுடியோவுக்கு போய் உட்கார, என்று நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. நமக்கு ஒரு சொந்தக் கடை இந்த ரெங்கநாதன் தெருவில் கிடைக்குமா? வாடகைக்குக் கிடைத்தாலும் வாடகையும் அட்வான்சும், பகடியும் (குட்வில்) நம்மால் தரமுடியுமா? என்கிற கேள்விகள், என் மனதுக்குள்ளே நமைச்சலை ஏற்படுத்த, அவற்றை சமாளித்த படியே அங்கே அமர்ந்திருப்பேன்.

அந்த போட்டோ ஸ்டுடியோ உரிமையாளர் ஒரு பள்ளியில், ஓவியராக பணியாற்றி வந்தார். அவர் அயல்நாடுகளுக்குப் போய், வேலை பார்க்க வேண்டும் என்பதில் வேகமாக இருந்தார்.

அவருக்கு இன்னும் ஒரு மாதத்தில் வேலை கிடைத்துவிடும். ஸ்டுடியோவை விற்பதற்கு அவர் முயற்சி செய்கிறார் என்பதை அறிந்தேன். இது 1976ம் ஆண்டு நடைபெற்ற சமாச்சாரம்.

போட்டோ ஸ்டுடியோ! அதனுக்குள்ளே இருக்கின்ற சாமான்கள், குட்வில் போன்ற எல்லாவற்றிற்கும் சேர்த்து 6000 ரூபாய் பேசி முடிக்கப்பட்டது. ஒரு மாதம் கழித்துப் பணம் தருகிறேன் என்றும் ஒப்பந்தம் எழுதப்பட்டது.

நானும் பணத்திற்கு பலபேரிடம் கேட்டேன் பயனில்லை. பொது நூலகத்துறைக்கு புத்தகம் சப்ளை செய்த பணம் நீண்ட நாட்களுக்குப் பிறகு ரூ 9000 வந்து சேர்ந்தது. மகிழ்ச்சியில்

திளைத்துப் போனேன். பல கற்பனைகள் கனவுகள் பட்டாம் பூச்சிளாய் பறந்தன.

ஸ்டுடியோகாரரிடம் போய் பணம் கொடுத்த போது 6000 ரூபாய் என்று பேசியவர்; பலர் வந்து அதிகமாகக் கேட்கிறார்கள். உங்களுக்காக 9000 ரூபாய்க்கு ஒத்துக் கொள்கிறேன் என்று பிடிவாதமாகிவிட்டார். கொடுத்தது போக, மீதி 3000த்தில் பல செலவுகள் என்ற திட்டத்தில், எல்லாமே பறிபோன நிலையில், எல்லா ரூபாய் களையும் அவரிடம் கொடுத்து, எதிர்பார்த்திருந்த இடத்தை வாங்கி விட்டேன்.

எனது வாழ்க்கையில் பேசிய வார்த்தைகளுக்காக, நான் பணத்தைப் பணம் என்று பார்க்கவில்லை. விளையாட்டுத்துறை நூல்கள் விற்பனை செய்கின்ற ஒரு இடத்தை வாங்கி விட்டோம் பணம் அதிகமாகப் போனாலும் கவலையில்லை. எனது இலட்சியம் நிறைவேறி விட்டது என்று மகிழ்ந்து போனேன், காசை இழந்தும் மகிழ்ச்சி கொண்டேன் என்றால், அது கொள்கையின் வெற்றிதானே!

இத்தனைக்கும் நான் கடையையே விலைக்கு வாங்கி விட்டேன் என்று நினைக்காதீர்கள்! வாடகைக்கு ஒரு கடையைப் பிடித்து விட்டேன் என்பது தான். வாடகைக் கடைக்கு இப்படி மகிழ்ச்சியா என்றால் அதற்கெல்லாம் நான் விரும்பிய படி **ராஜ் மோகன் பதிப்பகம்** என்று பல வண்ண போர்டுகளை மாட்டிக் கொள்ளலாம் அல்லவா!

ரெங்கநாதன் தெருவில் விளையாட்டுத் துறை நூல்களை விற்க, ஒரு விற்பனை நிலையம் கிடைத்தது என்ற மகிழ்ச்சிக்குப் பிறகு, அந்தக் கடையில் எத்தனை எத்தனை அவஸ்தை படும் அனுபவங்கள் எனக்குக் கிடைத்தன தெரியுமா? அடுத்தப் பகுதிக்கு வாருங்கள்!

# 27. விளையாட்டுத் துறையில் தமிழ் வளர்ச்சி

இதுவரை விளையாட்டுத் துறை நூல்களை எழுத வேண்டும் என்ற வேட்கையில், வெறியில், இலட்சிய தாகத்தில், இருந்த உத்தியோகங்களையெல்லாம் ராஜினாமா செய்துவிட்டு, அன்றாட உணவுக்கும் ஆளாய் பறக்கின்ற அனுபவங்களையெல்லாம் அனுபவித்த பிறகு, புத்தக வியாபாரியாக மாறி, கொஞ்சம் கொஞ்சமாக விருத்தி அடைந்து, ரெங்கநாதன் தெருவில் உள்ள வீட்டில் குடியேறிய பிறகு, புத்தக வியாபார நிலையம் ஒன்று வேண்டும் என்ற சவாலில் கடை ஒன்றை வாடகைக்கு எடுத்தது வரை, உங்களுக்கு எழுதி இருந்தேன். மேலும்

சென்னையில் உள்ள ரெங்கநாதன் தெருவில், போட்டோ ஸ்டுடியோ ஒன்றை வாங்கியது பற்றி, எனக்கு வானாளாவிய சந்தோஷம். உலகமே என் கையில் கிடைத்ததுபோல திருப்தி, ஏனென்றால், வாடகை வீட்டில் குடியிருந்து கொண்டு, வறுமைக் கோட்டிற்கு மேலாக இருந்து கொண்டு, வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்த எனக்கு, வியாபாரக் கோட்டையாக விளங்கும் ரெங்கநாதன் தெருவில், வாடகை வீடு கிடைத்ததே பெருமையாக இருந்தது.

அந்தத் தெருவில் ஒரு நாளைக்கு லட்சக்கணக்கான அளவுக்கு மக்கள் வந்து போகிற கடை வீதிகள் உண்டு,

சாதாரணமாக, அந்தத் தெருவில், ரோட்டில் சிறிய கடை ஒன்று வைக்கவேண்டும் என்றால், அரசியல் சிபாரிசு மட்டுமல்ல, ஆயிரக்கணக்காக பணம் செலவு செய்ய வேண்டும், பகடி, வாடகை என்று உண்டு.

வீதிக்கே இவ்வளவு வேண்டும் என்றால், கட்டிடம் உள்ள கடை என்றால், எவ்வளவு மதிப்பும் மரியாதையும் உண்டு?

அந்தத் தெருவிலே குடியிருக்க வீடு, புத்தகம் விற்க ஒரு கடை என்றால், சந்தோஷம் இருக்காதா? வாடகைக்கு கடை என்பதற்கே இப்படி வானளாவிய சந்தோஷம் என்றால், சொந்தக் கடையாக இருந்தால் எப்படி இருக்கும்.

இப்போது அந்தக் கடையை சொந்தமாக வாங்கி இருக்கிறேன் என்பதை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். ஏனென்றால், விளையாட்டுத் துறை நூல்களை விற்க முடியாது, எழுதுகிற நீ விளங்க மாட்டாய்! என்று விசுவாமித்திர சாபம் கொடுத்த எனது எதிரிகள், மனம் மகிழவே இந்தத் தகவலை இங்கே தெரிவித்தேன். வேறொன்றுமில்லை.

போட்டோ ஸ்டுடியோவை பகடி கொடுத்து அட்வான்ஸ் கொடுத்து, மாதம் 300 ரூபாய் வாடகை என்று, வாங்கி விட்டேன். ஆனால், போட்டோ பிசினஸ் பற்றி எனக்கு எதுவும் தெரியாதே!

டி வி எஸ் நிறுவனத்தின் ஸ்போர்ட்ஸ் ஆபிசர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு போட்டோ கடையின் முதலாளியாக அமர்ந்து கொண்டு, வருகிறவர்களிடம் புகைப்படம் பற்றியும், எனது புத்தகங்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருப்பது, எனது வாடிக்கையான தொழிலாகி விட்டது.

புத்தகம் விற்க ஒரு இடம் என்ற திருப்தி தான் எனக்கு ஏற்பட்டது, பணவரவுதான் இல்லை. போட்டோ கடை ஊழியர்களுக்கு, சம்பளம் தரக்கூட முடியாத அளவுக்கு

பிசினஸ், என்றாலும் என் எழுத்துத் தொழிலை நிறுத்தவில்லை.

எழுதுவது, அதுவும் விளையாட்டுத்துறை பற்றிய நூல்களை எழுதுவது என்பது வாழ்க்கையாகவே அமைந்துவிட்டது.

என்ன செய்யலாம் என்று நான் யோசித்து ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்பே, அந்தப் போட்டோ கடையை மூடிவிடுவதுபோல, ஒரு நிகழ்ச்சி நடந்துவிட்டது.

ஊட்டியில் ஒரு சொற்பொழிவு நிகழ்ச்சிக்காகச் சென்று திரும்பிய நான் காலை 8 மணி அளவில் வீட்டில் செய்தித்தாள் படித்துக் கொண்டிருந்தபோது, ஒருவர் பரபரப்புடன் என் பெயரைக் கேட்டுக்கொண்டு வந்தார். நான்தான் என்று அறிமுகம் செய்துகொண்டேன்.

அறிமுகம் இல்லாத அந்த மனிதரை, நான் பார்த்துக் கொண்டிருக்கும்போதே, அவரது கண்கள் கலங்கிக் கொண்டிருந்தன. இதோ வந்துவிடுவோம் என்பதுபோல கண்ணீர் வெளியே வர ஆயத்தமாகிக் கொண்டிருந்தது.

இனிமேல் நான் இன்னொரு கல்யாணம் பண்ணிக்க முடியுமா சார்? என்ற அவரது படபடத்த பேச்சு, எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவரை அமரச் செய்வதற்குள் எனக்கு பெரிய பாடாய் போயிற்று. பொறுமையாகப் பேசுங்கள் எனக்குப் புரியவில்லை என்றேன்.

நீங்கள் தானே ஸ்டுடியோ ஓனர் என்று கேட்டார். ஆமாம் என்றேன்.

இதென்ன சார் நியாயம் என்றார், அவரது குரலில் கோபம் கூடிக்கொண்டே வந்ததைக் கவனித்தேன். அவரே பேசட்டும் என்பதுபோல, நான் அவரது கண்களையே பார்த்துக்

கொண்டிருந்தேன்.

என் கல்யாணத்திற்கு போட்டோ எடுக்க, உங்கள் போட்டோ கிராபரிடம் பேசி அழைத்துக்கொண்டு போனேன். 24 படங்கள் எடுத்த அவர் ஒன்று மட்டும்தான் சரியாயிருக்கிறது என்று தந்தார். 23 படங்கள் பழுதாகிவிட்டன என்கிறார். இனிமேலா சார் நான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன். எல்லாமே பாழாகிவிட்டது என்று புலம்பிய அவரிடம், நான் என்ன பேசுவது என்று யோசித்தேன்.

என் போட்டோ கிராப்பரை விசாரிக்கிறேன். எனக்கும் இந்த நிகழ்ச்சிக்கும் சம்பந்தமே இல்லையே என்றேன்.

நீங்கள் தானே ஸ்டூயோவின் முதலாளி, எல்லாவற்றிற்கும் நீங்கள் தானே பொறுப்பேற்க வேண்டும் என்றார்.

அவர் கூறியது சரிதான் என்ற முடிவுக்கு வந்தேன்.

அவர் பேசித் தந்த பணத்தை திருப்பிக் கொடுத்துவிட்டு, உங்கள் திருப்திக்காக ஒன்று செய்யப் போகிறேன் என்றேன். திகைத்தபடி அவரது பார்வை என்னை நோக்கி விழித்தது.

எனக்குத் தெரியாத இந்தத் தொழிலை, நான் இறங்கி செய்ய முடியாத இந்த பிசினஸை, மற்றவர்களை நம்பி செய்கிற இந்த வியாபாரத்தை, நான் குளோஸ் செய்து விடுகிறேன் என்றேன்.

அப்படின்னா.....?

இன்றுடன் ஸ்டுடியோவை மூடிவிடப் போகிறேன் என்று கூறி அவரை அனுப்பி விட்டு, நான் முடிவை நிறைவேற்றுகிற பணியை ஆரம்பித்துவிட்டேன். அந்தக் காலை நேரம் எனக்கு என்றுமில்லாத சுறுசுறுப்பைக் கொடுத்துவிட்டது.

இரண்டு மூன்று நாட்களுக்குள், ஸ்டுடியோவில் இருந்த

கேமிராக்கள், விளக்குகள், மற்றும் முக்கியமான பொருட்களை, எல்லாம் விற்று விட்டேன்.

கோபத்தில் நஷ்டத்திற்கு விற்றுவிட்டேன் என்று நினைக்காதீர்கள். வாங்கிய விலைக்கு மேலே லாபத்திற்குத் தான் விற்றேன்.

மாடு வைத்துப் பால் வியாபாரம் செய்தேன். ஒரு பால்காரனை நம்பி. சைக்கிள் கடை வைத்து நடத்தினேன். ஒரு தெரிந்தவனை நம்பி.

நான் இருந்து செய்யாத எல்லா தொழிலுமே, விருத்தியாவதுபோல் வளர்ந்து, நல்ல பலன் தரும் நேரத்தில் நஷ்டமாகிவிட்டன. அதுபோலவே, நாடகத் துறையிலும் ஒரு குழுவையே வைத்து என்னென்னமோ முயற்சிகள் செய்தேன். அதிலும் தொடர்ச்சி இருந்ததே தவிர, வளர்ச்சி இல்லை.

இத்தகைய அனுபவங்கள் எல்லாம் எனக்கு ஓர் உண்மையை உணர்த்திக் காட்டியது. விளையாட்டைச் சார்ந்த எந்தத் தொழிலை நான் செய்தாலும், அதில் வளர்ச்சியும், எழுச்சியும், மலர்ச்சியும் மிகுந்தே வந்தது.

ஆனால், விளையாட்டுச் சம்பந்தமில்லாத, ஆனால் எனக்கு ஈடுபாடுள்ள மற்ற வேலைகளைச் செய்தாலும், அவை மங்கி மழுங்கித் தான் போயின.

ஆகவே நான் அன்று முதல் ஒரு சபதம் எடுத்துக் கொண்டேன். கலையோ, தொழிலோ, வியாபாரமோ எதுவாக இருந்தாலும், விளையாட்டை அடிப்படையாக வைத்துத்தான் செய்ய வேண்டும் என்று மேற்கொண்ட முடிவுதான். விளையாட்டுக் களஞ்சியம் பத்திரிகையை வளர்த்தது. இன்று சினிமா எடுக்கும் முயற்சியும் தந்தது.

# 28. தமிழில் விளையாட்டு இலக்கியம்

தமிழ்மொழி தோன்றிய காலம் தொட்டே, பல்வேறு துறைகளில், பல்லாயிரக் கணக்கான இலக்கிய நூல்கள் புலவர் பெருமக்களால் எழுதப்பட்டன. இன்றும் தொடர்ந்து எழுதப்படுகின்றன. எதிர்காலத்திலும் ஏராளமான நூல்கள் தோன்ற இருக்கின்றன. தோன்றும்.

தமிழ்த்தாயின் இளைய மழலையாக, உருவான துறைதான் விளையாட்டுத்துறை.

தமிழ் இலக்கிய நூல்களில் எல்லாம், வால் நட்சத்திரம் போல, ஆங்காங்கே ஓரிரு சொற்களில், ஓரிரு வரிகளில், ஓரிரு பக்கங்களில், விளையாட்டுக்கள் குறிக்கப்பட்டு இருக்கின்றன. விளக்கப்பட்டும் இருக்கின்றன.

ஆனால், ஒரு முழு இலக்கிய நூலாக இதுவரை எழுதப்படவில்லை. வாழ்க்கை அம்சங்களில் மட்டுமல்ல; இலக்கியங்களில் கூட விளையாட்டு, மின்னல் போல் தோன்றி மறைகிற ஓர் அற்புதமாகவே, அலங்காரமாகவே ஆச்சர்யமாகவே விளங்கி வந்திருக்கின்றன.

கவிதைத்துறை, கட்டுரைத்துறை, கதைத்துறை, நாடகத்துறை, போன்ற துறைகளில் எல்லாம், முழு நூல்

வடிவம் பெற்ற முறைகளில், விளையாட்டு நூல்கள் எதுவும் எழுதப்படாமலே இருந்து வந்தது.

ஆங்கிலேயர் வரும் வரை, ஆதிகாலத்தில் இருந்து தமிழகத்தில் தோன்றிய சிறு சிறு விளையாட்டுக்கள், கூடி விளையாடும் குழு விளையாட்டுக்கள், மரபு வழியாக, வாய்ப் பேச்சு மூலமாக, கற்பிக்கப்பட்டும் பாரம்பரிய முறையிலேதான் பின்பற்றப்பட்டும், ஆடப் பெற்றும் வந்தன.

தனித்தனியே, இருவர் மூவர் என்று ஆடி வந்த குழு விளையாட்டுக்கள் ஒரு சில இருந்த போதிலும், சடுகுடு ஆட்டமே பெரிய விளையாட்டாக, பிரபலமாகி இருந்தது.

அந்த விளையாட்டில் பாடப்பட்டு வந்த நாட்டுப்புறப் பாடல்கள் கூட, பரம்பரையாக, வாய்வழி இலக்கியமாக தொடர்ந்து வந்தனவே தவிர, ஏட்டில் பதிந்த இலக்கிய வடிவம் பெற வில்லை.

**சென்னைப் பல்கலைக்கழகத்தின்** மூலமாக, நான் உடற்கல்வித் துறையில் ஆய்வாளராக அனுமதிக்கப்பட்டு, **தமிழ் நாட்டு சடுகுடுப் பாடல்களும் சடுகுடு ஆட்டமும்** என்ற தலைப்பில் ஆய்வு செய்தபோது தான், தமிழ் நாடு முழுவதும் பயணம் செய்து, நாடோடிப் பாடல்களாக விளங்கிய சடுகுடு விளையாட்டுப் பாடல்களை, ஏட்டில் பதிவு செய்து நூலாக்கினேன்.

தமிழில் ஒரு சிலர் விளையாட்டு நூல்கள் எழுத முயன்று, ஆங்கிலச் சொற்களை அப்படியே தமிழில் எழுதி, விளையாட்டு நூல் என்று வெளிக் கொணர்ந்தனர் என் று முன்பே எழுதியிருந்தேன்.

இன்னும் சிலர், எழுத முயன்று இயலாது போயினர். எழுதியவர்கள் தொடர முயன்று தோற்றுப் போயினர். எழுதிய பலர், நூலாக ஆக்க இயலாமையின் காரணமாக, எழுதியதை பரணில் போட்டு, பதைபதைப்புடன் பணிந்து போயினர்.

ஆக, விளையாட்டு பற்றி நூல் எழுத முயன்ற சிலருக்கு, தொடர்கின்ற சாதகமான சூழ்நிலை அமையாததற்கு, இன்னும் பல காரணங்கள் இருந்தன.

1. விளையாட்டுத்துறை என்றால், அதிலே பல தரப்பட்ட விளையாட்டுக்கள், நூற்றுக் கணக்கான எண்ணிக்கையில் இருக்கின்றன. அதாவது, **காலால் உதைக்கின்ற விளையாட்டுக்கள்; கையால் அடித்தும் எறிந்தும், பிடித்தும், வீசியும் ஆடுகின்ற விளையாட்டுக்கள்; விரல்களால், கம்புகளால், மட்டைகளால், கோல்களால் ஆடுகின்ற விளையாட்டுக்கள்; தரைமீது 18 குழிகள் போட்டு, பல மைல்தூரம் நடந்து போய் ஆடுவதும்; ஒரு மேடை மீது பல குழிகளை வைத்து ஆடுவதும்; சுவற்றில் பந்தை மோதி வரச் செய்து விளையாடுவதும், ஓடுவதும், தாண்டுவதும், எறிவதும்** போன்ற விளையாட்டுக்களை எல்லாம், ஒருவரே எழுதுவது என்பது கஷ்டமான காரியம்.

ஒருவர் ஒரு விளையாட்டில் வல்லுநராக இருப்பார். ஒரு சில விளையாட்டுக்கள் பற்றித் தெரிந்திருப்பார்.

தெரிந்த விளையாட்டுக்களைப் பற்றி, தீர்க்கமாக, தெளிவாக நூல் எழுத முடியாது என்பதால், ஓரிருவர், ஒன்றிரண்டு புத்தகங்களை எழுத முயன்றனர்.

ஆக, நிறைய நூல்களை ஒருவர் எழுத வேண்டும் என்றால், நிறைய விளையாட்டுக்களைப் பற்றி, நிறையவே தெரிந்தும், புரிந்தும், அறிந்தும், ஐயமற ஆடித் தெளிந்தும் இருந்தால்தான் வெற்றிகரமாக எழுத முடியும்.

2. நிறைய செய்திகள், குறிப்புகள் எடுத்துக் கொண்டாலும், அதைத் தமிழறிந்த வாசகர்கள் ஏற்றுக் கொள்ளும் வண்ணம், எழுதுகிற தமிழ் மொழிப்புலமை பெற்றிருக்க வேண்டும்.

வேண்டிய இடங்களில், தரமான, தன்மையான,

தேவையான சொற்களைப் பெய்து, அருவி நடை, அமுத நடை, தெளிந்த நடை, படிப்பாரைப் பிணிக்கும்நடை, பண்டிதத்தமிழ், பயிலும் நடை என்பார்களே! அப்படி எழுதுகின்ற ஆற்றல் வேண்டும். தமிழர் தம் கருத்தையும் கவனத்தையும் கவர்கின்ற நூல்களுக்குத்தான் வரவேற்பு இருக்கும். அப்படிப்பட்ட அழகு நடை வேண்டும்.

3. அனைத்து விளையாட்டு நூல்களும், ஆங்கிலத்தில் தான் அதிகமாக இருக்கின்றன. அவற்றைத் தேடிக் கண்டுபிடிப்பது அவ்வளவு எளிதல்ல. கண்டு பிடித்தாலும், காசு கொடுத்து வாங்கும் எல்லைக் குள்ளே இல்லாததும், விரும்புவோரால் வாங்க முடியாத பொருளாதார நிலையும், முக்கியத் தடைகளாகவே இருந்தன. இருக்கின்றன இன்றும்.

4. அவசரம் மிகுந்த இந்த நாகரீக காலத்தில், வாழ்க்கையை எப்படியாவது அனுபவித்தேத் தீர வேண்டும் என்ற வேகமும் வெறியும் எந்த வயதினருக்கும் இருப்பது இயல்புதான்.

அப்படிப்பட்ட ஆவேச சூழ்நிலையில், ஓரிடத்தில் அமர்ந்து, ஆழ்ந்து படிக்கவும், குறிப்பெடுக்கவும், புதிய சொற்களை உருவாக்கவும், பொறுமையுடன் எழுதவும் கூடியவர்கள் இருப்பார்கள் என்றா நினைக்கின்றீர்கள்! அதுவும் ஓடி விளையாடுகின்ற செயலைப் பற்றி, உட்கார்ந்து எழுத யார் முனைவார்கள்? எழுதி மகிழ்வார்கள்?

இவ்வளவு இன்னல்களுக்கிடையையேயும் எப்படியோ ஒரு புத்தகத்தை எழுதிவிட்டால், அதைப் பதிப்பிக்க வேண்டிய செலவுகளோ அதிகரித்து தலைக்கு மேலே வந்து கனமாய் கனக்கிறது. அதையும் சமாளித்துக் கொண்டு ஒரு வித ஆற்றலோடு புத்தகத்தைப் பதிப்பித்து விட்டால், அதை விற்பதற்கு எத்தனை போராட்டங்களை சந்தித்தாக வேண்டியிருக்கிறது!

இந்த விளையாட்டுப் புத்தகத்தை வாங்கி விற்க எந்த விற்பனையாளரும் முன் வருவதில்லை. முகத்திற்கு நேரே

முகத்தில் அடித்தால் போல, ''இதெல்லாம் விலை போகாது, யார் வாங்குவார்கள்? யாராவது ஏறெடுத்துப் பார்த்தாலே அதுவே பெரிய வெற்றி'' என்று, எழுத்தாளர் மனதைப் புண் படுத்தி குத்திக் கிழித்துக் குதறி இனிமேல் புத்தகத்தையே எழுதக் கூடாது என்று முடிவுக்கு வருகிற ஒரு கட்டாய நிலைக்கு கொண்டு வந்து தள்ளி விடுவார்கள்.

இத்தனையும் மீறி நான் விளையாட்டுப் புத்தகங்களை எழுத ஆரம்பித்தேன் என்றால், அது தான் என்னிடம் இருந்த இலட்சிய வெறி. **என்ன ஆனாலும் சரி, வாழ்க்கையில் எந்த நிலைக்குப் போனாலும் சரி, வாழ்ந்தாலும், வீழ்ந்தாலும் விளையாட்டுப் புத்தகம் எழுதியே ஆகவேண்டும்** என்று என்னுள் எழுந்த ஆக்ரோஷ வெறி, புலிப் பாய்ச்சலாக அமைந்தது, புத்தகத்தை விற்கிற வேகமோ, புயலின் வேகமாக இருந்தது. இது எப்படி? என்று நீங்கள் கேட்கலாம்.

எப்பொழுதும், எழுத்தாளனுக்கு கர்வம் நிறைய உண்டு. தான் ஒரு படைப்பாளி என்ற தலைக்கனம் உண்டு. ''அனைவரும் என் கருத்தினைப் படிக்கின்றனர்'' என்ற ஆணவ நினைவுகள் உண்டு. தன்னை ஒரு அதி மேதாவி என்று நினைத்துக் கொள்கிற தற்போதம் உண்டு. இது எழுத்தாளிகளுக்கே உரிய சிறப்பு குணங்களாகும். அப்படி அவர்கள் நினைத்துக் கொண்டால் தான் ஒரு துணிவோடு எழுத முடியும். தொடர்ந்து சிந்திக்க முடியும். தொட்டதை முடிக்க முடியும்.

ஆனால், விற்பனை என்று வரும் போது, எழுத்தாளர்கள் ஒதுங்கி விடுவார்கள். நேரிடையாக இறங்கி, எதிராளியின் உணர்வுகளிடையே உள்ள எழுச்சிகளை அறிந்து, முக பாவத்தை புரிந்து கொண்டு, தங்களுடைய நிலை அங்கே என்ன என்பதை தெரிந்து கொண்டு சூழ்நிலைக் கேற்ப தன்னைத் தாழ்த்திக் கொண்டு விற்க அவர்களால் முடிவதில்லை.

அதனால், நமது திறமை எவ்வளவு இருந்தாலும், அங்கே

எல்லாவற்றையும் விட்டுக் கொடுத்து விட்டு, சொன்னவற்றைக் கேட்டுக் கொள்ள வேண்டிய ஒரு சோகமான சூழ்நிலைக்கு எழுத்தாளர்கள் ஆளாகிவிடுவதால் தான், எழுத்தாளர்கள் புத்தகம் போடவே முயற்சிப்பதில்லை.

பொதுவாக வியாபாரிக்கு மானம், ரோஷம் இருக்கக் கூடாது என்பது என் எண்ணம். நான் எழுதிய புத்தகங்களை விற்க போன போது ஏற்பட்ட அனுபவம்தான், இப்படி எழுதவைக்கிறது.

அப்படி என்ன யாருக்கும் ஏற்படாத சந்தர்ப்பங்கள், சங்கடங்கள், சஞ்சலங்கள் என்று கேட்கலாம். இதை உங்களுக்கு நான் சென்னால், உண்மை நிலை புரியும் .

உடற்கல்வித் துறையிலே நான் கொஞ்சம் அதிகமாகவே படித்தவன், அதிகமாகவே பட்டங்களை வாங்கியவன்.

உடற்கல்வித் துறையிலே யாரும் வகிக்காத உயர்ந்த பதவிகளை வகித்தவன். அதிகமான சம்பளம் வாங்கியவன். பேரும் புகழோடும் இருந்தவன்.

அத்தகைய பல பெரிய பதவிகளையே வேண்டாமென்று தூக்கி எறிந்து விட்டு, உடற்கல்வித் துறைக்காகவே என்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டவன், எழுத்தையே நம்பி வாழ்ந்தவன்.

ஆக, நானே போய் புத்தகம் விற்கச் சென்ற இடத்திலெல்லாம், என்னை விட விளையாட்டிலும், அறிவிலும், அனுபவத்திலும், ஆற்றலிலும் கொஞ்சம் இளையவர்களை நேரிலே நான் சந்திக்க வேண்டியிருந்தது.

நான் ஏகப்பட்ட மரியாதையை யாரிடமும் எதிர்பார்க்கவில்லை. ஒரு சின்ன வியாபாரிக்கு கொடுக்கப்படக் கூடிய சொற்ப மரியாதையைத்தான் நானும் எதிர்ப்பார்த்தேன். அதுவும் சில இடங்களில் எனக்குக் கிடைக்கவில்லை என்கிறபோது தான் மனம் நொந்து

போனேன். வெந்தும் போனேன். அதற்காக என் விற்பனை முயற்சிகளை விட்டு விடவில்லை. இன்றும் தொடர்கின்றேன்.

என்னால் இந்த விளையாட்டுத் துறையில் இப்படி புதிய முயற்சிகளை எப்படித் தொடர முடிந்தது? இந்தப் பகுதி தொடக்கத்திலேயே, பலர் முயன்று பின்தங்கியதற்கு என்ன காரணம் என்பதையெல்லாம் தொகுத்து எழுதியிருந்தேன். சில கருத்துக்ளை குறித்தும் காட்டியிருந்தேன். அவற்றையெல்லாம், புரிந்து வைத்துக் கொண்டதால், அப்படிப்பட்ட தகுதிகளை நான் வளர்த்துக் கொண்டேன். இதற்கு என் ஆரம்ப கால கல்லூரி வாழ்க்கையும் அமைந்திருந்த விவரங்களையும், முன் பகுதியில் குறித்திருந்தேன். நாடகங்களாகவோ, நாவல்களாகவோ, சிறு கதைகளாகவோ எழுதி அனுபவப்பட்டு, எழுத்து உலகத்தில் என்னை முழுமையாக வளர்த்துக் கொண்டிருந்தேன்.

நான் ஒரு கருத்தை தொடங்கி அதை முடிக்கும் வரை, அதற்காகத் தொடர்ந்து கடுமையாக பாடுபடுவதும், அதை முடித்து விடவேண்டும் என்ற மனோபாவத்துடன் முயற்சிப்பதும், என் இலட்சியம் நிறைவேறுவதற்கு ஒரு முக்கிய காரணமாக அமைந்தது.

நான் நினைத்து ஒன்று நடக்கவில்லை என்றால், அதையே சுற்றிச் சுற்றி நினைத்து, சுற்றிச் சுற்றியே வந்து அந்த வேலையை முடித்து விடவேண்டும் என்று பாடுபடுவது எனது பழக்கம். அது வெற்றியா, தோல்வியா, என்பது பற்றி கவலை இல்லை. முயற்சிக்க வேண்டும், அதற்கு புது முடிவு தெரிய வேண்டும். அவ்வளவுதான்.

அதனால் என் புத்தகத்தை விற்று விடக்கூடிய சூழலை கொண்டு வந்து விடவேண்டும் என்று நான் முழுமையாக என்னை அர்ப்பணித்துக் கொண்டேன்.

என் புத்தகத்தை யாரும் பதிப்பிக்க முன் வரவில்லை என்ற காரணத்தினால் இங்கே ஒரு பதிப்பகத்தையே நான்

ஆரம்பித்தேன். என் புத்தகத்தை எந்த அச்சகத்தாரும், பதிப்பிக்க முன்வரவில்லை என்ற காரணத்தால் இங்கே ஒரு அச்சகத்தையே நான் தொடங்கினேன்.

இதற்காக என்னுடைய பதவி, ஊதியம், வேலை ஆகியவற்றைத் தூக்கி எறிந்து விட்டு, வெளியே வந்தேன். ஆக, என்னுடைய லட்சியம் 100 புத்தகங்களையாவது எழுதி முடித்து விட வேண்டும். அந்த ஒரு லட்சியத்தை முன் வைத்துத்தான், சென்னைக்கு வந்த நான், 100 புத்தகங்களை முடித்த பின்தான், எனது இன்னொரு லட்சியமான விளையாட்டைப் பற்றி சினிமா எடுக்கும் தொழிலில் ஈடுபட்டேன். அதன்படி 100 புத்தகங்களை எழுதியிருக்கிறேன். அவற்றை பதிப்பித்திருக்கிறேன்.

சினிமாவும் தயாரித்து, 1994ம் ஆண்டு 'ரிலீஸ்' செய்திருக்கிறேன்.

விளையாட்டுக் கலைத்துறையில் பொது மக்களின் கவனத்தை ஈர்த்து விட் வேண்டும் என்ற அதே லட்சியத்திற்காக, 100 புத்தகங்களை எழுதி முடித்த பிறகே ''ஓட்டப்பந்தயம்'' என்ற சினிமா படத்தையும் எடுத்தேன். என்னுடைய இலட்சியத்திற்காக மற்றவர்களுடைய பணத்தைப் போட்டு சோதனை செய்ய நான் விரும்பவில்லை. ஆகவே நான் கொஞ்சம் கொஞ்சமாக பணம் சேர்த்து, கடன் வாங்கி, நானே முழு பொறுப்பேற்று படத்தை வெளிக் கொணர்ந்தேன்.

கதை, திரைக்கதை, வசனம், பாடல்கள், இசையமைப்பு, தயாரிப்பு, நடிப்பு, பின்னணி, இயக்கம், விநியோகஸ்தர் என்று அத்தனை பொறுப்புக்களையும் ஏற்றிருந்தேன். **நான், இந்தப் படத்தை எடுத்ததில் வெற்றி பெற்றேன் என்பதைக் காட்டிலும், என்னுடைய லட்சியத்தில் வெற்றி பெற்றுள்ளேன் என்பதில் தான் எனக்கு திருப்தி. முழு மகிழ்ச்சி.**

ஆகவே, விளையாட்டுக்களைத் தமிழ் இலக்கியத்தில் இணைத்து எழுத வேண்டும் என்று முடிவு செய்த பிறகு,

எந்தெந்த வடிவில் இலக்கிய நூல்களை வடித்தேன் என்று இங்கே தந்திருக்கிறேன்.

1. விளையாட்டுக்களின் வரலாற்றை சுவையான கதைகளாக வடித்தேன்.

2. விளையாட்டின் சிறப்புக்களை நாடகமாக வானொலியிலும், தொலைக்காட்சியிலும் படைத்தேன்.

3. விளையாட்டு பற்றிய பெருமைகளை, கட்டுரைகளாக, தினசரி பத்திரிக்கைகளிலும், வார மாத இதழ்களிலும் எழுதினேன்.

4. விளையாட்டுக்கள் பற்றி ஆங்கிலத்திலேயே பேசாமல், தமிழிலும் பேச முடியும் என்று எல்லோருக்கும் வழி காட்டுவதற்காக, தமிழில் விளையாட்டுக் கலைச் சொற்களை உருவாக்கினேன். கலைச் சொல் அகராதி, ஆங்கிலம் தமிழ் அகராதி நூல்களை எழுதித் தயாரித்து வெளியிட்டேன்.

5. மக்களுக்கு உடல் நலம், பலம், வளம் தேவை என்று உடற்பயிற்சி நூல்களை எழுதி வெளியிட்டேன்.

6. அதற்காக ராஜ்மோகன் உடலழகுப் பயிற்சிப் பள்ளி என்று பயிற்சி நிலையத்தையும் ஏற்படுத்தி, பயிற்றுவித்தேன்.

7. மனதையும் உடலையும் ஒருமைப்படுத்தும் யோகாசனக் கலையை ரெங்கனாதன் தெருவில், யோகாசனப் பயிற்சிக் கூடத்தை ஏற்படுத்திக், கற்பித்தேன்.

8. 6ம்வகுப்பு முதல் 12ம் வகுப்பு மாணவ மாணவியருக்கு உடல் நலத்தில் விழிப்புணர்வு ஏற்படுத்தவும்; விளையாட்டில் ஆர்வம் உண்டாக்கவும்; பாடநூல்களை எழுதினேன்.

9. அதற்காக உடற்கல்வி, மாமன்றம் ஒன்றை ஏற்படுத்தி, ஆண்டுதோறும் 40,000 மாணவ மாணவியர்கள் போட்டிப்

பொதுத் தேர்வு எழுதுமாறு, பங்கேற்கச் செய்து; **40,000** ரூபாய்க்கும் மேலாக பணப்பரிசும், புத்தகப் பரிசுகளும் தந்து, உடற்கல்வி விளையாட்டு இலக்கியத்தை, வீடு தோறும் கொண்டு போய் சேர்த்தேன்.

10. இசை நாடாக்கள் தயாரித்தேன். விளையாட்டின் பெருமை பற்றி, பாடல்கள் எழுதி, இசையமைத்து, புகழ் பெற்ற பாடகர்களுடன் நானும் பாடி, தயாரித்து வெளியிட்டேன். விளையாட்டு இசைப்பாடல்கள் என்ற கேசட்டும், உடற்பயிற்சிக்காக வாத்திய இசை மூலமாக மெட்டமைத்து, Instrumental Sports Music என்ற கேசட்டையும் உருவாக்கினேன்.

11. பொதுமக்கள், விளையாட்டின் மூலம் மகிழவும், நலவாழ்வு பெற்றுத் திகழவும் கூடிய வகையில், மாத இதழ் ஒன்றை 1977ம் ஆண்டு தொடங்கினேன். **விளையாட்டுக் களஞ்சியம்** என்ற மாத இதழ் மூலம், 22 ஆண்டுகளாகத் மக்களிடம் விளையாட்டு இலக்கிய சேவையை செய்து கொண்டு வருகிறேன்.

12. பள்ளிகளில் பொது மேடைகளில் விளையாட்டு இலக்கியச் சொற்பொழிவுகள் என, இதுவரை தமிழ்நாடு முழுவதும் 1000 மேடைகளில் சொற்பொழிவாற்றி இருக்கிறேன்.

விளையாட்டு இலக்கியமே என் வாழ்வின் மூச்சாக, வாழ்வதற்குரிய பேச்சாக விளங்கி வருகிறது. விளையாட்டால் நானும், என்னால் விளையாட்டும், இலக்கியமும் வளர்ந்து கொண்டு வருகிறது என்பதை உங்களுக்கு விளக்கவே ஒவ்வொரு ஆண்டும் எப்படியெல்லாம் எழுதும் முயற்சிகளில் ஈடுபட்டேன் என்ற பட்டியலை கீழே தந்துள்ளேன்.

| | | |
|---|---|---|
| *1.* | *1964* | *விளையாட்டுக்களின் வரலாறும்வழிமுறைகளும் (தேசிய விருது பெற்ற நூல்)* |
| *2.* | *1965* | *விளையாட்டுக்களின் விதிகள்* |
| *3.* | *1969* | *தொந்தியைக் குறைக்க சுலபமான வழிகள்* |
| *4.* | ,, | *எதற்காக உடற்பயிற்சி செய்கிறோம்?* |
| *5.* | ,, | *ஒலிம்பிக் பந்தயத்தின் கதை (தேசிய விருது பெற்ற நூல்)* |
| *6.* | *1970* | *நீங்களும் உடலழகு பெறலாம்* |
| *7.* | ,, | *கூடி விளையாடும் குழு விளையாட்டுக்கள்* |
| *8.* | *1972* | *விளையாட்டு விழா நடத்துவது எப்படி?* |
| *9.* | ,, | *நல்ல நாடகங்கள்* |
| *10.* | ,, | *விளையாட்டு விருந்து* |
| *11.* | *1973* | *நல்ல கதைகள் 1,2,3, (மூன்று பாகங்கள்)* |
| *12.* | *1975* | *கடவுள் கைவிட மாட்டார்* |
| *13.* | ,, | *மனைவியுடன் மகிழ்ச்சியாக வாழ்வது எப்படி?* |
| *14.* | ,, | *பாதுகாப்புக் கல்வி* |
| *15.* | *1976* | *உடலழகுப் பயிற்சி முறைகள்* |
| *16.* | ,, | *சதுரங்கம் விளையாடுவது எப்படி?* |
| *17.* | ,, | *மென்பந்தாட்டம்* |
| *18.* | ,, | *விளையாட்டுகளுக்குப் பெயர் வந்தது எப்படி?* |
| *19.* | ,, | *கேரம் விளையாடுவது எப்படி?* |

| | | |
|---|---|---|
| *20.* | *1977* | அனுபவக் களஞ்சியம் |
| *21.* | ,, | கைப் பந்தாட்டம் |
| *22.* | ,, | பெண்களும் பேரழகு பெறலாம் |
| *23.* | *1978* | விளையாட்டு ஆத்திச்சூடி |
| *24.* | ,, | விளையாட்டு அமுதம் |
| *25.* | ,, | விளையாட்டு உலகம் |
| *26.* | ,, | விளையாட்டுச் சிந்தனைகள் |
| *27.* | ,, | ஒரு நூறு சிறு விளையாட்டுக்கள் |
| *28.* | ,, | விளையாட்டுக்களில் வினாடி - வினா- விடை |
| *29.* | ,, | கூடைப் பந்தாட்டம் |
| *30.* | ,, | வளைகோல் பந்தாட்டம் |
| *31.* | ,, | பூப்பந்தாட்டம் |
| *32.* | ,, | கோ கோ ஆட்டம் |
| *33.* | ,, | அர்த்தமுள்ள விளையாட்டுக்கள் |
| *34.* | *1979* | விளையாட்டுக்களில் விநோதங்கள் |
| *35.* | ,, | பண்பு தரும் அன்புக் கதைகள் |
| *36.* | ,, | நவனின் நாடகங்கள் |
| *37.* | ,, | Quotation on Sports and Games |
| *38.* | *1980* | விளையாட்டுக்களின் கதைகள் (தேசிய விருது பெற்ற நூல்) |
| *39.* | ,, | விளையாட்டு உலகில் வீரக் கதைகள் |

| | | |
|---|---|---|
| 40. | 1980 | விளையாட்டுக்களில் சொல்லும் பொருளும் |
| 41. | ,, | விளையாட்டு உலகில் சுவையான சம்பவங்கள் |
| 42. | ,, | வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள் |
| 43. | ,, | நல்ல பாடல்கள் |
| 44. | ,, | கால் பந்தாட்டம் |
| 45. | ,, | வளைகோல் பந்தாட்டம் |
| 46. | ,, | வாழ்க்கைப் பந்தயம் |
| 47. | ,, | உடல் எடையும் உணவுக் கட்டுப்பாடும் |
| 48. | 1981 | நல்ல நல்ல கதைப் பாடல்கள் |
| 49. | ,, | செங்கரும்பு (கவிதைத் தொகுப்பு) |
| 50. | 1982 | சுவையான நாடகங்கள் |
| 51. | ,, | சடுகுடு ஆட்டம் |
| 52. | ,, | How to break ties in Sports and Games |
| 53. | ,, | தமிழ்நாட்டுச் சடுகுடுப் பாடல்களும் சடுகுடு ஆட்டமும் (தமிழக அரசு பரிசு பெற்ற நூல்) |
| 54. | ,, | சிந்தனைச் சிற்றுலா |
| 55. | ,, | நீங்களும் இளமையாக வாழலாம் |
| 56. | 1983 | வளையப் பந்தாட்டம் |
| 57. | ,, | கிரிக்கெட் ஆட்டத்தின் கதை |
| 58. | 1984 | குழந்தைகளுக்கான உடற்பயிற்சியும் விளையாட்டும் |
| 59. | ,, | உடலழகுப் பயிற்சி முறைகள் |
| 60. | ,, | நீங்களும் ஒலிம்பிக் வீரராகலாம் |

| | | |
|---|---|---|
| 61. | ,, | உபயோகமுள்ள உடல்நலக் குறிப்புகள் |
| 62. | 1985 | விளையாட்டுத் துறையில் பொது அறிவு நூல் |
| 63. | ,, | வானொலியில் விளையாட்டுக்கள் |
| 64. | ,, | பெண்கள் விளையாடினால் என்ன ஆகும்? |
| 65. | ,, | நீங்களும் உயரமாக வளரலாம் |
| 66. | 1986 | நீங்களும் வலிமையோடு வாழலாம் |
| 67. | ,, | நீங்களும் நோயில்லாமல் வாழலாம் |
| 68. | ,, | இந்தியாவில் ஆசிய விளையாட்டுக்கள் |
| 69. | ,, | நமக்கு நாமே உதவி |
| 70. | ,, | தெரிந்தால் சமயத்தில் உதவும் |
| 71. | ,, | சிந்தனைப் பந்தாட்டம் |
| 72. | 1987 | உலக நாடுகளில் உடற்கல்வி |
| 73. | ,, | அகில உலக ஓடுகளப் போட்டி விதிமுறைகள் |
| 74. | ,, | நீங்களும் மகிழ்ச்சியோடு வாழலாம் |
| 75. | 1988 | இந்திய நாட்டுத் தேகப் பயிற்சிகள் |
| 76. | ,, | விளையாட்டுத்துறையில் ஆங்கிலம் தமிழ் அகராதி |
| 77. | ,, | விளையாட்டுத்துறையில் கலைச் சொல் அகராதி |
| 78. | ,, | தெய்வ மலர் |
| 79. | ,, | 1984ல் ஒலிம்பிக் பந்தயங்கள் |
| 80. | ,, | பயன்தரும் யோகாசனப் பயிற்சிகள் |
| 81. | ,, | இந்திய நாட்டுத் தேகப் பயிற்சிகள் |

82. ,, கிரிக்கெட் ஆட்டத்தில் கேள்வி-பதில்

83. 1989 உடற்கல்வியைக் கற்பிக்கும் முறைகள்

84. ,, பொழுதுபோக்கு விளையாட்டுகள்

85. ,, சியோல் ஒலிம்பிக் பந்தயங்கள்

86. ,, Physical Fitness and Health

87. ,, மறைந்து கிடக்கும் மனித சக்தி

88. ,, தேகத்தை தெரிந்து கொள்வோம்

89. 1990 வள்ளுவரின் விளையாட்டுச் சிந்தனைகள்

90. 1994 உடற்கல்வி என்றால் என்ன?

91. 1995 பேரின்பம் தரும் பிராணாயாமம்

92. 1996 அவமானமா? அஞ்சாதே!

93. ,, உடலுக்கு அழகு தரும் எடைப் பயிற்சிகள்

94. 1997 General Knowledge in Sports and Games

95. ,, பலம் தரும் பத்து நிமிடப் பயிற்சிகள்

96. 1998 நலமே நமது பலம்

97. 1999 விளையாட்டுத் துறையில் தமிழிலக்கிய வளர்ச்சி

98. ,, குறளுக்குப் புதிய பொருள்

99. ,, குண்டான உடம்பைக் குறைப்பது எப்படி?

100. ,, முக அழகைக் காப்பது எப்படி?

101. 6-ம் வகுப்பு உடல்நல உடற்கல்வி பயிற்சிப் பாடநூல்

102 7-ம் வகுப்பு உடல்நல உடற்கல்வி பயிற்சிப் பாடநூல்

# 29. சந்தர்ப்பங்களும் சம்பவங்களும்

ஏறத்தாழ 100 புத்தகங்களை எழுதி பதிப்பித்ததைத் தொடர்ந்து இன்னும் எழுதப்பட்டு அச்சுக்கு வராத பல கையெழுத்துப் பிரதிகளும் இன்னும் கைவசம் நிறைய உள்ளன.

அத்தனைத் தலைப்புக்களையும் நானாகவே யோசித்தேன் என்று கூறினால் அது பொய்.

நானாகவே யோசித்தது ஒரு கால் பகுதி; மீதியெல்லாம், சுற்றுப்புற சூழ்நிலையால் எழுதியே ஆக வேண்டும் என்று ஏற்பட்ட அனுபவங்கள்.

எழுத முடியாது என்று பலர் என்னிடம் வந்து சவால் விட்டதற்காக எழுதப்பட்டவைகள்.

இப்படி புத்தகங்களை எழுதினால் தான் எல்லோருக்கும் பயன் கிடைக்குமென்று எண்ணியே இரவு பகலாக சிந்தித்து எழுதப்பட்ட நூல்களும் பல.

ஆகையால், என்னை எழுதத் தூண்டிய நிகழ்ச்சிகளே அதிகம். என்னை எழுத வைத்த சூழ்நிலைகளே அதிகம்.

கதை, கவிதை, நாடகங்கள், சிறுகதை என்று எழுத ஆரம்பித்த என்னை விளையாட்டுத் துறையில் எழுத்தாளராக

ஆக்கியவர், எனது மதிப்பிற்குரிய, பெருமைக்குரிய பேராசிரியர் **எஸ். குழந்தை நாதன்** அவர்கள். நல்ல எழுத்தாளரும் ஆவார்.

முதல் புத்தகத்தை படித்துப் பார்த்து, உடற்கல்வித் துறையைச் சார்ந்த ஆசிரிய ஆசிரியைகள், பொதுமக்கள் பலர், இந்த விளையாட்டுக்களின் வரலாறும் வழிமுறைகளும் கூறும் புத்தகம், மிகவும் எளிமையாக இருக்கிறது. புரிந்து கொள்ளும் படியாக, பயன்படும் வகையில் அமைந்திருக்கிறது.

அதுபோலவே, ஆங்கிலத்தில் எழுதப் பட்டிருக்கின்ற விளையாட்டுக்களின் விதிகளை, தமிழிலே எழுதித்தாருங்கள் என்று விண்ணப்பித்த வேண்டுகோளை நிறைவேற்றுவதற்காக எழுதிய நூலே விளையாட்டுக்களின் விதிகள் ஆகும்.

இனிமேல் எழுதத் தலைப்பே இல்லை என்று எனக்குள்ளே ஒருவித நிறைவு வந்து புகுந்து விட்டது. வேறு இல்லையே என்று விதந்து போய் வாழ்ந்த போதுதான் உடற்பயிற்சி பள்ளி ஒன்றைத் தொடங்கினேன் வருமானத்திற்காக.

வந்தவர்கள் கேட்ட சந்தேகங்களுக்கெல்லாம், பதில் கூறப் போய், அதுவே ஆழ்மனதிலும் ஆழப் பதிந்து, இந்த விடைகளையே நூலாக எழுதினால் என்ன என்று எண்ணச் செய்ததன் விளைவே, **நீங்களும் உடலழகு பெறலாம்** என்ற நூலை எழுத வைத்தது.

ஆண்களுக்கு மட்டும் உடற்பயிற்சி நூலா? பெண்களுக்கு ஏன் கூடாது என்று ஒரு சில பெண் அன்பர்கள் கேட்ட கேள்விக்குக் கிடைத்த நூல்தான் **பெண்களும் பேரழகு பெறலாம்** என்பதாகும்.

உடற்பயிற்சி பள்ளிக்கே வந்து, உடற்பயிற்சி செய்வதால் என்ன லாபம்? செய்யாதவர்கள் என்ன சீரழிந்து விட்டார்கள்?

செய்தவர்கள் என்ன சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறார்களா? என்று எகத்தாளம் பேசிய இரண்டும் கெட்டான் அன்பர்களுக்கு, புரிவதற்காக எழுதப்பட்ட நூல்தான் **எதற்காக உடற்பயிற்சி செய்கிறோம்?**

இந்தக் காலக் கட்டத்திற்குள்ளே, தமிழில் விளையாட்டு உடற்பயிற்சிகள் வெளி வந்த விவரத்தைத் தெரிந்து கொண்ட பொதுமக்கள், நான் போகும் இடங்களிலும் எனது வீட்டிற்கு வருகிற போதும், அவரவர்கள் விரும்புகிற விளையாட்டைப் பற்றி தமிழில் எழுதினால், தமிழ்ச்சமுதாயத்திற்கே உதவியாக இருக்கும் என்று கோரிக்கை வைத்தனர்.

அந்த லட்சியத்தின் அடிப்படையில்தான் விளையாட்டுக்களின் வரிசை என்று தொடங்கி எழுதினேன்.

**கால்பந்தாட்டம், கைப்பந்தாட்டம், வளைகோல் பந்தாட்டம், பூப்பந்தாட்டம், மென்பந்தாட்டம், வளையப் பந்தாட்டம், கூடைப் பந்தாட்டம், கேரம் விளையாடுவது எப்படி?, சதுரங்கம் விளையாடுவது எப்படி?, சடுகுடு ஆட்டம்** போன்ற நூல்கள் வெளிவந்தன.

விளையாட்டுக்களின் உண்மையான நோக்கம், நுண்மையான திறன்கள், மேன்மையான கொள்கைகளை எல்லாம் விளக்கினால் தானே மக்கள் புரிந்து கொள்வார்கள். மனம் விரும்பி பங்கு பெறுவார்கள் என்ற எண்ணத்தின் வெளிப்பாடாக, பல இலக்கிய நயம் நிறைந்த நூல்களை உருவாக்கினேன். **விளையாட்டுகளுக்குப் பெயர் வந்தது எப்படி? விளையாட்டுத்துறையில் சொல்லும் பொருளும்; விளையாட்டுச் சிந்தனைகள்; விளையாட்டு உலகம்; விளையாட்டு அமுதம்.**

மக்களுக்கு வாழ்வில் மகிழ்ச்சி நிறைய கிடைக்க வேண்டும், தொடர வண்டும் என்றால், நம்பிக்கையை

ஊட்டுகின்ற மனோதத்துவ நூல்கள் தேவை என்று பலர் கொடுத்த அறிவுரையின் படி எழுதப்பட்ட நூல்களே நீங்களும் என்று தொடங்குகின்ற வரிசை.

**நீங்களும் உடலழகு பெறலாம், நீங்களும் வலிமையோடு வாழலாம், நீங்களும் நோயில்லாமல் வாழலாம், நீங்களும் மகிழ்ச்சியாக வாழலாம், நீங்களும் இளமையோடு வாழலாம், நமக்கு நாமே உதவி, அவமானமா அஞ்சாதே!**

மகிழ்ச்சி வேண்டும் என்றால் வலிமையான உடல் வேண்டும் என்பதற்காக, பயிற்சி செய்கிற விளக்க நூல்களை எழுதினேன். **தொந்தியைக் குறைக்க சுலபமான வழிகள், பலம் தரும் பத்து நிமிடப் பயிற்சிகள், பேரின்பம் தரும் பிராணாயாமம், பயன்தரும் யோகாசனப் பயிற்சிகள், குழந்தைகளுக்கான உடற்பயிற்சியும் விளையாட்டும்.**

இதற்கும் மேலே என்னுள்இருந்த இலக்கிய தாகமும் வேகமும், பல புதிய சிந்தனைகளை எழுப்பி விட்டன. **வாழ்க்கைப் பந்தயம், வள்ளுவரின் விளையாட்டுச் சிந்தனைகள், வானொலியில் விளையாட்டுக்கள், விளையாட்டுக்களின் கதைகள்** என்றெல்லாம் இலக்கியப் பணியைத் தொடர்ந்தேன்.

எல்லாம் தமிழில் கற்றுத்தர வேண்டும் என்பது தமிழக அரசின் தாரக மந்திரமாக விளங்குகிறது. ஒவ்வொரு துறையிலும், மாணவர்களுக்குத் தமிழில் கற்றுத்தரும் பாடநூல்கள் எழுதப்பட வேண்டும் என்று அரசு ஒதுக்குகிற தொகை பல கோடிகள். அதற்காக அமைக்கப்பட்ட ஆசிரியர் குழுக்களும் அநேகம் இருந்தாலும், தேவை பூர்த்தி பெறவில்லை என்ற ஆதங்கம் தமிழ் விரும்பிகள் நெஞ்சம் எல்லாம் நிறையவே இருந்தது. இருக்கிறது.

கவனிப்பாரற்று கிடக்கும் விளையாட்டுத் துறைக்கு அந்தக் குறை ஏற்படக் கூடாது, அவமானம் நேர்ந்து விடக் கூடாது என்பதற்காக, நான் உழைத்த உழைப்பும், மேற்கொண்ட முயற்சிகளும், சற்று அதிகமே.

இன்று உடற்கல்வித் துறையினர் தமிழில் பாடங்களைக் கற்றுத் தேர்வு எழுதுகின்றனர் என்றால், அதற்குத் தேவையான எல்லா நூல்களையும் எழுதித் தந்திருக்கிறேன். ஆன செலவு அதிகம். வரும் தொகையோ குறைவு.

| **ஆங்கிலத் தலைப்புகள்** | **தமிழ் நூல்கள்** |
|---|---|
| History of Physical Education | உலக நாடுகளில் உடற்கல்வி |
| Principles of Physical Education | உடற்கல்வி என்றால் என்ன? |
| Anatomy and Physiology | தேகத்தைத் தெரிந்து கொள்வோம் |
| Health and First Aid | நலமே நமது பலம் |
| Methods in Physical Education | உடற் கல்வியை கற்பிக்கும் முறைகள் |
| Track and Field | அகில உலக ஆடுகளப் போட்டி விதிமுறைகள் |
| Rules of Sports and Games | விளையாட்டுக்களின் விதிகள் |
| Minor Games | ஒரு நூறு சிறு விளையாட்டுக்கள் |

புதிது புதிதாக இப்போது ஏற்படுத்தப்படுகிற பாடத்திட்டங்களுக்கு ஏற்ப, எனது புத்தகம் எழுதுகிற முயற்சிகளும் தொடர்ந்து கொண்டிருக்கின்றன.

திருக்குறள் தோன்றிய காலந்தொட்டே, அதற்குரிய விரிவுரை எழுத விரும்பிய விவரமுள்ள உரை ஆசிரியர்கள், ஆயிரக்கணக்கான அறிஞர்கள், முயற்சிகளை மேற் கொண்டிருக்கின்றனர். இன்றும் பல புதிய உரையாசிரியர்கள் புறப்பட்டுக் கொண்டுதான் உள்ளனர்.

உடலியல்கருத்துக்களைத்தான், வள்ளுவர் தமது குறட்பாக்களில் வடித்துத் தந்திருக்கிறார்கள். வாழ்க்கை அமைப்புகளாகிய **ஒழுக்கம், வழக்கு, தண்டனை** முறைகளை, முப்பெரும் பகுதியாகப் பிரித்துப் பாடியிருக்கிறார்கள் எனும் புதிய நூலை எழுதி வெளியிட்டிருக்கிறேன். **குறளுக்குப் புதிய பொருள்** என்று பெயர் சூட்டியிருக்கிறேன்.

புதிய முயற்சியாக, விளையாட்டுத்துறை கலைச் சொல் களஞ்சியம், (Sports Dictionary) விளையாட்டுத் துறை வரலாற்றுக் கலைக் களஞ்சியம் (Encyclopedia of Sports and Games)

உடல், நோய், மருத்துவம் சார்ந்த ஆங்கிலம் தமிழ் அகராதி, (Physical & Medical Dictionary) போன்ற நூல்கள் எல்லாம் 1999ம் ஆண்டு வெளிவர இருக்கின்றன. தற்போது அச்சில்.

விளையாட்டுத்துறையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி என்னும் எனது நூலின் முதல் பாகம் தான் நிறைவு பெறுகிறது.

இரண்டாம் பாகம் தொடர்ந்து வர இருக்கிறது.

நான் வாழ்கிற காலம் வரை, எனது விளையாட்டுத் துறை

இலக்கியப் பணி, தொய்வடையாமல் தொடரும். அதற்காக, என்னை உடலால் தயார் செய்து கொள்கிறேன். மனதால், நிறைவு கொள்கிறேன். பெருளைத் தேடி பதிப்பகப் பணியை விடாமல் போற்றித் தொடர்கிறேன்.

செக்ஸ், சினிமா, அரசியல் இருந்தால்தான் பத்திரிக்கைகள் விற்பனையாகும். விடாமல் வெளியாகும் என்ற கருத்துள்ள இந்தியத் திருநாட்டில், தாய்த் தமிழ் மண்ணில், இந்த மூன்றுமே இல்லாமல், உடல், மனம், ஒழுக்கம், பயிற்சி, பண்பாடு போன்ற கருத்துக்களை எழுதி 1977ல் தொடங்கி, இன்று வரை வெற்றிகரமாக **விளையாட்டுக் களஞ்சியம்** என்ற மாத இதழைத் தொடங்கி தொடர்ந்து இலக்கியப் பணியாற்றி வருகிறேன்.

தமிழுக்கு இது முதல் விளையாட்டுத் துறை மாத இதழ் என்று கூறுவதில் பெருமை கொள்கிறேன்.

விளையாட்டுக் களஞ்சியம், விளையாட்டு பத்திரிக்கை இது என்று அனைவர்ராலும் பாராட்டப்படுகின்ற இலக்கிய இதழாக வெளிவந்து கொண்டிருக்கிறது.

எத்தனை எழுதினாலும், எவ்வளவு செய்தாலும், எதுவும் செய்யவில்லை என்ற எண்ணம்தான் என்னுள் மேலோங்கி இருக்கின்றது.

கடினமான உழைப்பு என்றாலும், கொஞ்சம் கூட காலத்தை வீணாக்காமல், உடல் களைத்துப் போகும் அளவுக்கு எழுதுகிறேன். சோர்ந்து போகிற உடலும், சரிந்து போகிற மனமும், தீர்ந்து போகிற கருத்துக்களும் தூங்கி விழித்தவுடன், புத்துணர்ச்சி பெற்றுக் கொள்கின்றன.

புதுத் தெம்பு புறப்பட்டு விடுகிறது. இதமான மனம் இலட்சியத்தைக் காட்டுகிறது. என்னைத் தூண்டி மேலும் இரட்டிப்பாக வேலை வாங்கிக் கொள்கிறது. வற்றாத ஊற்றாக

விளையாட்டுச் சிந்தனைகள் வந்து கொண்டேயிருக்கின்றன.

தமிழ் கூறும் நல்லுலகத்தில் வாழும் அன்பர்களும் நண்பர்களும் என்னிடம் அன்பு காட்டுவதும், ஆதரவைக் கூட்டுவதும், உற்சாகப் படுத்துவதும் எனது இலக்கியப் பணிக்கு வேகம் கூட்டுகிறது. அவர்களை எல்லாம் வாழ்த்தித் துதிக்கிறேன். என்னை நன்றாகத் தமிழ் செய்ய வைத்த இறைவனை வணங்கி, இலக்கிய வளர்ச்சி கூறும் வரலாற்றின் முதல் பாகத்தை நிறைவு செய்கிறேன்.

**தொடரும**

மீண்டும் உங்களை சந்திக்கிறேன்.

விளையாட்டு இலக்கியப் பணியில்

**டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா.**

# விளையாட்டுத் துறையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி














பல்கலைப் பேரறிஞர்

டாக்டர் எஸ். நவராஜ் செல்லையா

**M.A., M.P.Ed., Ph.D., D.Litt., D.Ed., FUWAI**






